என்றும் உங்களுடன் புத்தகம்-1

# மங்கையர் மலர்

ஆகஸ்ட் 2009 258 பக்கங்கள் ரூ.20/- MANGAYAR MALAR





# இதயத்துக்கு இனி இல்லை தொல்லை !



EECP - அறுவை இல்லா பைபாஸ் சிகிச்சை

## Neomed Hospital

Non-Surgical Treatment Center for Angina, Heart Attack & Heart Failure Problems
(In Technical Collaboration with Arterial Disease Clinic (ADC) England)

வந்துவிட்டது. அறுவை இல்லா பைபாஸ் சிகிச்சை. அறுவை சிகிச்சை இன்றி நெஞ்சுவலி, மாரடைப்பு, இருதய பலவீனம் போன்ற பிரச்சனைகளை போக்கும் அற்புத மாற்று சிகிச்சை E.E.C.P (Enhanced External Counter Pulsation) / கிலேசன் சிகிச்சை (Artery Clearance Therapy). அமெரிக்கா, ஜெர்மனி போன்ற 26 நாடுகளில் வெற்றிகண்ட இந்த அறுவை இல்லா இயற்கை பைபாஸ் சிகிச்சையினால் சுமார் 18.5 லட்ச மக்கள் பயன் அடைந்துள்ளனர். இ.இ.சி.பி சிகிச்சை அமெரிக்காவில் உள்ள Food and Drug Administration (FDA) அங்கீகாரம் பெற்றுள்ளது. இச்சிகிச்சை முறை தற்போது இந்தியாவில் பல முன்னிலை மருத்துவமனைகளில் அறிமுகப்படுத்தப் பட்டிருக்கிறது.

ஓசோன் / கிலேசன் சிகிச்சை சிக்கல் இல்லாதது. ஆனால் சிக்கனமானது. இந்த சிகிச்சைகள் மூலம் மேலும் Stroke, Chronic Backpain, Parkinsonism, Cancer, Diabetic Gangerene and Foot Ulcers போன்ற நோய்களும் குணமாக்கப்படுகிறது. இதய சம்மந்தப்பட்ட நோய் உள்ளவரா நீங்கள்? தயக்கமின்றி நியோமெட் வாருங்கள். இ.இ.சி.பி / ஓசோன் / கிலேசன் சிகிச்சை மூலம் நிவாரணம் பெற்று நிம்மதியுடன் வாழுங்கள்.

- 70% - 100% வரை இதய அடைப்புகளுக்கு சிகிச்சை அளிக்கப்படுகிறது.
- வலி இல்லை.
- அறுவை சிகிச்சை இல்லை.
- நீண்ட நாட்கள் மருந்து இல்லை.
- மருத்துவமனையில் தங்கி சிகிச்சை பெற வேண்டிய அவசியம் இல்லை.



NEOMED HOSPITAL
CARE FOR BETTER LIVING

Timing : Weekdays 9 am to 6 pm. Sunday Holiday

### NUCURA-PEMF மூலம் நவீன சிகிச்சை

- நாள் பட்ட மூட்டுவலியா ?
- மூட்டு தேய்மானமா ?
- இடுப்பு வலியா ?
- கழுத்து வலியா ?
- தோள்பட்டை வலியா ?



கவலை வேண்டாம் அறுவை இல்லா NUCURA-PEMF மூலம் நவீன சிகிச்சை

**Trichy** : No. 52, *General* Bazaar Street, Tennur, Trichy. Ph : 0431-2791051, 2791052.
**Chennai** : 2181, L-Block, 12th Main Road, Anna Nagar, Ph : 044-2620 1147 / 2620 0882. Fax : 2620 0631
**Madurai** : 11, Lakeview Road, Opp. Sundaram Theatre, K.K. Nagar, Ph : 0452-2581414, 2581515.
**Salem** : 127 / 1, Varalakshmi Towers, Gandhi Road, Ph : 0427-2311818, 2311819.

www.neomedhospitals.com



# 75 ஆல் இன் ஒன் சமையல்!



## பக்கங்கள்...







## 156 பெப்பர் பாப்கார்ன்!



## 28 ஜெயஸ்ரீ ராஜ் சிறுகதைப் போட்டி முதல் பரிசுக் கதை!

# யூத் எடிஷன் பக்கங்கள்

30 போட்டிகள் உங்களுக்காகவே




# பகவான் பாபா!



அட்டையில்...
கீர்த்திசாவ்லா
படம் : 'சன்ஷைன்'
மனோஜ் கிருஷ்ணா

# ரூ.5,000 பரிசு

ஆன்மிகப் போட்டி 97



137
# கலக்குது பாருங்க ஸ்டைலு!


...ளிர் மாத இதழ்!

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர்

மலர் : 29 இதழ் : 7 ஆகஸ்ட் 2009

# ஒரு வார்த்தை!

தமிழ் டீ.வி. சேனல் ஒன்றின் மிகப் பிரபலமான அந்த 'ரியாலிடி ஷோ'வை நான் பார்க்க நேர்ந்தது. தலைப்பு : காதல்.

நள்ளிரவு முழுக்க செல்ஃபோனில் பேசி, விடியற்காலையில் தனது காதலை வெளிப் படுத்தியது, காதலனை கணவனாகவே நினைத்துப் பழகியது, அம்மாவே ஊக்குவித் தது, காதலன் சந்தேகப்பட்டது, அழ வைத்தது, வகுப்பறையில் பலர் முன்னிலையில் காத லனை செருப்பால் அடித்தது, பலமுறை தற் கொலைக்கு முயன்றது, மனநல ஆலோசக ரிடம் சிகிச்சை பெற்றது, தான் இன்றைக்கும் அவனைக் காதலித்தாலும் அவனைக் கல் யாணம் மட்டும் செய்து கொள்ள மாட்டேன் என்று உறுதியாகச் சொன்னது... எல்லாவற் றையுமே தயங்காமல் பகிர்ந்து கொண்டனர்.

அறியாத வயது... புரியாத வயசு... ஏதோ ஓர் உணர்ச்சிக் கொந்தளிப்பில் அந்த மாடர்ன் யுவதிகள் அப்படிப் பேசிவிட்டார்கள் என்று நினைத்தால், அடுத்து பேசிய நாற்பது ப்ளஸ் குடும்பப் பெண்ணோ, ஒரு படி மேலே போனார்!

தன் தாய்மாமனைக் காதலித்தது, இன் றைக்கும் உள் மனத்தில் அவரை மறக்க முடியாமல் தவிப்பது பற்றியெல்லாம் மிகவும் உருக்கமாகச் சொன்னார்.

''அம்மா... உனக்கு நடந்ததைச் சொல் லும்மா!'' என்று பிள்ளைகளே தன்னை அனுப்பி வைத்ததாக அவர் சொன்னதும் 'படபட' என்று கையொலி! பரந்த உள்ளம் படைத்த அவரது கணவருக்கும் பாராட்டுக் கரவொலி!

அந்த நிகழ்ச்சியைப் பார்த்த நேயர்கள் அனைவரும் ''த்சொ... த்சொ!'' என்று உச்சு கொட்டி விட்டு, பால் குடித்துவிட்டு, டீ.வி.யை அணைத்துவிட்டு படுத்திருப்பார்கள். ஆனால், என்னால்தான் தூங்க முடியவில்லை...

இந்த நிகழ்ச்சியில் பங்கு கொண்டு பேசிய பெண்களுக்கு, நிச்சயம் ஒரு குடும்பம் இருக்கும்... அக்கம் பக்கத்தினர், நண்பர்கள், உறவினர்கள், அலுவலக ஆட்கள் என நிறையப் பேர் இந்நிகழ்ச்சியைப் பார்த்திருக்கக் கூடும். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அந்தக் குடும்பத்தின் கௌரவம் என்னாகும்? அந்தப் பெண்ணின் அப்பாவையோ, சகோதர னையோ, யாராவது வில்லங்கமாக விசாரித் தால், அவர்களுடைய ரியாக்ஷன் எப்படியிருக் கும்? நாளைக்கு இந்தப் பெண்களை சம்பந்தம் பேச யாராவது வந்தால், அவர்களிடம் இந்த நிகழ்ச்சி பற்றி அபிப்ராயம் கேட்கப்படுமா?

ஏதேதோ கேள்விகள் என்னைக் குடைந்தன.

இப்படியெல்லாம் கன்னாபின்னா என்று






என்றும் உங்களுடன்

**மங்கையர் மலர்**

தமிழிலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
ஆசிரியர் பொறுப்பேற்று
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

பொறுப்பாசிரியர் : **அனுராதா சேகர்**

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
mangayarmalar@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.mangayarmalaronline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.250/-
வெளிநாடு : ரூ.2,200/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின்
உண்மைத் தன்மைக்கு
கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

கேமிரா முன்பு இவர்களை பேசத் தூண்டுவது எது?

எப்படியாவது டி.வி.யில் தலையைக் காட்டிடணுங்கிற அல்ப ஆசைதான். இதில் தப்பில்லைதான்.

ஆனால், ஷூட்டிங் சமயத்தில் நடப்பது என்ன? ஒரு மேடையும் மைக்கும் கையில் கிடைச்சதும், ஓர் உணர்ச்சிப் பரப்பில் பேச ஆரம்பிக்கிறார்கள்.

''வாவ்! சூப்பர்! ஹேட்ஸ் ஆஃப்'' என்றெல்லாம் சடச்சட பாராட்டப்பட்டு, கைத்தட்டல்களும் கிடைத்ததும், போதை மெள்ள ஏற ஆரம்பிக்கிறது.

''அப்புறம்... என்ன நடந்தது? ரியல்லி? கமான்! ஓப்பனா பேசுங்க!'' என்று உசுப்பல்கள் தொடரவும், கட்டுப்பாட்டை இழந்து எமோஷனலாகி, அடக்க முடியாமல் கொட்டித் தீர்த்து விடுகிறார்கள். நிகழ்ச்சிக்கு முன் சொல்ல நினைத்தது ஒன்று! நிகழ்ச்சியில் சொல்லி முடித்தது ஒன்று!

**க**லந்துரையாடல், பலவிதமாக, பல தளங்களில் நடைபெற்றாலும், மிகப் பரபரப்பாக உள்ளவை மட்டுமே தொகுக்கப்பட்டு வெளியாகும். இந்த அடிப்படை ஞானம் பலருக்கு மிஸ்ஸிங் என்பதால், ஃபைனல் எடிட்டிங்கைப் பார்த்து இந்தப் பெண்கள் மிகப் பெரிய மன உளைச்சலுக்கு ஆளாகிறார்கள் என்பதே நிஜம். டி.வி.யில் முகம் தெரிய வேண்டும் என்ற சின்ன ஆசை, எப்படிப்பட்ட அவமானத்தில் முடிகிறது என்பதை நம்மாலும் ஊகிக்க முடிகிறது.

பெண்களுக்கு நிச்சயம் பேச்சுரிமை வேண்டும். தங்கள் பிரச்னைகளைப் பகிரவும், உரிமைகளைப் பெறவும் அவர்கள் பேசித்தான் ஆக வேண்டியுள்ளது. ஆனால் எங்கே, யாரிடம், எப்போது, எதற்காக, என்னென்ன பேசலாம் என்ற வரைமுறையும் இருக்கிறதல்லவா! பயனில்லாத, சபையறியாத இந்த வீண் பேச்சால் என்ன பயன்?

டி.வி. மோகத்தால் தூண்டப்படும் இந்தப் பெண்களின் அசட்டுத்தனத்தை, மீடியா காசாக்கிக் கொள்கிறது என்பதைத் தவிர வேறு பெரிய பயன் ஏதுமில்லை. அதைவிட மௌனமே மேல்!

அனுராதா நடராஜன்

தென் இந்தியாவில் கிருஷ்ணன் கோயில்கள் பல இருக்கின்றன. பாலகிருஷ்ணன், குழலூதும் கண்ணன், ருக்மிணி சத்யபாமாவுடன் கல்யாண கோலம்... என்று பல தோற்றங்களில் அருள் புரிகிறார்.



அர்ச்சகரும் 'ருக்மிணி சத்ய பாமா சமேத ஸ்ரீ கிருஷ்ணாய நம' என்று சொல்லி அர்ச்சனையை முடிப்பார். 'ராதா' என்ற பெயர் அநேகமாக வருவது இல்லை. ஆனால், சிறுகுழந்தைக்குப் பெயர் வைக்கும்போது ''ருக்மிணி கிருஷ்ணன்'' என்றோ ''சத்யபாமா கிருஷ்ணன்'' என்றோ வைப்பதில்லை. அங்கு 'ராதா' வந்து விடுகிறாள்... ராதா மாதவன், ராதா கிருஷ்ணன் என்று பல பெயர்களை நாம் பார்க்கிறோம்.

ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களிலும் ராதாவைப் பற்றி வரவில்லை என்றே நினைக்கிறேன். ஆனால், வடநாட்டிலோ ருக்மிணி சத்யபாமாவைவிட ராதாவுக்குத்தான் மகத்துவம் அதிகம்.

மதுரா, பிருந்தாவன், துவாரகா போன்ற இடங்களில் எங்கு சென்றாலும் ''ராதே கிருஷ்ணா'' நாமம்தான். தமிழ்நாட்டில் மிகவும் புகழ் வாய்ந்த மன்னார்குடி ஸ்ரீராஜகோபாலஸ்வாமியின் திருக்கோயிலிலும் மதுரை மதன கோபால ஸ்வாமி கோயிலிலும் ராதாவைக் காண முடிவதில்லை. இதேபோல் கேரளாவில் ஸ்ரீகுருவாயூரப்பன் கோயில், கர்நாடகாவில் உடுப்பி ஸ்ரீகிருஷ்ணன் கோயிலிலும் ராதா இல்லை; ஆனால் வடநாட்டில் 'பிர்லாமந்திர்' கோயில்களில் ராதா கிருஷ்ணன் பளிங்குச் சிலைகளைக் காணலாம்.

கண்ணன், ஆவணி ரோஹிணி கிருஷ்ணபக்ஷ அஷ்டமியில் பிறந்தான். ராதாவோ சுக்ல பக்ஷ அஷ்டமியில் பிறந்தாள். கண்ணன் நடு இரவில் பிறந்தான்; ராதா பகல் பன்னிரண்டு மணிக்கு மதுராவில் பிறந்தாள். அவளது தந்தையின் பெயர் விருஷபானு. தாயின் பெயர் கீர்த்திகா. அவர்கள் இருந்த இடம் கோவர்த்தன மலைக்கு அருகில் பர்சானா என்ற கிராமம். கிருஷ் ணன் பிறந்த தினத்தை 'கோகுலாஷ்டமி என்று கொண்டாடுவது போல வடநாட்டவர்கள் ராதை பிறந்த தினத்தை 'ராதாஷ்டமி' யாகக் கொண்டாடுகிறார்கள்.

கிருஷ்ணனின் நட்சத்திரம் ரோஹிணி. ராதையின் நட்சத்திரம் விசாகம். எப்படி ஹனுமான் கோயிலில் 'ராமா ராமா' என்றால் ஹனுமார் வந்துவிடுகிறாரோ அதே போல் மதுரா, பிருந்தாவனத்தில் ''ராதே ராதே' என்று சொன்னால் கண்ணன் ஓடி வந்து நிற்பாராம். கிருஷ்ணரின் இடது பாகத்திலிருந்து தோன்றியவள்தான் ராதை என்கின்றனர்.

கண்ணனின் ஹலாதினி சக்தி என்று சொல்லப்படும் ஆன்மிகச் சக்தியை அளிப்பவளே ராதைதானாம், கண்ணன் சொல்கிறார். ''ராஸப்தம் குர்வத ராஸ்தோ

# ராதா...

ததாமி பக்திம் உத்தமம்

தா ஸப்தம் குர்பத பஸ்சாத யானு ஸ்ரவண் லோபத''

''எவனது வாயில் 'ரா' சப்தம் வருகிறதோ அவனுக்குச் சிறந்த பிரேமபாவ பக்தியை அளிக்கிறேன்.



# காதல் வராதா?

ஆனால் 'தா' சப்தம் கேட்கவும் அந்தப் பெயரை முழுமையாகக் கேட்கவும் பின்னாலேயே செல்வேன்.

**ரா**தா என்றாலே ராஸலீலையும் நம் முன்னால் வருகிறது. ராஸலீலை என்பது மிகப் புனிதமான நடனம்.

ராதா கண்ணனைவிட வயதில் மிகப் பெரியவள். அவள் கண்ணனை இடுப்பில் வைத்துக் கொஞ்சியும் இருக்கிறாள். கண்ணன், மதுரா போகும்போது ஏழு

வயதுதானாம். கண்ணன், ராதா மற்ற கோபியர்களுடன் ஆடும் ராஸலீலை விரச மில்லாத ஆன்மா பரமாத்மாவுடன் சேரும் ஓர் அனுபவம். ஸ்ரீமத்பாகவதத்தில் ராஸ லீலை வந்துள்ளது.

அதேபோல் நாராயணபட்டத்ரியின் நாராயணீயத்திலும் ராதை வருகிறாள். நாராயணதீர்த்தர் இயற்றிய பாடல் களிலும் ராதை வருகிறாள். தவிர ஊத்துக்காடு வெங்கடசுப்பய்யர் பாடிய பாடல்களிலும் கண்ணனுடன் ராதை இருக்கிறாள்.



பிருந்தாவனம் நுழைந்தால் எங் கும் ராதே என்ற முழக்கம்தான். சைக் கிளில் வருபவன் மணி அடிப்பது கிடை யாது. அதற்கு பதிலாக ''ராதே ராதே'' என்று கத்துகிறான். மக்களும் வழி விடுகின்றனர்.

அருகிலேயே யமுனை 'சலசல' என்று ஓடுகிறது. அதில் ஓட சவாரியும் உள்ளது. அதில் ஏறி அமர்ந்தால் அந்தப் படகோட்டி, ஒரு பஜன் பாடலை எடுத்துப் பாடி நம்மையும் பாட வைக்கிறான். வழி முழுவதும் ''ராதே ராதே... ஷ்யாம் ஸே மிலா தே'' என்று பாடுகிறான். அதாவது, ''ஓ ராதா, என்னைக் கண்ணனிடம் சேர்த்து வை'' என்று பொருள். கண்ணன், ராதா பக்தியை ஒவ்வொரு மூலையிலும் நாம் காண்கிறோம்.

யமுனைக் கரையில் 'நந்தகாம்' என்ற இடத்தில் சிறு கோயில் இருக் கிறது. அங்கு இருக்கும் கண்ணன் பெயர் 'பிரும்மாண்டபிஹாரி' அங்கு தான் யசோதை மண்ணை உண்டக் கண்ணனின் வாயைத் திறக்கச் சொல்லி, உள்ளே எல்லா லோகங்களையும் பார்த்



தானாம். அங்கு எல்லோருக்கும் மண்தான் பிரசாதம். பலர் அதை வாயிலும் போட்டுக் கொள்கிறார்கள். ''வாயில் போட்டாலே கரைந்து போய் விடுகிறது. ருசியாக இருக் கிறது'' என்கிறார்கள்.

அங்கு இருக்கும் வீட்டின் பெயர்களும் ஹோட்டல் கடைகளின் பெயர்களும் ராதாவை சார்ந்தே இருக்கின்றன. 'ராதே கிருஷ்ணா ஸ்டோர்', 'ராதே கிருஷ்ணா!', 'ஸ்வீட் ஸ்டால்', 'ராதா மனோஹர் லாட்ஜ்...

ராதாஷ்டமி நேரத்தில் வடக்கில் சென்று அனுபவித்து ஆனந்தம் அடைய கொடுத்து வைக்க வேண்டும். வடக்கிலி ருந்து வந்த நானும் ராதாஷ்டமி கொண் டாடுகிறேன்.

**- விசாலம், சென்னை**

நியூ(ஸ்)மார்ட்




பெயரில் பிராணிகளைத் துன்புறுத்துகின்றன. உதாரணமாக ஹிந்தி நடிகர் அக்ஷய் குமார், கழுத்தில் ஒரு பாம்புடன், இரண்டு சிறுத்தைகளைச் சாட்டையோடு இழுத்துச் செல்வதைப் போன்ற ஒரு காட்சி. இதற்கு மேனகா காந்தி கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளார்.

ஆவலோடு எதிர்பார்க்கப்பட்ட, உலகின் மிகக் குறைந்தவிலை கொண்ட டாடாவின் நேனோ கார் சந்தைக்கு வந்துவிட்டது. அஷோக் ரகுநாத் விசார் என்னும் மும்பைக்காரர் முதல் நானோ காரை, டாடா நிறுவனங்களின் சேர்மன், ரத்தன் டாடாவிடமிருந்து பெற்றுக் கொண்டார்.

மிருகவதை தடைச் சட்டம் நம்நாட்டில் அமலில் இருக்கத்தான் செய்கிறது. அதில் உள்ள சில ஓட்டைகளைப் பயன்படுத்தி சில தொலைக்காட்சி சானல்கள் 'ரியாலிடி ஷோ' என்ற

பொதுவாக நடிகைகள் அழகை மேம்படுத்தவே இந்த மூக்கு அறுவை சிகிச்சை செய்துக் கொள்வதாகக் கேள்விப்பட்டு இருக்கிறோம். ஆனால்

சமூக சேவை, தேச பக்தி, பெண்கள் முன்னேற்றம் என்று தன் வாழ்வை அர்ப்பணித்த துர்காபாய் தேஷ்முக்கின் நூற்றாண்டு இது. 1909ம் ஆண்டு ஜூலை



மாதம் ராஜமுந்திரியில் பிறந்த இந்தப் பெண்மணி, அந்தக் காலத்தில் பெண்களுக்கு இருந்த அடக்கு முறைகளை மீறி, கல்வியிலும் பல சாதனைகளைப் புரிந்தவர்.

# துர்காபாய் 100!



குடியரசுத் தலைவர், பாராளுமன்ற சபாநாயகர் இவர்களைத் தொடர்ந்து இந்திய வெளியுறவுத் துறை செயலாளராகவும் ஒரு பெண்மணி பொறுப்பேற்கிறார். அவர்தான் நிருபமாராவ். சீனாவில் இந்தியத் தூதராக பணியாற்றி வந்த இவர், ஜூலை மாதம் இறுதியில் ஓய்வு பெற்ற சிவசங்கர் மேனனை அடுத்து, இந்தப் பொறுப்புமிக்க பதவியில் அமர்கிறார்.

அதை ஒப்புக் கொள்ள மாட்டார்கள். கமல்ஹாசன், சாரிகாவின் வாரிசான ஸ்ருதி, மூக்கு அறுவை சிகிச்சை செய்ததை ஒப்புக் கொண்டுள்ளார். மூச்சு விடும்போது சிரமம் ஏற்பட்டதை சரி செய்யவே இந்த அறுவை சிகிச்சை யாம். பாடகியான இவர், பாடி நடித்துள்ள 'லக்' ஹிந்தித் திரைப்படம் சமீபத்தில் வெளியாகி இருக்கிறது. படம் ஹிட்டாகுமா என்று ஆவ லுடன் காத்திருக்கிறார். இதில் இவரது ஜோடி சமீபத்திய ஹிந்தித் திரை உலகின் இளம் நடிகர் இம்ரான்கான்.

**எ**லக்ட்ரானிக் கருவிகளின் கண்டு பிடிப்பு மற்றும் விற்பனையில் உச்சத்தில் இருக்கும் சோனி நிறுவனத்தின் சமீ பத்தைய புதிய உதயம் கம்பியில்லாத எம்.பி.3 ப்ளேயர். கைக்கு அடக்கமான சிறிய கேபிள் எதுவும் இல்லாத ஆல் இன் ஒன் ப்ளேயர் இது. இளசுகளுக் குக் கொண்டாட்டம்தான்!

மங்கையர் மலர் ஆகஸ்ட் 2009

உத்துப் பாருங்க... நான் உங்களுக்குரியவள். ரொம்ம்ம்பப் பிரியமானவள். விடு ஜூட் 25ம் பக்கம்...



இந்த ஆண்டுக்கான ரயில்வே பட்ஜெட்டில் தமிழகத்துக்குப் புதிய ஆறு ரயில்களை விடப் போவதாக ரயில்வே அமைச்சர் மம்தா பானர்ஜி அறிவித்துள்ளார். அது மட்டுமல்ல. சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்தை உலகத் தரத்துக்கு மாற்றப் போவதாகவும் கூறியிருக்கிறார்.

இந்தியாவுக்குச் சொந்தமான அணுசக்தி நீர்மூழ்கிக் கப்பல், ஜூலை மாதம் 26ம் தேதி பிரதமர் மன்மோகன் சிங்கால் விசாகப்பட்டினத்திலிருந்து வெள்ளோட்டம் விடப்பட்டது. இதற்கு ஐ.என்.எஸ். அரிஹந்த் என்று பெயரிடப்பட்டுள்ளது. இதனால், நிலம், வான், கடல் என மூன்று வழிகளிலும் அணுசக்தி மூலம் இந்தியாவின் பலம் அதிகரிக்கும்.

அமெரிக்க முன்னாள் அதிபர் பில்கிளின்டனின் மனைவி ஹிலாரி அண்மையில் இந்தியாவுக்கு வந்திருந்தார். இந்திய வேளாண்மை ஆராய்ச்சி நிறுவனத்துக்குச் சென்றிருந்தபோது, ''உலகில் மூன்று சதவிகித விளை நிலங்களை வைத்துக் கொண்டு, இந்தியா உலகின் பதினேழு சதவிகிதம் பேருக்கு உணவளிக்கிறது. இந்திய-அமெரிக்க நாடுகளுக்கிடையே சக்தி வாய்ந்த இணைப்பாக வேளாண்மை தான் இருக்க வேண்டும்'' என்று குறிப்பிட்டார்.

அண்மையில் டாக்காவில் நடைபெற்ற தெற்காசிய துப்பாக்கிச் சுடுதல் - ஏர் பிஸ்டல் பிரிவில் இந்திய வீரர் அமன்பிரீத் சிங், இரண்டு தங்கப் பதக்கங்களை வென்றிருக்கிறார்.



பழைய திரைப்படங்களின் தலைப்புகளைப் புதிய திரைப் படங்களுக்கு வைப்பது ஃபாஷனாகிவிட்டது. இதில் அதிகம் நடித்து வரும் ஹீரோக்கள் பருத்தி வீரன் கார்த்தியும், தனுஷும்தான்.

ஆறுமுறை தேசிய விருது பெற்றிருக்கும் மலையாள திரைப்படத் தயாரிப்பாளர் அரூர் கோபால கிருஷ்ணனுக்கு சென்னை ரோட்டரி சங்கம், 'ஃபார் த ஸேக் ஆஃப் ஆனர்' என்ற கௌரவத்துக்குரிய விருதினை வழங்கியது.

– பத்மினி பட்டாபிராமன்

# குக்கரி க்வீன்!

## மிக்ஸ் அண்ட் மேட்ச் சமையல் போட்டி



குக்கரி தர்பாரில் கலந்துக் கொள்ள சமையல் ராணிகளை அழைக்கிறோம். ஒரிஜினல் சமையல் குறிப்புகளைத் தெளிவாக எழுதி, கீழே உள்ள கூப்பனையும் நிரப்பி அனுப்புங்க: தேர்ந்தெடுக்கப்படும் ஐந்து ரெஸிபிகளுக்கு தலா ரூ. **250/-** பரிசு!

**குக்கரி க்வீன் சமையல் போட்டி (ஆகஸ்ட்)**

கண்டிப்பாகப் பயன்படுத்த வேண்டிய பொருட்கள் :

பால் + நெய்

பெயர் : ..............................................................

முகவரி : ..............................................................

..............................................................

..............................................................

**கடைசித் தேதி : 25.8.2009**

# "வேணவே வேணாம்!"



சமீபத்தில் ஒரு பண்டிகையை ஒட்டி ஒரு டப்பா நிறைய இனிப்புகளை என் மகனிடத்தில் கொடுத்து, என் வீட்டுக்கு அருகில் இருந்த ஒரு கிறித்தவப் பெண்ணிடம் கொடுக்கச் சொன்னேன்.

அவளோ அந்த இனிப்புகளை வாங்க மறுத்து, மேலும் 'நீங்கள், உங்க சாமிக்குப் படைச்சதை நாங்க சாப்பிட மாட்டோம்!'' என்று சொல்லி மீண்டும் என் மகனிடமே கொடுத்து அனுப்பிவிட்டாள்.

பிஞ்சு நெஞ்சங்களில் மத ஒற்றுமையை வளர்க்க வேண்டிய நாமே வேறுபாடுகளை வளர்ப்பது எந்த விதத்தில் நியாயம்?

- மேகலா, சென்னை



# Are You Worried About Your Over Weight



Over Weight / Obese Individuals are Highly prone to diseases like Diabetes and Hypertension. Obesity affects a person psychologically also.

The plastic surgery centre at VEECARE HOSPITAL'S with a team of Experienced Plastic Surgeons provides Treatment from cosmetic to plastic & reconstructive surgery.

## Liposuction

**Breast Enlargement / Reduction**
**Facelift | Forehead Lift | Cleft Palate**
**Pigmentation Removal / Wart Removal**
**Gynaecomastia | Thermage**




## VEECARE HOSPITALS

No. 106, Jawaharlal Nehru Salai,
Near Koyambedu Junction,
Thirumangalam, Anna Nagar,
Chennai - 600 040. Ph: 044 - 42945454

Website: www.veecarehospital.com
E-mail: care@veecarehospital.com




# ரூ. 5,000 பரிசு ஆன்மிகப் போட்டி-6 பரிசுபெறும் அதிர்ஷ்டசாலிகள்!

1) ஆர்.காந்திமதி, சீர்காழி
2) வி.ரமா வராகமூர்த்தி, படப்பை,
3) எஸ்.பாமா, திருச்சி
4) ஆர்.காஞ்சனா, கடலூர்-1,
5) ஜி.கஸ்தூரிபாய், திருவாரூர்,
6) சந்திரா ராஜசேகரன், புதுச்சேரி
7) கிரிஜா என்.ராவ், பாட்னா
8) எஸ்.ஜானகி, உடுமலைப்பேட்டை
9) விஜயலக்ஷ்மி ஜனார்த்தனன், தர்மபுரி
10) எஸ்.சுலோசனா, கும்பகோணம்
11) ஏ.சாருஸ்ரியா, சென்னை-94
12) என்.அங்குலதா, பழனி
13) சி.கோமளா, திண்டுக்கல்
14) எஸ்.துர்கா, ஈரோடு
15) பி.அமுதா, தஞ்சாவூர்
16) மங்களம் ராமன், திருநெல்வேலி
17) சி.புஷ்கலா, கரூர்
18) எஸ்.வி.ஏழுமலையான், வேலூர்
19) பி.சாந்தி, மயிலாடுதுறை
20) சாந்தி நாராயணன், ஐதராபாத்

## ஜூலை 2009-ல் வெளியான ஆன்மிகப் போட்டி-6 விடைகள்

1) துரோணர் 2) சனி 3) அழித்தல் 4) புஷ்கர் 5) கல்கி 6) கண்ணன் 7) சாலவும் நன்று 8) சபரி மலை 9) வீணை 10) கார்த்திகைப் பெண்கள்

சென்ற ஆண்டு வரலக்ஷ்மி நோன்பு சமயத்தில் அமெரிக்கா சென்றிருந்தேன். சிகாகோவின் திவான் தெருவில், இந்திய சாமான்கள் எல்லாமே கிடைக்கும். நோன்புக்குத் தேங்காய் வாங்க என் தோழி வந்தாள். எந்தக் கடையிலும் தேங்காய், குடுமியோடு கிடைக்கவில்லை என்று அவளுக்கு ஒரே மனக்குறை. நோன்பன்று சாஸ்த்ரிகள் பூஜை செய்ய வந்தார். அப்போது அலுமினியம் ஃபாயில் பேப்பராலே தேங்காய்க்கு ஒரு குடுமி வைத்து வெள்ளிக் கலசத்தின்



# ஹய்யா வெள்ளிக் குடுமி!

மீது வைத்தார். 'தகதக' என மின்னிய வெள்ளிக் குடுமியைப் பார்த்து தோழிக்கு ரொம்பவே சந்தோஷம்.

அது மட்டுமா? விரும்புபவர்கள் தேங்காயின் குடுமியை வெள்ளி ஜரிகை பேப்பர் சுற்றி அலங்காரமாக வைக்கலாம் என்ற டிப்ஸூம் கிடைத்துவிட்டதல்லவா?

- மீனலோசனி பட்டாபிராமன், சென்னை





# கணபதி பூஜைக்கு கை மேல் பலன்!

தமிழ் மூதாட்டி அவ்வை விநாயகரின் பக்தை. கயிலாயம் செல்ல வேண்டும் என்று அவ்வைக்கு நீண்ட நாட்களாக ஆசை. அவ்வையை கயிலாயத்துக்கு அழைத்துச் செல்ல அவர் காலத்தில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் ஆகிய இருவரும் வந்தனர்.

அப்போது அவ்வை, விநாயகர் பூஜையில் இருந்ததால், ''பூஜையை பாதியில் நிறுத்திவிட்டு வரமாட்டேன். எனக்கு விநாயகர் பூஜைதான் கயிலாயம். நீங்கள் செல்லுங்கள்'' என்று சொல்லிவிட்டார். நாயன்மார்களும் சென்றுவிட்டனர்.

விநாயகர் பூஜையை முறைப்படி முடித்த அவ்வைக்கு, கயிலாயம் செல்ல முடியாமல் போன வருத்தம் மனத்தில் சிறிது இருந்தது. இதை அறிந்த விநாயகப் பெருமான், அவ்வையின் முன்தோன்றி ''அவ்வையே, கவலைப்படாதே! அவர்களுக்கு முன் கயிலாயத்தில் உன்னை சேர்க்கிறேன்'' என்றதும் விநாயகர் மீது தான் இயற்றிய விநாயகர் அகவலைப் பாடி வழிபட்டார்.

விநாயகர் தனது தும்பிக்கையால் அவ்வையைத் தூக்கி கயிலாயத்துக்கு வந்து சேர்ந்தார். நாயன்மார்கள் இருவரும் நீண்ட நாட்கள் கழித்து கயிலாயம் வந்தடைந்தனர். அவ்வையாரைக் கண்ட அவர்களுக்கு அதிர்ச்சி! அவ்வை நடந்த சம்பவத்தை விளக்கி, கணபதி பூஜைக்குக் கிடைத்த பலனை எடுத்துரைத்தார்.



அவ்வை எழுதிய 'விநாயகர் அகவலை' தினமும் ஓத வேண்டும். அப்படிச் செய்தால் நினைத்த செயல்களை வெற்றிகரமாக நிறைவேற்ற விநாயகர் அருள்புரிவார்.

**- எம்.பானுமதி வரகனேரி**



**த**ரையில் ஈர மணலைக் கொட்டிப் பரப்பி, அதன்மேல் உருளைக் கிழங்குகளை வைத்தால் நீண்ட நாட்கள் கெடாமல் இருக்கும்.

- ஆர்.ராஜலக்ஷ்மி, ஹுப்ளி

**சிந்தனைத் துளி**

# அரைபடாத அரிசி!

**ரா**மகிருஷ்ண பரமஹம்சர் ஒருமுறை கிராமத்தின் வழியாக யாத்திரை வந்து கொண்டிருந்தார். அக்கிராமத்தின் செல்வந்திரரான பெரியவர் ஒருவர் கல் இயந்திரத்தைச் சுழற்றியவாறு கண்ணீர் தாரையாக வழிய அழுது கொண்டிருந்தார். ''ஏனப்பா அழுகிறாய்? உனக்கு என்ன கஷ்டம்?'' என்று கேட்டார்.

''எனக்கு எந்தக் கஷ்டமும் இல்லை. நல்ல மனைவி, பெரும்செல்வம், ஆரோக்கியமான குழந்தைகள் எல்லோரும் இருக்கிறார்கள்'' என்றார்.

''பிறகு, ஏன் அழுகிறாய்?''

''நான் இந்த இயந்திரத்தில் அரைபட்டு மாவாகும் அரிசியை நினைத்து அழுகிறேன். நம் வாழ்க்கையும் இந்த அரிசிகளைப் போலத்தானே? ஜீவாத்மாவாகிய நாம், நம்முடைய பாவ/புண்ணிய கணக்குப்படி அரிசிபோல் இந்த சம்சார சாகரத்தில் அரையப்பட்டு விடுகிறோம். இதுதானே வாழ்க்கை தத்துவம்?'' என்று பெரியவர் சொன்னார். உடனே ராமகிருஷ்ண பரமஹம்சர்,

''அப்பா, இந்த இயந்திரத்தின் நடுவில் ஒரு மர அச்சு இருக்கிறதே பார்த்தாயா? மேல் கல்லை எடுத்துப் பார்த்தால் அச்சுக்குப் பக்கத்தில் சில அரிசிகள் அரைபடாமல் ஒட்டிக் கொண்டிருக்கும். அதுபோல, பகவான் என்கிற அச்சினைக் கெட்டியாக பிடித்துக்கொண்டு சரணாகதி அடைந்துவிட்டால், அரைபடாத முழு



அரிசிபோல் சம்சார சாகரத்திலிருந்து காப்பாற்றபடுவோம்'' என்று விளக்கி தமது யாத்திரையைத் தொடர்ந்தார்.

உபன்யாசம் : தாமல் ராமகிருஷ்ணன்

தகவல் : சியாமளா சுவாமிநாதன்

குட்டீஸ் லூட்டி

# "எனக்குக் காட்டவே

தோழி வீட்டுக்குப் போயிருந்தேன். தோழியும் அவரது கணவரும் அலுவலகம் செல்பவர்கள். காலையில் அவர்கள் புறப்படுவதற்கு முன் அவர்களது மகளைப் பள்ளிக்கூடம் அனுப்ப வேண்டும்.

டிபன் சாப்பிட அடம்பிடித்த மகளிடம் "சீக்கிரம் சாப்பிடும்மா, ஆபீஸுக்கு நேரமாச்சு. அப்பாவோ நேரமாகிவிட்டால் பறபறப்பார்" என்றாள். உடனே தோழியின் மகள், "அப்பா பறக்கறதை நான் பார்க்கணும்மா. அப்பா பறக்கறதை எனக்கு காட்டவே இல்லை" என்று சொல்வதைக் கேட்டதும் எங்களால் சிரிப்பை அடக்க முடியவில்லை.



- மா.பகவதீஸ்வரி, தஞ்சாவூர்

எங்கள் வீட்டுக்கு உறவுக்காரர் ஒருவர் வந்திருந்தார். நாங்கள் பேச்சு வாக்கில் அவர் பெயரை அடிக்கடி உச்சரித்ததைக் கேட்டு, எனது பையனும் அவரை பெயர் சொல்லிக் கூப்பிட்டு விட்டான். அவன் சொன்னதும் எங்களுக்கே கஷ்டமாகி விட்டது.

"பெரியவங்களை அப்படிச் சொல்லக் கூடாதுப்பா. மாமானு எல்லாரையும் சொல்லணும்" என்று சொல்லி வைத்தோம். மறுநாள் வேகமாய் உள்ளே வந்த என் மகன் "அம்மா வாசலில் பிச்சைக்கார மாமா வந்திருக்காரு. காசு போடும்மா!" என்று சொன்னான்.

அவனது அன்பான அணுகு முறையை ரசித்தோம்.

- எஸ்.மீனலோசினி, திருத்தங்கல்



சமீபத்தில் நான் பாத்ரூமில் வழுக்கி விழுந்து விட்டேன். சின்னச் சின்ன காயங்களோடு, காலில் சுளுக்கு என்று ஒரு வாரம் படுக்கையில் கிடத்தி விட்டது. நானும் என் கணவரும் இதை யாருக்கும் சொல்லவில்லை. அடுத்த வாரம் எங்கள் மகளிர்

எல்லாரும் சிரித்துவிட்டோம்.

**- கோமதி கோதண்டராமன், திருவனந்தபுரம்**



# இல்லையே!"

அனிகூட்டத்துக்கு அவசியம் போக வேண்டியிருந்ததால் என் பேத்தி காயத்ரி யுடன் போனேன்.

காலில் பெரிய கட்டுடன் போன என்னைப் பார்த்த தோழிகள் "ஏன் எங்களுக்குச் சொல்லவில்லை" என்று உரிமையுடன் ஆளாளுக்கு கோபித்தனர்.

அதைக் கேட்டு கொண்டிருந்த என் பேத்தி "இனிமே தாத்தி (நான்தான்) விழற போது நான் எல்லாருக்கும் ஃபோன் பண்ணி சொல்றேன். இனிமே தாத்தி கிட்டே சண்டை போடாதீங்க" என்று மழலையில் பரிந்துக் கொண்டு வரவும் எல்லாரும் சிரித்துவிட்டோம்.

**ஹை**தராபாத்துக்கு எனது கணவர் டூர் போய் விட, என் இரு குழந்தைகளோடு நன்றாக உறங்கிக்கொண்டு இருந்தேன். நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு, யாரோ கதவைத் திறக்க முயலும் சத்தம் கேட்டு விழித்துக் கொண்டேன். அப்படியே உறைந்து போய் நின்றுவிட்டேன். சற்று நேரத்தில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு "ஏய், அம்மு, அப்பு எழுந்துருங்கடா!" என்று கூறிக்கொண்டு, எல்லா விளக்குகளையும் போட திருடன் ஓடிப் போய்விட்டான்.

மூன்று வயது நிரம்பிய என் மகளும் ஒன்றரை வயது நிரம்பிய என் மகனும் துடைப்பக்குச்சியை ஆளுக்கொன்றாக கையில் வைத்துக் கொண்டு, "நீ பயப்படாதேம்மா! திருடங்க வந்தால் இதனாலேயே அடித்துத் துரத்தி விடுகிறோம்!" என்று வீரமாகச் சொன்னபோது, பயத்தை மறந்து ரசித்தேன்.

**- இந்திராணி தங்கப்பன், மும்பை**




**இன்னுமா கண்டுபிடிக்கல? முத்து முத்தா சொல்வேன். பரிசெல்லாம் தருவேன். பறந்து வாங்க 32ம் பக்கம்...**

# சாரதாவுக்காக ஜெபிக்கிறோம்!

சாரதாவின் கதையைப் படிக்கவே ரொம்ப வேதனையா இருக்கு. சாரதாவால், இந்தத் துயரமான நோயிலிருந்து கட்டாயம் மீண்டு வரமுடியும்.

- விஜயா சுந்தர்ராஜன், சென்னை

'சாரதா பேசுகிறேன்' தொடரைப் படிக்கும்போதே கஷ்டமாக இருக்கிறது. ஆறுதலான விஷயம், அவரது குடும்பம் பக்கபலமாக தாங்கி பிடித்திருக்கிறது. நாங்கள் சாரதாவுக்காக தினமும் ஜெபிக்கிறோம்.

- ஜே.சி.ஜெரினாகாந்த், சென்னை

இந்தத் தொடரை படித்ததும் நெஞ்சம் கனத்தது. 'சே, என்ன வாழ்க்கை இது. போட்டி, பொறாமை என்று அல்பமாக வாழ்கிறோமே. நாம் ஆரோக்கியமாக இருப்பதற்கு கடவுளுக்கு நன்றி சொல்ல வேண்டாமா?' என்று நினைத்தேன்.

- இதா, சென்னை

'சாரதா பேசுகிறேன்' இந்த மாதம் 100-ம் பக்கம்

அன்பு உள்ளங்கள்



# பூஜையெல்லாம்

'பக்தியும் இறை நம்பிக்கையும் மனத்தில் இருந்தால் போதாதா?' என்று பண்டிகைக் காலம் தொடங்கும் போதே இளசுகள் கேட்கத் தொடங்கிவிட்டனர். நேரமில்லாமல் இறக்கை கட்டிக்கொண்டு பறக்கும் இளசுகளின் அவசரம் நமக்கும் புரிகிறது. ஆனாலும் அத்தனை அவசரத்திலும் செல்ஃபோனை எடுத்துக் கொள்ள மறப்பதில்லை. அதைவிட சார்ஜ் செய்து கொள்ளாமல் வெளியே செல்வதில்லை.

தேவை என்கிறபோது நாம் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்கிறோம். அதுபோல் தான் பூஜை என்பதும். 'செல்ஃபோன் டவரின் பவரால் செல்லில் பேசுகிறோம். அப்படிப் பேசுவதற்கு சார்ஜ் செய்யப்படுகிற கோயில் கோபுரம்கூட ஒரு டவர்தான். தினம் தினம் மந்திர உச்சாடனம் செய்வதால் கோபுரத்தின் சக்தி ஏறுகிறது. நாம் கோயிலுக்குச் செல்லும்போது சக்தி நம்முள்



வியாபிக்கிறது. அப்படி வியாபிக்கும் சக்தி நமக்கும் பூரண பலம் கொடுக்க

# தேவைதானா?

வேண்டுமானால், நம்மிடம் சிம் கார்டு இருக்க வேண்டும்.

**நா**ம் வீட்டில் தினமும் விளக்கேற்றி சாமி கும்பிடுவதுதான் நம்முடைய சிம் கார்டு. விசேஷ நாட்களில் வரும் பண்டிகைகளைக் கொண்டாடுவது செல்ஃபோனுக்கு சார்ஜ் செய்து கொள்வதுபோல. அவசரமோ, ஆசாரமோ... பூஜைகள் செய்ய வேண்டியது அவசியம்.

இன்னொரு விஷயம். இதயத்தில் இருக்கும் இறைவனைப் புறக்கணித்துவிட்டு வீட்டிலுள்ள இறைவனைப் பூஜிப்பது உசிதமல்ல. அதாவது உடலை, உள்ளத்தைப் பேணாமல், சாமி கும்பிடுவதும் வீட்டில் உள்ள தெய்வத்தை ஓரம் கட்டிவிட்டு கோயிலுக்கு ஓடுவதும் அழகல்ல. கோயிலுக்குச் செல்லும் முன் கண்டிப்பாக வீட்டுப் பூஜை அறையில் விளக்கேற்றுவது சாலச் சிறந்தது.

– பவித்ரா பிரகாஷ், பெங்களூரு



எஸ்.மஞ்சுளா

ஜெயஸ்ரீ ராஜ் நினைவுச் சிறுகதைப் போட்டி ரூ.10,000 முதல் பரிசுக் கதை

**வ**யல் வேலையை முடித்து விட்டு, உடம்பு வலியோடு வீட்டுக்கு வந்த கல்யாணி 'அம்மாடி' என்று முனகியபடியே திண்ணையில் வந்து உட்கார்ந்தாள். வீட்டுக்கதவு திறந்திருக்க, திண்ணையின் மூலையில் மகனின் புத்தகப்பை அலங்கோலமாகக் கிடந்தது. 'இப்படித் தூக்கி எறிஞ்சிகிட்டு எங்க போயிருப்பான்; உள்ளார இருக்கானா...?' சந்தேகத்தோடு "சங்கரு... எலே சங்கரு" வேகமாகக் குரல் கொடுத்துக் கூப்பிட்டாள்.

பதில் எதுவும் இல்லை. ஒரு நாய் ஒரே பாய்ச்சலோடு வெளியேறி ஓட்டம் பிடித்தது.

"அடச் சீ சனியனே!" என்று அதை விரட்டிவிட்டு வாசலில் நின்றுகொண்டு நோட்டம் விட்டாள். அவன் சோட்டுப் பிள்ளைகள் எல்லாம் தெருவில் பம்பரம் சுற்றி விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

"டேய் பசங்களா... என் மொவன பாத்தீங்களாடா...?" அதிகாரத் தோரணையில் கேட்டாள்.

"நாங்க பாக்கல" என்று சொல்லி விட்டு, தொடர்ந்து விளையாட ஆரம்பித்தார்கள்.

அப்போது தலையில் விறகுக் கட்டை தூக்கிக்கொண்டு வந்த ராசாத்தியிடம்.

"ஏன்க்கா... என் மொவன் சங்கர அந்தப் பக்கம் பாத்தியா...? முகத்தை இறுக்கமாக வைத்துக்கொண்டு கேட்டாள்.

"ம்...ம்...உன் மொவன், உன் கொழுந்துன மொவன், விசயா மொவன், எல்லாரும் சுடுகாட்டுத் தோப்புல நின்னுக்கிட்டு இருந்தானுங்க. இப்பத்தான் பாத்துட்டு வர்றேன்."

"என் மொவன் ஆட்டுக்குட்டியத் தூக்கி வைச்சுக்கிட்டு இருந்தானா?"

"ஆமாண்டி. ஆட்டுக்குட்டியோடதான் நின்னுகிட்டு இருந்தான். கையில குச்சிய வைச்சுக்கிட்டு காளியாத்தா மாதிரி நின்னுக்கிட்டு அவன எதுக்குடி தேடற?"

"பள்ளிக்கூடம் விட்டு வந்ததும்



சுடுகாட்டுல என்ன வெளயாட்டு? அந்த ஆட்டுக்குட்டியோடதான் அவன அங்கேயே குழிதோண்டி பொதைக்கப் போகுதாக்கும்.

''சீ... வாய மூடுடி. ஒரு புள்ளய வைச்சுக்கிட்டு ஏண்டி இப்படி துக்கிரித்தனமா பேசுற...?'' சொல்லிக்கொண்டே ராசாத்தி நடையைக் கட்ட ஆரம்பித்தாள்.

''ஆமா... ஒரு புள்ள, ஒரு புள்ளன்னு செல்லம் கொடுக்க, கொடுக்கத்தான் ஒலுச மாடா போய்கிட்டு இருக்கான். சனியன் வரட்டும், கைய கால ஒடைச்சு திண்ணையில போடுறேன். அந்த ஆட்டுக் குட்டியையும் தலையப் புடிச்சி திருகி சாகடிக்கிறேன்.''

ஆத்திரம் தீராதவளாய் சுடுகாடு இருக்கும் திசையையே பார்த்துக்கொண்டு நின்றாள்.

அப்போது நான்கைந்து சிறுவர்கள் பேசிக்கொண்டு வருவது தெரிந்தது. அவர்கள் நெருங்க, நெருங்க அந்தக் கும்பலில்

# நெஞ்சுக்குள் ஈரம்!



ஆட்டுக்குட்டியைத் தூக்கிக்கொண்டு சங்கரும் வருவது நன்றாகவே தெரிந்தது. அவனைப் பார்த்ததும் குச்சியை மறைத்து வைத்துக் கொண்டு நின்றாள்.

''டேய் சங்கரு. உங்க அம்மாடா...'' கூட வந்த சிறுவர்கள் சொல்லிக்கொண்டே ஓட்டம் பிடிக்க ஆரம்பித்தார்கள்.

திடீரென கல்யாணியைப் பார்த்ததும், பயந்து போனவன், ஆட்டுக்குட்டியைக் கீழே இறக்கிவிட்டுவிட்டு மெதுவாக நடந்து வந்தான். அந்த ஆட்டுக்குட்டி கத்திக்கொண்டே அவன் பின்னாலேயே வந்தது.

''போ...போ...'' என்று ஆட்டுக்குட்டியைத் தூர விரட்டி விட்டான். ஆனால், அது துள்ளித் துள்ளி குதித்துக்கொண்டு அவன் பின்னாலேயே வந்து நின்றது.

அதைப் பார்த்ததும் கல்யாணிக்கு மேலும் மேலும் கோபம் வந்தது.

''இனிமே ஆட்டுக்குட்டிய தூக்குவியா... அதுகூட வெளையாடுவியா...

பள்ளிக்கொடம் விட்டு வந்தா வீட்டுல இருக்கியா...?'' கேட்டுக்கொண்டே கையில் இருந்த குச்சியை எடுத்து அவன் காலிலும், கையிலும் மாறி மாறி பலம் கொண்ட மட்டும் வேகமாக அடித்து, அப்படியே கீழே பிடித்துத் தள்ளிவிட்டாள்.

தள்ளிய வேகத்தில் கொஞ்ச தூரம் தடுமாறிப் போய் தொப்பென மல்லாந்து விழுந்தான் சங்கர். ஆத்திரமாகப் பேசிக் கொண்டே கலைந்துகிடந்த தலைமுடியை அள்ளி செறுகிக்கொண்டு கீழே விழுந்து கிடந்த மகனைப் பார்த்தாள்.

அப்பொழுதும் அந்த ஆட்டுக்குட்டி சங்கர் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தது. அதைப் பார்க்கவும் மேலும் ஆத்திரம் கொண்டவளாய்...

'எல்லாம் உன்னாலதானே...' என்று கத்திக்கொண்டே அந்த ஆட்டுக்குட்டியை அடிக்க ஓடினாள். அதற்குள் அந்த ஆட்டுக்குட்டி, துள்ளிக் குதித்து தூரமாக ஓடிவிட்டது.

கையிலிருந்த குச்சியைத் தூக்கி எறிந்து விட்டு, ''எழுந்திருடா... வீட்டுக்கு போடா...'' என்று தலையில் கொட்டி கீழே கிடந்தவனைப் பிடித்து தூக்கி நிறுத்தினாள்.

''போ... நான் ஒன்னும் வர மாட்டேன்'' என்று அழுதபடியே ஓடிப் போனான் சங்கர்.

''நீ எங்க ஓடினாலும் ராத்திரிக்கு சாணி திங்க வீட்டுக்கு வந்து தாண்டி ஆகனும்'' ஆத்திரத்துடன் கத்தினாள்.

''ஏண்டி கல்யாணி... உன் மொவன எதுக்குடி இப்படி விரட்டி அடிக்குற. அந்த ஆட்டுக்குட்டியோட அவன் வெளையாண்டாதான் என்ன? பாவம், நாய் கடிச்சிக் கெடந்த ஆட்டுக்குட்டியத் தூக்கியாந்து, இத காப்பாத்து ஆத்தான்னு என்கிட்ட கொடுத்தான். நானும் மருந்து போட்டு அத காப்பாத்திவிட்டேன்.

''அவனும் இலை, தழைன்னு பறிச்சுப் போட்டு வளர்த்தான். முறுக்கு, வாழப் பழமுன்னு, அதையும், இதையும் வாங்கியாந்து கொடுத்து அதுகிட்ட பாசமா இருந்தான். இப்ப என்னடான்னா, கூட



## ''கண்ணா, அருள் செய்!''

பெங்களூர் - மைசூர் சாலையில் எண்பது கிலோமீட்டரில் இருக்கிறது சென்னப்பட்டனா. இங்கு தொட்டமல்லூர் என்ற திருத்தலம் உள்ளது. இந்தக் கோயிலின் மூலவர் அப்ரமேயர். இவருக்கு அழகாக அலங்காரம் செய்திருந்தாலும், அர்ச்சனை, அபிஷேகமெல்லாம் பிராகாரத்தின் வடக்கே கிழக்கு நோக்கி தவழ்ந்த நிலையில் உள்ள நவநீதக் கிருஷ்ணனுக்குதான். குழந்தை பாக்கியம் வேண்டுவோர், இவனிடம், ''உன்னைப் போல எங்களுக்கும் ஒரு குழந்தை வேண்டும். அருள்செய்'' என வேண்டுகின்றனர்.

இங்கு வேண்டினால், கைமேல் பலன் என்பதை நிரூபிக்கும் வகையில், கர்ப்பகிரகத்தின் கூரையில் ஏராளமான வெள்ளி பிரார்த்தனைத் தொட்டில்களைக் காணலாம்.

- செல்வகணபதி, பெங்களூரு

பொறந்த பொறப்பு மாதிரி அவனவிட்டுப் பிரிய மாட்டேங்குது.

''வாயில்லா ஜீவன் தானே? அது மேல உன் மொவன் பாசமா இருக்குற துக்கு நீ எதுக்குடி இந்த ஆட்டம் ஆடுற...'' சங்கரின் மேல் பரிதாபப் பட்டு பேசினாள் பொன்னாத்தா கிழவி. இவள் கல்யாணியின் சொந்த அத்தை.



''உக்கும். நீ கொடுக்குற செல்லத்துல தான் இவன் இன்னும் உருப்புடாம போய்க்கிட்டு இருக்கான். இன்னும் ஏண்டா எரும மாதிரி அங்கயே நிக்குற. அந்த ஆட்டுக்குட்டிய விரட்டி விட்டுட்டு வீட்டுக்குப் போடா... நாலாவது படிக்குற புள்ளைக்குப் புத்தி போகுது பாரு புத்தி.

''அப்பனாட்டம்தானே நீயும் இருப்ப. அவன்தான் குடிச்சிக் குடிச்சே என் குடிய குட்டிச்சுவராக்கிட்டுப் போயிட்டான். இப்ப, நீ அந்தத் தோல எடுத்து மாட்டிகிட்டு அலையிற போல இருக்கு.'' திட்டிக்கொண்டே வீட்டுக்குப் போனாள். அவள் போனதும், ஆட்டுக்குட்டியைத் தூக்கிக் கொண்டு பொன்னாத்தா கிழவியிடம் வந்தான் சங்கர்.

''இதை வளக்கணுமுன்னு ஆசையா இருக்கு ஆத்தா. அம்மாதான் எதையுமே வளர்க்கக் கூடாதுன்னு வஞ்சிக்கிட்டே இருக்கு. வீட்டுக்கு நாயி, பூனை, கோழின்னு எது வந்தாலும் விரட்டி விரட்டி அடிக்குது. நல்லவேள. யாருமே இத தேடிக்கிட்டு வரல. இப்ப ஆட்டுக்குட்டி நல்லா அழகா இருக்குல்ல ஆத்தா...'' என்று ஆட்டுக் குட்டியின் மூக்கை இலேசாகப் பிடித்துக் கிள்ளி அதன் தலையைத் தன் முகத்தோடு ஒற்றிக் கொண்டான்.

இரவு மணி எட்டுக்கு மேல் ஆகியிருந்தது. பொன்னாத்தா நினைத்துக்கொண்டு இருந்தது போலவே, கல்யாணி, மகனைத் தேடிக்கொண்டு வந்து வாசலில் நின்றாள்.

''சோறு தின்னுட்டுத் தூங்குறான். நீ போ. காலையில நான் அழைச்சிக்கிட்டு வர்றேன்.''

''இல்ல அத்த. மழை வர்ற மாதிரி இருக்குது. நான் ஒண்டியா இருக்கணும். அழைச்சுக்கிட்டுப் போறேன்'' என்றாள்.

''புள்ளய அடிக்காம சத்தம் போடாம அழைச்சுக்கிட்டுப் போடி...''

வீட்டுக்குள் போனதும் மகன் படுத்திருப்பதைப் பார்த்தாள். அவள் முகம் கடுகடுவென மாறிப்போனது. அங்கு அவன் நெஞ்சில் தலை வைத்து, அந்த ஆட்டுக்குட்டியும் பக்கத்திலேயே படுத்துக் கிடந்தது.

கல்யாணியின் முகத்தைக் கவனித்த பொன்னாத்தா, பட்டென ஓடிச் சென்று ஆட்டுக்குட்டியைத் தூக்கிக்கொண்டாள்.

தூங்கிக் கொண்டிருந்தவனை எழுப்பி 'வாடா வீட்டுக்கு' என்று பரபர என்று

இழுத்துக்கொண்டு போனாள். தூக்கக் கலக்கத்தில் இருந்தவன், கல்யாணியின் இழுப்புக்குப் பின்னாலேயே ஓடினான்.

வானம் இருட்டிக்கொண்டு வர, காற்று வேகமாக அடித்தது.

**வீ**ட்டுக்குள் சென்றதும் விரித்துப் போட்டிருந்த பாயில் மகனைப் படுக்க வைத்து, புடவையை மடித்து போத்திவிட்டாள். மழை அதிக மாக பெய்ய ஆரம்பித் திருந்தது.

பாதி ராத்திரியில் மழை நீர் சொட்டுச் சொட்டாக மேலே விழ, மெல்ல கண் விழித்துப் பார்த்தாள் கல்யாணி. பக்கத்தில் மக னைக் காணவில்லை. வாரி சுருட்டிக் கொண்டு பதற்றத்தோடு எழுந்தவள், கதவைத் திறந்துகொண்டு திண்ணைக்கு வந்தாள்.




**லேட்டா கண்டுபிடிச்சதுக்கு கொட்டு... சரியா கண்டுபிடிச்சதுக்கு ஷொட்டு... ஆரவாரமாய்த் தொடங்குது ஆஹா 50!**

திண்ணையில் மகன் ஆட்டுக்குட்டியை அணைத்தபடியே அந்தச் சாரலில் நடுக் கத்தோடு படுத்திருந்தான். அந்தக் காட்சி யைப் பார்த்ததும் அப்படியே திகைத்துப் போய் நின்றாள். அந்த நொடியே...

இறுகிப் போயிருந்த அவள் மனதுக்குள் தாய்மையுணர்வு மேலோங்கி நிற்க, அவ ளுக்குள் இருந்த கோபம் தூள் தூளாகிப் போனது. அருகில் வந்தவள் மகனை மெதுவாக கை கொடுத்துத் தூக்கினாள்.

இதைப் பார்த்து சட்டென விழித்துக் கொண்ட ஆட்டுக்குட்டி பயந்துபோய் சுவர் ஓரமாக ஒதுங்கி நின்றது.

மகனைத் தூக்கிச் சென்று பாயில் படுக்கவைத்துவிட்டு, வீட்டினுள் நின்று கொண்டே ஆட்டுக்குட்டியைப் பார்த்தாள்.

கதவருகே வந்து நின்ற ஆட்டுக்குட்டி, கல்யாணியைப் பார்த்து ''மே...மே...'' என்று கத்திக்கொண்டே வீட்டுக்குள் எட்டி எட்டி பார்த்துக்கொண்டு நின் றது.

ஒரு நிமிடம் அந்த ஆட்டுக்குட்டியைப் பார்த்துக்கொண்டே நின்றவள், பட்டென அதைத் தூக்கி நெஞ்சோடு அணைத்துக் கொண்டு 'என் புள்ள மேல உனக்கு அவ்வளவு பாசமா?' என்று சொல்லிக் கொண்டே கதவை உள்புறமாக தாழிட்டாள். சாரல் அடிக்காத வாறு இறுக்கமாகச் சாத்தினாள்.

தூங்காமல் உட்கார்ந்திருந்த சங்கர், கல்யாணியின் செயலை ஆச்சர்யமாக பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

# சிறுநீர் கசிவு பிரச்னையா?

இன்னும் ஏன் தயக்கம்?

"நீங்கள் அணுக வேண்டிய சிறப்பு மருத்துவர்

## UROGYNECOLOGIST

இருமினாலோ,
தும்மினாலோ

சிறுநீர் கசிவு
ஏற்படுகிறதா?

### "சிலிங் சிகிச்சை"

"வலியில்லாமல், இரத்தக்
கசிவில்லாமல் ஒரே நாளில் வீடு
திரும்புங்கள்". அமெரிக்காவில்
UROGYNECOLOGY FELLOWSHIP
பட்டம் முடித்த மருத்துவர்கள் உள்ள
இந்தியாவின் முதல் ISO 9001:2000
Certified சிறப்பு மையம்

**இப்போது கோவையில்**

**பாலா மெடிக்கல் சென்டர்
அண்டு ஆஸ்பிட்டல்,
901, திருச்சி ரோடு,
இராமநாதபுரம்,
கோயம்புத்தூர் 641 045.
0422-2323456, 2323333**

தங்கள் பிரச்னையை மேற்படி மையத்திலுள்ள
முறையான பயிற்சி பெற்ற நபரிடம்
தொலைபேசியில் தெரிவித்து கவுன்சலிங்
அல்லது ஆலோசனை பெறலாம்.
ஆலோசனைக்குக் கட்டணம் எதுவும் கிடையாது!



**GUNA ASSOCIATES IN UROGYNECOLOGY
& RESEARCH FOR INCONTINENCE (GAURI)**

1, Crescent Park Street, T.Nagar, Chennai - 600 017. Ph : 24341055, 24322591
E-mail : gunasek@gmail.com Web : www.urogynecology.in



# நாளை வாரம்!




மணப்பாறை, வையம்பட்டி பகுதிகளில் சென்ற வாரம் என்பது 'நேற்று வாரம்' என்றும், அடுத்த வாரம் என்பது 'நாளை வாரம்' என்றும் பேச்சு வழக்கில் உள்ளது.

- ஏ.கே.என்., டி.ஆர்.பட்டினம்

மதுரை அருகே உள்ள ராஜாக்கூர் கிராமத்தில் குழந்தை பிறந்த உடனே மரம் நடுவதை மக்கள் வாடிக்கையாகக் கொண்டுள்ளனர். ராஜாக்கூர் அரசு ஆரம்ப சுகாதார நிலையத்தின் நடைமுறைதான் இது. இதனால், இந்த மருத்துவமனையே பசுஞ் சோலையாகக் காட்சியளிக்கிறது.

- அபர்ணா சுப்ரமணியம்,
சென்னை







உலகமே இப்போது, இயற்கையுணவு, இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்துவது என்று மாறிவருகிறது. நகரங்களில் கிடைப்பதற்கு அரிதான மூலிகைகளாய கீழாநெல்லி, துளசி, தும்பை, கற்றாழை, மருதாணி, ஆவாரம், செம்பருத்தி, வேம்பு, முடக்கற்றான், வாதாம் படக்கி, கையாந்தரை, குப்பைமேனி, துத்தி போன்றவை கிராமங்களில் மண்டிக் கிடக்கின்றன. அவற்றைச் சேகரித்து, நிழல்களில் உலர்த்திப் பொடிசெய்து, பாக்கெட்டில் விற்கலாம். பியூட்டி பார்லர்களிலும் இப்போது இயற்கைப் பொருட்களைத்தான் உபயோகிக்கின்றனர். கிராமத்தில் உள்ளவர்கள் குடும்பத்தோடோ அல்லது குழுக்களாகவோ இதை செய்து, பணம் ஈட்டலாமே!

- ஜெகா, கும்பகோணம்

எங்கள் கிராமங்களில் முற்றிய கதிர்களை ''பயிர் பூட்டு வாங்கிடுச்சு! இனி அறுவடை செய்யலாம்'' என்பார்கள்.

- கே.மகாலட்சுமி,
திண்டுக்கல்






செயற்கை மணிகள், செயற்கை இலைகள், பச்சை (அ) வயலட் ஸ்டாக்கின்ஸ் துணி, க்ரீன் டேப், கோல்டன் கம்பி, நூல், கத்தரிக்கோல்




**செய்முறை :**

ஸ்டாக்கின்ஸ் துணியின் ஓர் ஓரத்தை இரண்டாக மடித்துக் கொள்ளவும். மணியை அதன் நடுவில் வைத்து, நூலால் இறுக்கிக் கட்டி சிறிது துணிவிட்டு வெட்டி விடவும். இதேப்போல் அனைத்து மணி களிலும் ஸ்டாக்கின்ஸ் துணியைச் சுற்றி வைத்துக் கொள்ளவும். இப்போது 'தனி திராட்சை' தயார்!




கோல்டு கம்பியின் முனையை இலேசாக மடித்துவிட்டு, கம்பி தெரியாமல் க்ரீன்டேப்பைச் சுற்றி விடவும். கம்பியின் முனையில் ஸ்டாக்கின்ஸ் மணியை (படம் 6) மேலே மேலே வைத்து, நூலை குறுக் கும் நெடுக்கும் விட்டு இறுக்கிக் கட்டவும். இப்போது திராட்சைக் கொத்து போல் கிடைக்கும். இதேபோல் சிறிதும், பெரிது மாக நான்கைந்து கொத்துக்கள் தயார் செய்து கொள்ளவும்.




கொத்துக்கள் இருக்கும் ஒவ்வொரு கம்பியையும் பக்கவாட்டில் இணைத்து முறுக்கி விடவும். ஆங்காங்கே செயற்கை இலைகளை க்ரீன் டேப்பின் உதவியோடு, முறுக்கிய கம்பிப் பகுதிகள் வெளியே தெரியாதவாறு சேர்த்துச் சுற்றவும்.

இப்போது அழகான திராட்சைக்

அசத்துதே









கொத்து தயார்! மடித்து வைத்த கம்பியின் முனையைச் சிறு வளையமாக்கி, சுவரில் மாட்டலாம் அல்லது சிறிய கூடைகளில் வைத்தும் அலங்கரிக்கலாம்.

குறிப்பு : உங்களின் கற்பனைத்திறனுக்கேற்ப திராட்சையின் நிறத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். ஆனால் செயற்கை மணியின் நிறமும், ஸ்டாக்கின்ஸ் துணியின் நிறமும் மட்டும் ஒன்றாக இருக்க வேண்டும்.

*கலை, படங்கள் :* ஜே.பூங்கோதை,
சென்னை- 78













# திராட்சைக் கொத்து!



# படிக்க... பயன் பெற...

**யார் ஞானி? - யோகி ஸ்ரீ இராமானந்த குரு, சங்கர் பதிப்பகம், சென்னை - 49. விலை ரூ.200**

சாக்ரட்டீஸ், பினாட்டோ, இயேசு பிரான் முதல் நம்முடைய இராமானுஜர், சங்கரர் உட்படப் பல பெருமக்களின் சிந்தனைகள், வாழ்க்கை முறை பற்றிய அற்புதமான விளக்கங்கள். வினாக்களுக்கு விடை தருகிற பாணியில்.

**இட்லி, தோசைக்கு ஏற்ற சூப்பர் சைடிஷ் - பிரேமலதா பாண்டியன், அழகு பதிப்பகம், சென்னை - 49. விலை ரூ.15**

தென்னகத்தின் தனிச்சிறப்புடைய இட்லி தோசைக்குத்தான் எத்தனை விதமான 'பக்க வாத்தியங்கள்'. குறைந்த விலையில் மிகவும் பயனுள்ள நூல்.

**கிருஷ்ணப்பருந்து - பிவி.தம்பி, தமிழில் சிவன், கற்பகம் புத்தகாலயம், சென்னை - 17. ரூ.190/-**

மாயங்கள், மாந்திரீகங்கள் என்று பரபரப்பை நாடிப் படிக்கிறவர்களுக்கு சுவையான நாவல். மூலத்தின் முழுமையான தமிழாக்கம் இது.

**சித்திரங்கள் மூலம் ஹிந்து ஜோதிடம் - டாக்டர் கே.என்.சரஸ்வதி, கடலங்குடி பப்ளிகேஷன்ஸ், சென்னை - 17. ரூ.130**

ஏராளமான வரைபடங்கள், அட்டவணைகளுடன் மிகவும் எளிமையான ஜோதிட விளக்கங்கள்.

**ஜீராவின் மலரும் நினைவுகள்... - 'ஜீரா' ராஜி கிருஷ்ணன், உமா பதிப்பகம் கோலாலம்பூர். விலை ஆர்.எம். 20**

சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில்- தஞ்சாவூர் மாவட்டம் பழமார் நேரியிலிருந்து கேரளத்துக்கு இடம் பெயர்ந்து அப்படியே மலேசிய நாட்டில் குடியேறி, பல்கிப் பெருகி வாழ்ந்து வரும் பிராமணக் குடும்பத்தைப் பற்றிய ஆசிரியையின் தன் வரலாறு. மூன்று நூற்றாண்டுகளின் சுவையானத் தொடர்பை அறியலாம்.

**- வாசகன்**

## புக் பேங்க்

சம்பிரதாயம்

# ஸர்வ வியாதி

**சா**ஸ்த்ரிகள் கும்பம் வைத்து ஜபித்து, மந்திரம் சொல்லி அதன்பின் கும்பத்தினுள்ள ஜலத்தை உத்தரிணியில் எடுத்துக் கொடுக்கும்போது

''ஸர்வ பாவ விநாஸனம் ஸர்வ வியாதி நிவாரணம்''

'ஸர்வ வியாதி நிவாரணம்.' வியாதியைக் கும்ப நீர் எப்படிப் போக்கும்? சாஸ்த்ரிகள் ஜலத்தை எடுத்து கும்பத்தில் ஊற்றும் போதே அந்த ஜலத்திலும், கிருமிகள் இருக்கும்தானே? ஃபினாயிலோ, டெட்டாலோ போட்டுக் கழுவி அதன்பின் ஜலத்தை ரிவர்ஸ் ஆஸ்மாஸிஸ் செய்தா ஊற்றுகிறார் என்று சிலர் கேட்கலாம்.

**கு**ம்பத்துக்குப் பயன்படுத்தும் உலோகம் செம்பாகவோ அல்லது வெள்ளியாகவோதான் இருக்க வேண்டும். ஏனெனில் ஸ்டாடிக் எலக்ட்ரிஸிடியை உண்டாக்கும் தன்மை, இந்த இரண்டு உலோகங்களிலும் உள்ளது. இத்துடன் தங்கம் என்ற உலோகமும் சேரும்.

தண்ணீரைக் கும்பத்தினுள் ஊற்றும்போது ஏற்படும் அதிர்வுகள் ஸ்டாடிக் எலக்ட்ரிஸிட்டியை உண்டாக்குகிறது. ஸ்டாடிக் எலக்ட்ரிஸிடி கிருமிகளைக் - கொல்லும்.

அந்த மின்சாரத் தன்மை தரையில் வைத்தால், தரை மின்சாரத்தை இழுத்துக் கொள்ளும். அப்படி மின்சாரத்தைக் கீழே போக விடாதபடி பலகையின் மேல்

வாழை இலை இட்டு, அதன்மேல் அரிசியைப் பரப்பி, அதன்மேல் கும்பத்தை வைக்கிறார் சாஸ்திரிகள். அந்தக் கும்பத்தைச் சுற்றி நூலால் சுற்றுகிறார். இதுவும் மின்சாரத் தடைக்காகத்தான்.

அதன்பின் அந்தக் கும்ப ஜலத்துக்குள் தங்க மோதிரமோ, தங்கநகையையோ போடுகிறார். மூன்று உலோகங்கள் ஒன்றுக்கொன்று அதிகமாக மின்சார அலைகளைப் பரப்பி கிருமிகளைக் கொல்கின்றன. அடுத்து அந்தக் கும்ப ஜலத்துக்குள் துளசி, கற்பூரம், ஏலக்காய்களைப் போடுகிறார். அந்த நீர் மூலிகைத் தன்மையும் பெறுகிறது. அதன்பின் மாவிலைக்கொத்தை கும்பத்திலுள்ள ஜலத்தின்மீது படும்படி வைக்கிறார். மாவிலைக்கும் ஒரு விசேஷமுள்ளது.

# நிவாரணம்!

**மா**வின் மணம் Diphenyle ether அல்லது Diphenyle oxide என்ற வேதியியல் பொருளாகும். இதனை பரிசோதனைக் கூடத்தில் (lab) தயாரித்தால் மிகுந்த நச்சுள்ள பொருளான டைபைனைல் ஆக்ஸைட் / டைபைனைல் ஈதர் கிடைக்கப்பெறும். இந்த நச்சுப் பொருள் நமக்கு நச்சுத்தன்மை இல்லாத பொருளாக இயற்கை அன்னை தருகிறாள். இதுதான் மாவின் மணம். இது பல கிருமிகளைக் கொல்ல வல்லது.

பரிசோதனைக் கூடத்தில் டைபைனைல் ஆக்ஸைட் / டைபைனைல் ஈதர் தயாரிக்கும் முறையில் தயாரித்துதான், இந்த நச்சுப் பொருளை மாங்காய் எஸென்ஸ் என்று விற்கிறோம்.

நாம் கும்பத்துக்கு வருவோம். இந்த மாவிலைக் கொத்தின்மீது சாஸ்திரிகள் முழு தேங்காயை வைக்கிறார். அப்படித் தேங்காயை வைக்கும்போது சில தேங்காய் மேல் ஒட்டி இருக்கும் தேங்காய் நார்கள் / தூள் கும்ப ஜலத்தில் விழுகிறது.



தேங்காய் நாரின் குணம் என்ன? ஒரு பத்திரிகையில் படித்ததாக ஞாபகம். தேங்காய் நார்கள், தேங்காய் மட்டை மிதக்கும் குளங்களில் கொசுவின் லார்வாக்கள் உயிருடன் இருப்பதில்லை. அவை இறந்து போகின்றன.

**ஆ**க சாஸ்திரிகள் ஜபதபங்கள் முடிக்கும் வரை அதாவது ஒன்று அல்லது ஒன்றரை மணிநேரம் ஊறுகிறது கும்ப ஜலத்தில். இதனால் எல்லாவித கிருமிகளையும் கொல்லும் சக்தி பெறுகிறது இந்தக் கும்ப ஜலம்.

இந்தக் கும்ப ஜலத்தை சாஸ்த்ரிகள் வெள்ளி அல்லது செம்பு உத்தரிணியால் எடுத்து எல்லோருக்கும் வழங்கும்போது ''சர்வ பாப விநாசனம், சர்வவியாதி நிவாரணம்'' என்று சொல்கிறார். அதோடு இந்தக் கும்ப ஜலத்தில் செருகி வைக்கப் பட்டிருந்த மாவிலைக் கொத்தினால் மற்றவர் மீது தெளிக்கிறார். இது எல்லோர் மீதும் படுகிறது.

இதனால் பாபம் போகிறதோ இல்லையோ உத்தரிணியால் வழங்கப்பட்ட கும்ப ஜலம் உடலுக்குள் போயும் விடெங்கும் தெளிக்கப்பட்டும் வியாதி நிவாரணம் தருகிறது முற்றிலும் உண்மைதான்.

- எஸ்.மகாலக்ஷ்மி, அஹமதாபாத்

# என் செல்லமே!



தாத்தா : ஆர்.பாலசுப்ரமணியன்
பாட்டி : பா.பார்வதி
பேத்தி : ஸ்நேஹா



தாத்தா : ஸ்ரீனிவாசன்
பாட்டி : ஸ்ரீலக்ஷ்மி
பேரன் : சோமஸ்கந்தன்



தாத்தா : ஏ.பிச்சைப்பிள்ளை
பாட்டி : கல்யாணி
பேரன் : ஷியாம்சுந்தர்
பேத்தி : கவிப்பிரியா





தாத்தா : சு.வைத்தியநாதன்
பாட்டி : கிரிஜா
பேத்தி : பிரார்த்தனா



தாத்தா : பாலசுப்ரமணி
பாட்டி : சுசீலா
பேத்தி : ஜெ.ஜெசிகா



தாத்தா : டி.ஆர்.உதயகுமார்
பாட்டி : விஜயா
பேரன் : தீரஜ்
பேத்தி : ஷிவானி

ஆல்பம்

# பாட்டி

கீதா பென்னெட்

"அம்மா... தோசை ரெடியா?'' என் கழுத்தைக் கட்டிக் கொண்டபடியே கேட்டாள் என் பெண் பாமினி. வருகிற ஆவணியில் பதினேழு முடிந்து பதினெட்டு ஆரம்பிக்க போகிற டீன்.

''குட் மார்னிங் அம்மம்மா...'' அவள் காலை வணக்கம் சொன்னது என்னுடைய பாட்டிக்கு. அதாவது அவளுக்குக் கொள்ளு பாட்டி. சமையல் அறையிலேயே தரையில் ஒரு மணை போட்டு, அதன் மேல் அமர்ந்து கொண்டிருந்தவருக்கு இரும்புத் தோசைக் கல்லில் தோசை வார்த்து போட்டுக் கொண்டிருந்தேன்.

பாமினி அதைப் பார்த்துவிட்டு ''ஏன் அம்மாவை இப்படி படுத்தறே? உனக்கு இன்னும் உங்கக் காலத்து இரும்பு தோசைக் கல்லில் தான் பண்ணணுமா? நான்ஸ்டிக்லே பார். ஜோரா மெல்லிசா எண்ணெயே விடாம வார்க்கலாம். மம்மி... எனக்கு நான்ஸ்டிக்லே பண்ணிக் கொடு. ஒரு துளி எண்ணெய்கூட விடக் கூடாது. ஓகே?'' என்றாள். பாமினிக்கு வருடத்தில் முன்னூற்று அறுபத்தி ஐந்து நாட்களும் டயட்தான்.

கோகிலா பாட்டியிடம் இருந்து உடனே பதில் வந்தது. ''ஐய... உடம்பிலே இரும்புச் சத்து வேண்டாமா? அதுக்குத்தான் இரும்பு தோசைக்கல், இரும்பு வாணலின்னு உபயோகிக்கணும். இல்லேன்னா டாக்டர் 'அனீமிக்'னு எழுதிக் கொடுப்பான். காசைக் கரியாக்கி டானிக்கா வாங்கி உள்ளே தள்ளணும். அத்தோட எண்ணெய் விடாம தோசையா? யாரு அதை திங்கறது? சாப்பாட்டிலே கொஞ்சம் எண்ணெய் சேர்க்கணும்.

''உன் வயசிலே என் கன்னமெல்லாம் அப்படியே பளபளன்னு இருக்கும். உன் முகத்தைக் கண்ணாடியிலே பாரு. இதோ இப்பவே முகமெல்லாம் மொறமொறன்னு வறண்டு கிடக்கு.''

''அதுக்குதான் மாயிஸ்ட்ரைசர் தடவிக்கிறேன். உன் பழங்காலப் பழக்கத்தை எல்லாம் விடு. நாம இப்ப இண்டர்நெட் யுகத்திலே இருக்கோம்.''

''என்னவோம்மா... நாங்க அப்படிதான் இருந்தோம். இதோ இப்ப எண்பத்து மூணு வயசு. இன்னும் கீழே உட்கார்ந்தா எழுந்துக்க முடியறது. வயசுக்குட்டி நீ. தரையிலே உட்கார்ந்தா உன்னை யாராவது கைக் கொடுத்து தூக்கி தான் நிறுத்த வேண்டியிருக்கு.''

''பாமினி... தட்டை எடு. உனக்கு நான்ஸ்டிக்கில் வார்க்கிறேன்...'' என்றபோது பாமினி 'ஸ்ஸ்ஸலோ... ஸ்வீட் மம்மி...' என்று என்னைக் கட்டிக் கொண்ட வேகத்தில் கொண்டையாக முடிந்திருந்த என் கூந்தல் அவிழ்ந்து விட்டது.

''இந்தா சமைக்கும்போது இப்படி இருக்க கூடாது. அப்படியே ஒரு க்ளிப் போட்டு கட்டிவிடேன்'' என்றேன்.

''வாவ், அம்மா உனக்கு சில்க்கி ஹேர். என்ன பண்றே? உன்னைப் பார்த்தா எனக்குப் பொறாமையா இருக்கு. எனக்கு தோள்பட்டைக்கு மேல் முடி வளர மாட்டேங்குது'' என்று செல்லமாக அலுத்துக்கொண்டாள்.

**நா**ன் பதில் சொல்லுமுன் பாட்டிக்கும் பேத்திக்கும் விவாதம் மீண்டும் ஆரம்பித்துவிட்டது. ''ஆமா, உன் அம்மா பிறந்த அன்னியிலிருந்து தலைக்கு நல்லெண்ணெயைத் தவிர வேற உபயோகிச்சிருக்காளா கேளு. எண்ணெயை

நல்லா காய்ச்சித் தேய்க்கக்கணும். சீயக்காயை வெந்தயம், செம்பருத்தின்னு சேர்த்து வெயிலில் காய வச்சு பொடியா அரைக்கணும். இப்படிப் பார்த்துப் பார்த்து செஞ்சதாலதான் இன்னிக்கும் அவளுக்கு முழங்காலுக்குக் கீழே சாட்டையா விழறது.

''உனக்கு ஷாம்பு குளியல். தலைக்கு எண்ணெய் தடவிக்கற பழக்கமே இல்லை... அதுக்கு மேலே சீப்பை போட்டு வறட்டு வறட்டுன்னு இழுத்தா முடி என்னத்துக்கு ஆகும்?''

''இப்பல்லாம் என்ன ஃபேஷன் தெரியுமா? ரெட் கலர் ஹேர்தான்... எந்த நிறத்திலே வேண்டுமானாலும் பார்லருக்குப் போய் சொன்னா போறும். உடனே செஞ்சு கொடுத்துடுவாங்க...''

''எங்க காலத்திலேயும் அது உண்டு. மருதாணியை நல்லெண்ணையோடு சேர்த்துக் காய்ச்சுவோம். நாங்க பார்க்காத ஃபேஷனா''

**த**ன்னுடைய தட்டை எடுத்துக் கொண்டு டைனிங் டேபிள் அருகே உட்கார்ந்த பாமினி, ''அம்மா, இந்தச் சனிக்கிழமை மாலினியோட கலீக் சமந்தா வரா. ஞாபகம் இருக்கு இல்லை?'' என்று சொல்லிவிட்டு ''அம்மம்மா... உனக்கு எதிரா இனிமே நான் மட்டும் இல்லை. அல்ட்ரா மாடர்னா ஒர் அமெரிக்க பொண்ணும் வரப் போறா. நீ அவளோடயும் சண்டை போடறியா பார்க்கலாம்...'' என்று சிரித்தாள்.

மாலினி கலிஃபோர்னியாவில் சாஃப்ட்வேர் என்ஜினியர் புருஷனுடன் வாழ்பவள். பேங்க் ஆஃப் அமெரிக்காவில் வேலை. அவளுடன் வேலை செய்கிற சமந்தா வேலை விஷயமாக பெங்களூர் வருகிறாளாம். சென்னைக்கு வந்து எங்களுடன் நான்கு நாட்கள் தங்கப் போவதாக முன்பே தெரிவித்திருந்தாள்.

**பா**மினியும் நானுமாக சமந்தாவை அழைத்து வர விமான நிலையத்துக்குப் போனோம். எங்களை அடையாளம் கண்டு கொண்ட அந்த அமெரிக்கப் பெண் ''வணக்கம், சௌக்கியமா? என்னை உங்க வீட்டில் தங்க வைப்பதற்கு ரொம்ப நன்றி!'' என்று மழலையாகத் தமிழில் பேசியதை ஆச்சரியமாகக் கேட்டோம். அவளுக்கும் மாலினி வயதுதான் இருக்கும். திருமணம் ஆகி ஒரு வருடம்தான் ஆகிறது என்று ஏற்கெனவே சொல்லியிருந்தாள்.

காரில் வீட்டுக்கு வரும்போது சமந்தா தன்னைப் பற்றி சொன்னாள். ''என்னுடைய ஒரே ஆசை சென்னைக்கு வர



**ப**ள்ளி, கல்லூரிகளில்
விழாக்கள் நிறைவுறும்போது
தேசிய கீதத்தை
ஒலிநாடாவில் ஒலிக்கச்
செய்வார்கள். அதைத்
தவிர்த்து, வாயால் பாடச்
செய்தால் நாட்டுப்பற்று,
மொழிப்பற்று, இளந்தளிர்கள்
மனத்திலும் வளருமே!

- தேவீஸ்,
மதுரை - 2



# பழைய கார் வாங்கும்போது...

*இன்றைய பொருளாதார சரிவின் காரணமாக பலர் காரை விற்கிறார்கள். பழைய காரை வாங்கும்போது...*

கார்களைப் பற்றி நன்றாகத் தெரிந்த ஒருவரைத் துணைக்குக் கூட்டிக் கொண்டு போவது நல்லது. காரின் பாகங்கள் ஒரிஜினல்தானா என்று 'செக்' பண்ணுங்கள். ஏர் கண்டிஷனிங், சென்ட்ரல் லாக்கிங் சிஸ்டம், பவர் ஸ்டியரிங், ஆட்டோமேடிக் விண்டோ சிஸ்டம் போன்றவற்றைப் பரிசோதியுங்கள்.

ஏழு வருடங்களுக்கு மேல் ஆன காரை வாங்க வேண்டாம். கார் சொந்தக்காரரிடம் ''ஏன் காரை விற்கிறீர்கள்?'' என்று கேளுங்கள். காரை ஓட்டிப் பார்க்கும்போது பல தரப்பட்ட வேகங்களில் ஓட்டிப் பார்க்க வேண்டும். அப்போது காரின் ஜன்னல்களை மூடிவிட வேண்டும். ரேடியோ, சி.டி போன்றவற்றை நிறுத்தி விட வேண்டும். அப்போதுதான் காரிலிருந்து அசாதாரணமான ஒலி ஏதாவது வருகிறதா என்று கண்டு பிடிக்க முடியும்.

**- அனிதா ராமச்சந்திரன், பெங்களூரு**

---

வேண்டும் என்பதுதான். ஏன் தெரியுமா? என்னுடைய பெற்றோர் நேவியில் இருந்ததால் ஊர் ஊராகச் சுற்றும் வேலை. அதனால் என்னை, அம்மா வழி பாட்டியும் தாத்தாவும்தான் வளர்த்தார்கள். அவர்கள் இருவரும் பீஸ் கோர் வேலைக்காகச் சென்னையில் பல வருடங்கள் வாழ்ந்திருக்கிறார்கள். அதனால் ஒரிரு வார்த்தைகள் தமிழில் தெரியும்.

''இப்ப அவங்க இரண்டு பேரும் இல்லை. ஆனா, சென்னையைப் பற்றி, உங்கள் வாழ்க்கை முறை பற்றி வாய் ஓயாமல் என் தாத்தா பேசிக்கொண்டே இருப்பார். அமெரிக்கா இப்போதுதான் புதிதாக பிறந்த நாடு. அதை 'மெல்டிங் பாட் (melting pot)' என்று சொல்வார்கள்.

''பல்வேறு நாடுகளிலிருந்து வந்து குடியேறியவர்கள்தான் அமெரிக்காவை உருவாக்கியிருக்கிறார்கள். அதனால் அமெரிக்க கலாசாரம் என்று தனியாக இல்லை. ஆனால், இந்தியா உருவாகி எத்தனை எத்தனை நூற்றாண்டுகள் ஆகிறது? ஆயிரத்துக்கும் மேற்பட்ட வருடங்களாக நிலைத்து நிற்கிறது என்பதிலிருந்தே இந்தியர்கள் மிகவும் அதிபுத்திசாலிகள் என்று புரிகிறதே. அது எப்படிபட்ட கலாசாரமாக இருக்க வேண்டும் என்று தாத்தா ஆச்சரியப்பட்டு சொல்லுவார்'' என்றாள்.

நாங்கள் வீட்டுக்கு வந்தோம். சமந்தாவைப் பாட்டிக்கு 'நம்ம மாலு ஃப்ரண்ட்...' என்று அறிமுகப்படுத்தினேன். அவள் அழகாக கைக்கூப்பி வணக்கம் சொன்னாள்.

**பா**ட்டியுடன் பாமினிக்கே ஒத்துப் போகலையே, சமந்தாவுடன் என்ன ஆகுமோ என்ற சிறு கவலை தோன்றியது...

**(அடுத்த இதழில் முடியும்)**




# பல் கொழுக்கட்டை!

கிராமங்களில் குழந்தைக்கு முதன் முதலாகப் பல் முளைப்பதைப் பார்த்தவுடன் நல்ல நாள் குறித்து அக்கம் பக்கத்தினருக்குச் சொல்வார்கள். அன்று விரதம் இருந்து பல் கொழுக்கட்டை செய்து, ஸ்வாமி முன்பாகக் கோலமிட்டு விளக்கேற்றுவார்கள்.

ஒரு தாம்பாளத்தில் நகை, பணம், இரும்புப் பொருள், பேனா, புத்தகம், துணிகள் முதலியவற்றைப் பரப்பி வைப்பார்கள்.

குழந்தையைக் குளிப்பாட்டி அலங்கரித்து, சாமி கும்பிட்ட பிறகு தாம்பளத்தின் முன்பாகவிடுவர். குழந்தை, எந்தப் பொருளை முதலில் எடுக்கிறதோ, அதற்கு ஏற்றபடி அதன் எதிர்காலத்தை உயர்வாகப் பேசி மகிழ்வர்.

பேனா, புத்தகம் என்றால் எழுத்து, படிப்பு சார்ந்த துறையிலும் நகைகள் எடுத்தால் பெரும் பணக்காரனாகி நகைக்கடை வைப்பான் என்றும் குறிப்பிட்டுப் பேசுவர்.



இப்படி நல்ல விஷயங்களாகப் பேசி பெற்றோரை உற்சாகப்படுத்துவர்.

- ஜி.கே., புதுக்கோட்டை



# விதை காணிக்கை!

திருச்செந்தூரிலிருந்து, சுமார் பதின்மூன்று கி.மீ. தொலைவில் உள்ள குலசேகரப்பட்டினத்தில் முத்தாரம்மன் ஆலயம் இருக்கிறது. இங்கு அம்மனுக்குக் காணிக்கையாக ஆமணக்கு விதைகளைச் சமர்ப்பிக்கின்றனர்.

இங்கு நடைபெறும் தசரா விழா மைசூரில் நடப்பது போன்று சிறப்பாக இருக்கும்.

- இரா.கு.சொர்ணாம்பிகை, சேலம்

**எ**ன்னதான் செய்தாலும், தலைமுடியே வளரமாட்டேங்குதுன்னு கவலைப்படறவங்க இதை ஃபாலோ பண்ணுங்க...

1.செம்பருத்தி பூ
2.மருதாணி இலை
3.வேப்பந்தழை
4.கறிவேப்பிலை
5.பொன்னாங்கண்ணி
6.கரிசலாங்கண்ணி
7.வல்லாரைக் கீரை
8.அதிமதுரம்
9.வேம்பாளப்பட்டை
10.வெந்தயம்
11.கார்போக அரிசி
12.வாசனைப் பட்டை
13.நெல்லிமுள்ளி
14.மகிழம் பூ
15.வெட்டிவேர்



# தலைமுடி கருகருவென்று வளர!

**ஒ**ன்றிலிருந்து ஏழு வரை கொடுத்துள்ள பொருள்களைச் சம அளவு எடுத்து, தண்ணீர் விடாமல் அரைத்துக் கொள்ளவும். எட்டிலிருந்து பதினான்கு வரை கொடுத்துள்ள பொருள்களைப் பொடி செய்யவும்.

பதினைந்தாவது எண்ணில் கொடுத்துள்ள வெட்டிவேரைத் துண்டு துண்டாக வெட்டி, தேங்காயெண்ணெயில் போட்டு இலேசாக சூடு படுத்தி, ஆற வைத்து தலையில் தடவி வர நல்ல பலன் கிடைக்கும்.

-ஆர்.கே.பொன்னிமோகன்,
காரைக்கால்

# வாடிக்கையாளர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றி!

# ஆடிமாத சிறப்பு தள்ளுபடி விற்பனை ஆரம்பம்...

## 1.8.2009 to 31.08.2009



உங்கள் கண்களை கவரும் Temple Jewels, பல வண்ணங்களில், பலவித டிசைன்களில் உங்கள் பல்சானி ஜுவல்லர்ஸ்-ல் மிகமிக குறைந்த விலையில் அறிமுகமாகி உள்ளது.



இளைய தலைமுறையை கண்டிமிழுக்கும் வெள்ளியில் பதித்த அமெரிக்கன் டயமண்ட் நகைகள். அழகான டிசைன்களில்.. குறைந்த விலையில்!

பாலீஷ் போய்விடுமோ என்ற கவலை வேண்டாம். மீண்டும் பாலீஷ் செய்து கொள்ளலாம். இதன் விலை ரூ.1000/- முதல் ஆரம்பம்.

**நீங்கள் வாங்கிச் செல்லும் 1/2 கிராம் தங்க நகையை உபயோகப்படுத்திய பின் ஆறு மாதத்துக்குள்ளும், ஒரு கிராம் தங்க நகையை உபயோகப்படுத்திய பின் ஒரு வருடத்திற்குள்ளும் எங்களிடம் திருப்பித் தந்தால், 50 சதவிகிதம் தள்ளுபடி செய்து வேறு புதிய நகையை எங்களிடம் பெற்று மீண்டும் நீங்கள் ஜொலிக்கலாம்.**



**உங்கள் வாழ்க்கையில் வளம் பெற, வியாபாரத்தில் செழிக்க, கண்களை கவரும் விலை உயர்ந்த ஒரிஜினல் ராசிக்கற்களை வெள்ளியில் பதித்து 350 ரூபாய்க்கு குறைந்த விலைக்கு விற்பது நாங்கள் மட்டும்தான் இது தவிர 22 கேரட் ராசிக்கல் மோதிரம் உண்டு. அதுவும் 100 சதவிகிதம் உத்திர வாதத்துடன்.**



ஒரு வித ஸ்பெஷல் உலோகத்தின் மேல் 1/2 கிராம் அல்லது 1 கிராம் தங்கம் 'கோட்' செய்யப்பட்டு உருவாக்கும் தங்க நகைகள்தான், இன்றைய பேஷன் உலகின் நவநாகரீக மங்கைகளின் உள்ளத்தில் நம்பர் ஒன் இடத்தை பிடித்திருப்பது!

நீங்கள் வாங்கிச்செல்லும் மூக்குத்தி ஜோடியை தோடுகள் மேல் தோடாகவும் அல்லது குழந்தைகளுக்கு தோடாக அணிவித்தும் அழகுபடுத்தலாம். பரவசப்படுத்தும் எண்ணற்ற வண்ணங்களில் 22 கேரட் தங்கத்தினால் தயாரிக்கப்பட்ட மூன்று மூக்குத்தி வாங்குபவர்களுக்கு ஒரு Silver Coin இலவசம்.

### சிறப்புச் சலுகைகள்:

(1gm மற்றும் American Diamond நகை வாங்குபவர்களுக்கு மட்டும்)

உங்கள் நகைகளுக்கு 100% உத்திரவாதம் உண்டு.
ரூ. 100 முதல் ரூ. 1000 வரை மாத சீட்டு உண்டு.
ரூ 500 முதல் ரூ 1,500 வரை வாங்குபவர்களுக்கு ஒரு ஜோடி American Diamond கம்மல் இலவசம்.
ரூ 1,500/- முதல் ரூ. 2,500/- வரை வாங்குபவர்களுக்கு 5per கம்மல் இலவசம்
ரூ 2,500/- க்கு மேல் வாங்குபவர்களுக்கு ஒரு American Diamond Necklace Set




**பல்சானி ஜீவல்ஸ் நகைகளை ஆன்லைன் மூலமாகவே வாங்கலாம்! எங்களுடைய புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ள இணையதளம் www.sripalsanijewels.com மூலம் நகை வாங்குபவர்களுக்கு டெலிவரி சார்ஜில் 50% சிறப்புத் தள்ளுபடி வழங்கப்படும்**

# Sri Palsani Jewels

110, Dr. ராதாகிருஷ்ணன் சாலை, மைலாப்பூர், (ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட் ஸ் அருகில்), சென்னை - 4.
Ph. 2811 1737, 2811 7036 www.sripalsanijewels.com

**ஸ்ரீ வாராஹியை ஆடி மாதத்தில் வரும் வளர்பிறை சுக்ல பஞ்சமியில் செவ்வரளிமாலை சாத்தி, தேங்காய் உடைத்து, நெய்தீபம் ஏற்றி, சர்க்கரைப் பொங்கல் நிவேதனம் செய்து விநியோகம் செய்தால், அனைத்து நன்மைகளும் சகல சௌபாக்கியங்களும் வந்து சேரும்!**



# ஆராதிப்போம்

அன்னை பராசக்தி ஏற்கின்ற எண்ணற்ற வடிவங்களில் முதன்மை ஸ்தானத்தில் வல்லமையுடன் இருப்பவள் ஸ்ரீவாராஹி. வாராஹ ரூபத்தில் பூமியைப் பிரளயத்தின் அடியிலிருந்து வெளிகொணர்ந்த விஷ்ணுவின் துணைவியாக, பூமா தேவியாக, ஸ்ரீவாராஹி வருகின்றாள். கம்சனுக்கு எட்டுக் கரங்களுடன் காட்சியளித்து, கிருஷ்ணாவதாரத்தைத் தெரியப்படுத்தியவள் இந்த ஸ்ரீவாராஹிதான். ராஜ ராஜேஸ்வரியின் சேனைத் தலைவியும் ஸ்ரீவாராஹிதான்.

வேத காலத்தில் வாக்தேவியாகவும் - சரஸ்வதியாகவும் வழிபடப் பட்ட தேவி! திருப்பதி அலர்மேல் மங்கையின் சேனைத் தலைவியாக ஸ்ரீவாராஹி விளங்குவதாக தேவி மகாத்மியம் கூறுகிறது. திருப்பதியின் ஆதி முதல் தெய்வம் ஸ்ரீ வராகமூர்த்தி. அவருக்கே முதல் பூஜை. அவரது அனுமதியுடன் தான் ஸ்ரீநிவாஸ பெருமாள் இங்கே கோயில் கொண்டுள்ளார். இதைத் தவிர குண்டலினி யோக முறையில் நம் உடலில் புருவ மத்தியில் இருக்கும் ஆக்ஞா சக்கரத்திலும் பஞ்சமியாக இருக்கின்றாள்.

சப்தமாதர்களில் ஸ்ரீவாராஹியெனும் சக்தியாக உள்ள அந்தத் தேவியே, அந்த காசுரனை அழிக்க சிவனுக்குத் துணை போனதாக மார்கண்டேய புராணம் தெரிவிக்கின்றது. வாராஹி, பஞ்சமி, விஸ்வ விஜயா பத்ர கௌமுதி, வார்தாளி ஆகிய பெயர்களில் அழைக்கப்படுகிறாள். ஸ்ரீலலிதாவுக்குத் தந்தையாக ஸ்ரீவாராஹியும் தாயாக குருகுல்லாதேவியும் குறிக்கப்படுகிறார்கள்.

உருக்கி வார்த்த பொன்னைப்போன்ற

ஸ்வர்ண நிறமுடையவள். பெண் வடிவத்துடன் கழுத்துக்கு மேல் பன்றி முகம் கொண்டிருக்கிறாள். பழுப்புநிற பிடர்மயிர் துலங்கிட மூன்று நேத்திரங்களுடன் - எட்டுக் கரங்களில் அபயவரத ஹஸ்த்த துடன் சங்கு, சக்கரம் தாமரை, பாசம், உலக்கை, கலப்பை ஆகியவற்றை ஏந்தியவளாய் இருக்கின்றாள்.

சிங்கத்தில் வரும்போது 'சிம்மவருடா' என்றும் குதிரையின் மீது வரும்போது 'அஸ்வருடா' என்றும் எருமை வாகனத்தில் வரும்போது 'மகிஷாருடா' என்றும் - புலி வாகனத்தில் வரும்போது 'வியாக்ரருடா' என்றும் அழைக்கப்படுகிறாள்.

தடைகளைப் போக்கி வெற்றியடைய சுலபமான வழி ஸ்ரீவாராஹி வழிபாடு.



எந்த பிரச்னையாகயிருந்தாலும் ஸ்ரீ வாராஹியைப் பஞ்சமி அன்று வழிபட அடுத்த பஞ்சமி திதிக்குள் பிரச்னை தீர்ந்து விடும். இது அனுபவ உண்மை.

சென்னையிலிருந்து இரண்டு மணி நேரப்பயணம்தான். காஞ்சிபுரத்திலிருந்து, அரக்கோணம் செல்லும் வழியில், திருமால்பூர் என்கிற ரயில் நிலையம் உள்ளது. அதுதான் பள்ளூர் கிராமம்.

ஸ்ரீவாராஹியைப் போல பாசமும் - நேசமும் உடையவள் வேறு யாருமில்லை. ஸ்ரீவாராஹியை, உபாஸனை செய்தால் கண்டிப்பாக அடுத்த பிறவியில்லை. ஸ்ரீவாராஹியின் திருவருள் வழங்கும் ஸ்தோத்திரங்கள் பல உள்ளன.

- **மிருத்யு உச்சாடன வாராஹி ஸ்தோத்திரம்**
- **வாராஹி கல்பம்**
- **ஸ்ரீவாராஹி மாலை** *(தமிழில்) ஸ்ரீசுந்தரேச சர்மா எழுதியது- ராஜராஜ சோழனின் மந்திரி இவர்.*
- **அஸ்வருடா மாலை** *(ஸ்ரீ துர்கை சித்தர் அருளியது)*
- **ஸ்ரீ வாராஹி அஷ்டகம்**

அனைத்து தெய்வங்களுக்கு இருப்பது போலவே ஸ்ரீவாராஹிக்கு என்று தனியே மந்திரம், தந்திரம், எந்திரம் முதலிய வற்றோடு சகஸ்ரநாமாவளியும் உண்டு.

ஸ்ரீ வாராஹி மாலை படித்தால், பயம் ஓடிவிடும். ஸ்ரீவாராஹியை வழிபட மாலை நேரமே உகந்தது. இரவுப் பூஜை இன்னும் விசேஷம்.




# வாராஹியை...

சிவனை நோக்கி தவம் இருந்து பூஜித்த பின்னர் பரசுராமர், பரசாயுதம் பெற்ற ஊர் பள்ளூர். இந்தப் பள்ளூர் கிராமத்தின் நடுவே இருக்கும் தெற்கு பார்த்த கோபுரம் சுமார் 1500

## பரிகாரமும் பலன்களும்!

★ ஸ்ரீவாராஹியை பஞ்சமி அன்று நவஅபிஷேகம் செய்ய சகல தோஷங்களும் விலகும். செல்வம் சேரும்.

★ ஸ்ரீவாராஹிக்கு உகந்த புஷ்பம் செவ்வரளி மாலை. ஸ்ரீவாராஹி சன்னிதிக்கு முன்னால், தலைவாழை இலை வைத்து அதன்மேல் பச்சரிசி பரப்பி வைக்கவும். பிறகு, தேங்காய் உடைத்து அதில் நெய் விட்டு தீபம் ஏற்றினால், ஸ்ரீவாராஹி உங்களுடைய பிரச்னையை உடனே முடித்து தருவாள்.

★ பஞ்சமி திதியைத் தவிர, பௌர்ணமி, அமாவாசை, அஷ்டமி, செவ்வாய்க் கிழமை ஆகிய தினங்களும் ஸ்ரீவாராஹிக்கு உகந்த நாட்களாகும்.

★ செவ்வாய் அன்று மாதுளம் பழ முத்துக்களால் ஸ்ரீவாராஹியை அர்ச்சனை செய்ய செவ்வாய் தோஷம் விலகும். திருமணம் உடனே கைகூடும்.

★ தோல் எடுக்காத கறுப்பு முழு உளுந்து வடை நைவேத்தியம் செய்ய தீயஆவிகள், பில்லி, சூன்யம், ஏவல் விலகும்.

★ காரட் துருவலுடன் வெல்லம் சேர்த்து அல்லது காரட் அல்வா நைவேத்தியம் செய்ய, தடைப்பட்ட காரியம் உடனே வெற்றியாகும்.

★ குடும்பத்தில் ஒற்றுமையில்லாமல் ஒருவருக்கு ஒருவர் பகை கொண்டு இருந்தால் கரி நாள் அன்று வழிபடலாம். செவ்வரளி புஷ்ப மாலை சாத்தி, ஒன்பது இளநீரால் அபிஷேகம் செய்து மாதுளம்பழ முத்துக்களால் அர்ச்சனை செய்ய குடும்பப் பிரச்னைகள் உடனடியாக நீங்கும்.

★ செவ்வரளியால் அர்ச்சித்து சிவப்பு நிற பீட்ரூட் சாதம் அல்லது சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியம் செய்து விநியோகித்தால் திருமணம் உடனே கைகூடும்.

★ வளர்பிறை பஞ்சமி அன்று விரதம் இருந்து, ஸ்ரீவாராஹிக்கு அபிஷேக ஆராதனைகள் செய்ய வியாபாரம் நல்ல இலாபகரமாக நடக்கும்.

★ தேய்பிறை பஞ்சமி அன்று நல்லெண்ணெய் தீபம் ஏற்றினால் கிரக தோஷம் நீங்கும்.

★ எதிரிகள் தொல்லை விலக, புது மஞ்சள் துணி திரியால் நெய்தீபம் ஏற்ற நல்ல பலன் கிடைக்கும்.

★ தாமரைத் தண்டு திரியால் நெய்தீபம் ஏற்றினால் முன்வினைகள் நீங்கி செல்வம் பெருகும்.



வருட பழைமையானது. கோயிலில் தெற்கு பார்த்து, எருமை வாகனம் மீது (மகிஷாருடா) ஸ்ரீவாராஹி அமர்ந்த நிலையில் வீற்றிருப்பதன் மூலம், இவளுடைய பெருமையைச் சொல்லிமாளாது. கோயிலில் தெற்கு பார்த்த கோபுரம் இருந்து தெய்வமும் தெற்கு பார்த்து அமர்ந்த நிலையில் இருந்தால், அது மிகப் பெரிய பரிகார ஸ்தலமாகும். பிரதான வாயிலும், தலைவாயிலும் தெற்கு நோக்கியிருந்தால், மிகப் பெரிய உன்னத சக்தி வாய்ந்த, பரிகார ஸ்தலம் என்று சொல்லலாம்.

**- ஸ்ரீரங்கநாதன், சென்னை-24**

வெற்றியை உறுதி செய்யும் சக்திமிக்க ஒரு மந்திரச் சொல் இங்கே தரப்பட்டுள்ளது. 'முதலில்' அதை முறையாகப் பயன்படுத்தி எங்கும் எதிலும் 'நம்பர் 1'ஆக வாருங்களேன்!

# 'முதலில்' என்றும்

- நீங்கள் செய்யவிரும்புகிற காரியங்களில் மற்றவர்களின் ஒத்துழைப்பு வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அவர்களுக்கு உங்களுடைய ஒத்துழைப்பை **முதலில்** கொடுங்கள்.
- எந்தத் தொல்லை, எந்தப் பிரச்னை ஆனாலும் அதைச் சமாளிப்பதற்கான வழி, **முதலில்** நீங்கள் அதற்குத் தயாராக இருப்பதுதான்.



- நம்மை மற்றவர்கள் ஏற்க வேண்டும் என்று கருதினால், பிறர் ஏற்கத்தக்க வகையில் நாம் நம்மை **முதலில்** ஆக்கிக் கொள்ள வேண்டும்.
- சிக்கல் நிறைந்த பிரச்னைகளைத் தீர்க்க வேண்டுமெனில், அவற்றைப் பகுதிகளாகப் பிரித்து **முதலில்** அவற்றை எளிமையாக்கிக் கொள்ள வேண்டும்.
- நாம் எதிலும் நீடித்திருக்க விரும்பினால், நடைமுறையில் உள்ள சுற்றுச் சூழலுக்கு ஏற்ப **முதலில்** நம்மை சரி செய்து கொள்ள வேண்டும்.
- மற்றவர்களை வெற்றி கொள்ள **முதலில்** அவர்களைப்

பாராட்டுங்கள், ரசியுங்கள். முக்கியமான வர்களாகக் கருதுங்கள். அவர்கள் தேவைப் படுகிறவர்கள் என்ற உணர்வை ஏற்படுத் துங்கள்.

● **முதலில்** தோல்விகளில் இருந்து பாடம் கற்றுக் கொள்ளவும். தோல்வியே வெற்றிக்குப் படிகள் என்பதை உணரவும். தோல்விகள் என்பது ஒரு பாடம்; அவை இழிவு அல்ல.

● வெற்றி பெறுவதற்கெல் லாம் முதல் படியாக நீங்கள் **முதலில்** நீங்கள் வெற்றி பெற்று விட்டவரைப் போன்று சிந்தித்து உணர்ந்து செயல்படுங்கள்.

● மற்றவர்களின் நல்லெண்ணத்தை நீங்கள் பெறவிரும்பினால் **முதலில்**

# மந்திரச் சொல்!



**முதலில்** நம்பிக்கை கொள்ள வேண்டும். பிறகு கடின உழைப்பும் மேற்கொள்ள வேண்டும். அதுவும் தொடர்ந்து இருக்க வேண்டும்.

● உங்களுடைய ஆழ்மன விருப்பங் களை உள் மனத்தின் அளவற்ற சக்தி மூலமாக நடைமுறைக்குக் கொண்டு வர நீங்கள் விரும்பினால் **முதலில்** அதை இரண்டு விநாடி லட்சியக் கட்டளைகளாக உள் மனத்தில் பதிய வைத்து விடுங்கள். ஒவ்வொரு நாளும் பல முறைகள் இதை ஜெபிக்க வேண்டும்.

● **முதலில்** எது அச்சத்தை ஏற் படுத்துகிறதோ அதை வலுக் கட்டாயமாகச் செய்ய வேண்டும். அடுத்தடுத்து செய்ய வேண்டும்.

● மற்றவர்களிடம் உள்ள வல்லமை யைப் பெற அல்லது பயன்படுத்திக் கொள்ள **முதலில்** அவர்களுடைய உள் மனத்தின் விருப்பங்களை நிறைவு செய்யுங்கள். அல்லது உதவி செய்யுங் கள்.

● நீங்கள் வெற்றிபெறவிரும்பினால்,

உங்கள் நல்லெண்ணத்தை மற்றவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும்.

● மற்ற நண்பர்களைக் கவர்ந்திட நீங்கள் விரும்பினால், உங்கள் நட்பை **முதலில்** மற்றவர்களுக்கு வழங்க வேண்டும்.

● உங்களைப் பிறர் நேசிக்க வேண்டும் என்றால் **முதலில்** மற்றவர்களை நீங்கள் நேசிக்க வேண்டும்.

*நன்றி :* **டாக்டர் எம்.ஆர்.காப்மேயர்**

**- கே.ஏ.ஜெயராமன், சென்னை-94**

# பயன்பெறும் நோயாளிகளின் மனம் திறந்த எண்ணங்கள்!!

சத்தான உணவு சுவைத்து மகிழும் ஏழை நோயாளிகள்

இந்த தர்மசாலாவில் நானும் என் அம்மாவும் ஒன்பது மாதங்களாக தங்கியிருக்கிறோம். இங்கு தினமும் நல்ல உணவு வழங்குகிறார்கள். எங்களுக்கு உறவினர்களோ, பண வசதியோ இல்லை. தர்மசாலா இல்லாவிட்டால் எனக்கு வைத்தியம் செய்யமுடியாத நிலைமை ஏற்பட்டிருக்கும். இங்கு நாங்கள் மிகவும் சந்தோஷமாக இருக்கிறோம். இங்கு இருக்கும் அனைவரும் நன்றாக இருக்க வேண்டும் என அல்லாவை வேண்டுகிறேன்.

**அஷ்ரப்** (12 வயது) O.P.No.10850/08

என் அம்மாவிற்கு மார்பக புற்றுநோய். ஆறு மாதங்கள் சிகிச்சை பெற்றாக வேண்டிய சூழ்நிலையில் பயத்துடன் குழம்பினேன். கேன்சர் மருத்துவ மனையின் ஆலோசனை மூலம் ஸ்ரீ மாதா டிரஸ்ட் நடத்திவரும் இந்த தர்மசாலாவில் நானும் என் அம்மாவும் தங்கி உள்ளோம். இங்கு நாங்கள் பாதுகாப்பாக இருக்கிறோம். மனிதனுக்கு மிகவும் அவசியமானது உணவு, உடை, இருப்பிடம். இவை மூன்றையும் இங்கு எங்களுக்கு கொடுக்கிறார்கள். எங்கள் வீட்டில் உள்ளது போலவே உணர்கிறோம்.

**சுஜிதா** (21 வயது)

ஒன்பதாம் வகுப்பு படித்துக் கொண்டிருக்கும் எனக்கு கழுத்தில் புற்றுநோய் வந்துள்ளது. நான் தர்மசாலாவில் மூன்று வாரங்களாக தனியாக தங்கியிருக்கிறேன். இங்கு சாப்பாடு மிகவும் நன்றாக இருக்கிறது.

நான் இங்குதனியாக இருந்தாலும் பாதுகாப்பாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறேன். என்னை இங்கு நன்றாக பார்த்துக்கொள்கிறார்கள்.

**சிவசக்தி** (14 வயது) O.P.No.2186/08



உணவு சமைக்கும் தாத்தா பாசத்துடன் உணவு பரிமாறுகிறார்



புற்றுநோயின் வலியை மறந்து, இயற்கை காற்றை சுவாசிக்கும் நோயாளிகள்

## உங்கள் உதவிகளை இப்படி அளிக்கலாமே ...

- ஒரு நாளைக்கு ஒரு நோயாளியின் உணவுக்காக ரூ.60 அளிக்கலாம்.
- ஒவ்வொரு மாதமும் ஒரு நோயாளி என்ற அடிப்படையில் ஆண்டு முழுவதும் ரூ.720 அளிக்கலாம்.
- காலை சிற்றுண்டி மட்டும் கொடுக்க ரூ.2000 வழங்கலாம்.
- ஏழை நோயாளிகளுக்கு மதிய உணவு அல்லது இரவு உணவு அளிக்க ரூ.3000 வழங்கலாம்.
- இந்த தர்மசாலாவின் ஒரு நாள் சாப்பாடு செலவான ரூ.7000 அளிக்கலாம்.
- காலை முதல் இரவு வரை முழு நாள் உணவை ஆண்டுக்கு ஒரு முறை கொடுக்க உங்கள் சார்பாக ரூ.60000 கொடுத்து நீங்கள் ஒரு "வள்ளல்" ஆகலாம். நீங்கள் கொடுக்கும் இந்த தொகை டிரஸ்டின் காப்பு நிதியில் சேர்க்கப்பட்டு, அதன் வட்டியிலிருந்து இந்த தர்மம் செய்யப்படும்.
- பெரிய மனதுடன் ரூ.100000 கொடுத்து, நீங்கள் இந்த புனித சேவையின் ஒரு நிரந்தர காப்பாளர் ஆகலாம்.

இந்த மாதம் 'எங்க வாழ்க்கை' பகுதிக்காக நாம் சென்ற இடம் சென்னை தி.நகர் பஸ் நிலையம். அங்கே நம்முடன் தங்கள் பணியில் சந்திக்கும் சங்கடங்கள், சவால்கள், சந்தோஷங்கள் குறித்து மனம் திறந்து பேசினார்கள் மாநகரப் பேருந்துகளில் நடத்துநர்களாகப் பணியாற்றும் பெண்கள்.



கடந்த சில வருடங்களாகத்தான் பெண்களை நடத்துநர் வேலைக்கு எடுத்துக் கொள்கிறார்கள். அதனால், இந்தப் பணியில் இருக்கும் ஆண்களின் எண்ணிக்கையுடன் ஒப்பிடும்போது, எங்கள் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருக்கிறது. ஏற்கெனவே மாநகர போக்குவரத்துக் கழகத்தில் பணியாற்றுபவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள்தான், இந்த வேலையைத் தேர்ந்தெடுத்து விண்ணப்பிக்கிறார்கள். அவர்களுக்கு வேலை கிடைத்திருக்கிறது.

★ எங்களுடைய காக்கி யூனிஃபாரத்தைப் பார்த்து ஒரு சிலர் எங்களை பெண் போலீஸ் என்று தவறாக நினைத்துவிடுகிறார்கள். ''டிக்கெட்! டிக்கெட்!'' என்றதும், ''ஓ! நீங்க கண்டக்டரா? போலீஸ்னு நெனச்சிட்டேன்'' என்று சொல்லிவிட்டு, காசை நீட்டுவார்கள்.

★ வேலைக்குச் சேர்ந்த முதல் தினம், தடத்தில் சென்றபோது, டென்ஷனாக இருந்தது. பயணிகள்

# ''உதைத் தள்ளுறாங்க!''

எல்லோருக்கும் டிக்கெட் கொடுக்க வேண்டும்; அதற்குரிய காசை வாங்கிக் கொண்டு, சில்லறை தரவேண்டும். இதற்கிடையில் பஸ் ஸ்டாப் வந்தால் விசில் கொடுத்து, பஸ்சை நிறுத்தி, பயணிகளை ஏற்றிக் கொள்ள வேண்டும். பழகும்வரை சிரமம்தான்.

★ நடத்துநர்களுக்கென்று பஸ்ஸில் சீட் ஒதுக்கப்பட்டிருக்கும். ஆனால், பயண நேரம் முழுக்க அதில் உட்கார்ந்தபடியே டிக்கெட் கொடுப்பது சாத்தியமில்லை. பஸ்ஸில் முன்னுக்கும், பின்னுக்கும் நடந்துகொண்டே, டிக்கெட் கிழித்துக் கொடுக்க வேண்டும்.

★ காலையில் ஐந்து மணிக்கு பஸ் புறப்படும் நேரம் என்றால், குறைந்தது அரை மணி நேரம் முன்னதாகவாவது டியூட்டிக்கு ரிப்போர்ட் செய்ய வேண்டும். டிக்கெட் கட்டுகளை வாங்கிக் கொண்டு, அதற்குரிய டிரிப் ஷீட்டில் டிக்கெட் வரிசை எண் விபரங்களைக் குறித்துக் கொண்டு, பஸ்ஸை எடுக்க வேண்டும்.

★ அதிகாலை டியூட்டிக்கு வர, பிக் அப் பஸ் சர்வீஸ் உண்டு என்றாலும், பஸ் பிடிக்கும் இடத்துக்கு சரியான நேரத்தில் வந்துவிட வேண்டும். அந்த பஸ்சை பிடிக்க முடியாமல் போய்விட்டால், பெரும் பிரச்னைதான்.

★ சில சமயங்களில் திடீரென்று முதல் ஷிஃப்ட் முடிந்து, அடுத்த ஷிஃப்ட்டுக்கு வரவேண்டிய கண்டக்டர் வரமாட்டார். அப்போது, தொடர்ந்து அடுத்த ஷிஃப்ட்டும் பார்க்க வேண்டியிருக்கும். இரண்டாவது ஷிஃப்ட் முடிந்து வீடு திரும்ப இரவு பதினொரு மணியாகிவிடும். அப்படிப் பட்ட நாட்களில் உடல் களைப்பு அதிகமாயிருக்கும்.

★ பஸ் பயணத்தின்போது இளசுகளின் தொல்லை தாங்காது. எவ்வளவு சொன்னாலும் படிக்கட்டை விட்டு மேலே ஏறி, வரமாட்டார்கள். இதனால், மற்ற பயணிகளுக்கு ஏற்படும் சிரமங்கள் பற்றியும் கவலைப்படமாட்டார்கள். படிக்கட்டிலிருந்து தவறி விழுந்து அடிபட்டாலோ, மரணமடைந்தாலோ நாம் விசாரணை, வழக்கு என்று அலையும்படி ஆகிவிடும்.

★ ஒரு பஸ்சின் இயக்கத்துக்கு, டிரைவர், கண்டக்டர் இருவரது ஒத்துழைப்பும் ரொம்ப முக்கியம். பொதுவாக



ஆண் டிரைவர்கள் நல்ல ஒத்துழைப்பு கொடுப்பார்கள். ஏதாவது ஒரு எதிர்பாராத பிரச்னை என்றால், ''நீங்க டென்ஷன் ஆவாதீங்க!'' என்று நம்மை அமைதிப்படுத்தி விட்டு, தாங்களே முன்னின்று பிரச்னையைத் தீர்த்து வைக்க முனைவார்கள். ஆரம்பத்தில், சில டிரைவர்கள் ''என்ன இருந்தாலும், இவள் ஒரு பெண்தானே!'' என்று சற்று ஈகோ பார்ப்பதுண்டு. இருந்தாலும், நாளாவட்டத்தில் அந்த ஈகோ மறைந்து, ஒத்துழைப்பு கிடைத்துவிடும்.

★ பயணிகளைக் கையாள்வது ஒரு தனிக்கலை. கண்டிப்புடன் பேசினால், வாக்குவாதம் ஏற்பட்டு, பிரச்னை பெரிதாகும். வேண்டத்தகாத விளைவுகள் ஏற்படக்கூடும். மென்மையான குரலில் அழுத்தம் திருத்தமாகச் சொல்வதுதான் சரியான அணுகுமுறை.

★ நாம கொஞ்சம் கலகலன்னு பேசிட்டா போச்சு! நம்ம கிட்ட சிலர் வழிய ஆரம்பிச்சுடுவாங்க. இல்லைன்னா நம்மைக் கிண்டல் பண்ணி கலாய்ப்பாங்க. அதனால கவனமா நடந்துக்கணும்.

★ சில சமயங்கள்ல குடிபோதையில் ஏறிடுவாங்க. அவங்களோட தொல்லை தாங்காது. சில பேரு வாந்தி எடுப்பாங்க. அவங்களை இறங்கச் சொன்னாலும் கேட்கமாட்டாங்க. தான் இறங்க வேண்டிய இடம் வந்ததும் பார்த்து இறங்கவும் மாட்டாங்க.

★ எங்களோட மிகப் பெரிய வில்லனே சில்லறைதான்! டிக்கெட் வாங்க சரியான சில்லறை கொடுக்க மாட்டாங்க. ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினால், எவ்வளவு பேருக்குத்தான் சில்லறை தர முடியும்? அதுவும் டீலக்ஸ், ஏ.சி. பஸ் ரூட் என்றால் இந்த ஐம்பது பைசா சில்லறை தரும் டிக்கெட்டெல்லாம் கிடையாது. ரெகுலர் ரூட் என்றால், ஐம்பது பைசா சில்லறை இல்லை என்றால், உடனே, ''இந்த கண்டக்டர்களே எப்பவும் இப்படித்தான்! ஐம்பது பைசா சில்லறைன்னா கொடுக்கவே மாட்டாங்க!'' என்று ஒட்டு மொத்தமாகப் பழிச்சுப் பேசுவாங்க.

★ ''டிக்கெட் வாங்கியாச்சா?''ன்னு தொண்டை வலிக்க கத்துவோம். அப்படியும் சிலர் டிக்கெட் வாங்கமாட்டாங்க! அப்புறம் செக்கிங் வந்தா, அவங்க மாட்டிக்கிட்டாலும் நாமளும் பதில் சொல்லியாகணும்.

★ நெரிசல் மிகுந்த நேரங்கள்ல பஸ் ஸ்டாப்கள்ல கரெக்டா பஸ்சை நிறுத்த முடியாம போறதுண்டு. சற்றே முன்னே, பின்னே நிறுத்தினா, பஸ்ஸில் ஏறினதும் முதல்ல, ''ஏங்க, பஸ் ஸ்டாப்ல கரெக்டா பஸ்ஸை நிறுத்தமாட்டீங்களா?''ன்னு நம்மளைக் கேள்வி கேப்பாங்க.

தொகுப்பு, புகைப்படங்கள் :

**எஸ்.சந்திரமௌலி**



**வீ**ட்டின் மேல் மாடிகளுக்குப் பக்கத்தில் சில இடங்களில் மின்சாரக் கம்பிகள் செல்வதுண்டு. பால்கனியிலோ, மொட்டைமாடியிலோ ஈரத்துணியை உலர்த்தும்போது காலில் ரப்பர் செருப்பு அணிந்துகொண்டு, ஒரு மரக்குச்சியால் துணியை உலர்த்த வேண்டும். இதனால், மின் அபாயத்தைத் தவிர்க்கலாம்.

**- லக்ஷ்மி வாசுதேவன், சென்னை**

# லக்கி லட்டு!

**தோழி/உறவினருக்கு மங்கையர் மலரின் சந்தாவைக் கட்டி, புதிய வாசகியரை சேர்த்து, ஊக்குவிக்கும் நமது வாசகர்களுக்கு நன்றி! வந்து குவிந்தவற்றில் சிலரை அறிமுகப்படுத்துகிறோம். இதன் தொடர்ச்சி இனி வரும் இதழ்களிலும் பிரசுரமாகும்.**

| | சந்தா கட்டியவர் | | சந்தா பெறுபவர் | | நோக்கம் |
|---|---|---|---|---|---|
|  | என்.மோகன சுந்தரி, திருச்சி. |  | எஸ்.மணி, பொன்மலை. |  | மங்கையர் மலர் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்று விருப்பம். |
|  | டாக்டர் அனுஷா நட்ராஜ், மதுரை. |  | மாயா ஜெயக்குமார், மங்களூர். |  | பிறந்தநாள் பரிசு. |
|  | கலாவதி தலையூர், சென்னை. |  | தாரா ஸ்ரீதர், கொல்லுமாங்குடி. |  | கிராம 'மங்கை'யரும் மலரின் மணத்தை நுகர வேண்டும். |
|  | எச்.வனிதா காந்தி, சென்னை. |  | கீர்த்திகா கார்த்திகேயன், சேலையூர். |  | எனது உறவினரும் இப்புத்தகத்தைப் படித்து பயன் பெற வேண்டும். |
|  | சின்னத்தாய் ராமசாமி, ஈரோடு. |  | டி.வி.அனிதார்த்தி, ஈரோடு. |  | நல்ல செய்திகளை அறிய வேண்டும் என்பதற்காகப் பரிசு! |
|  | சு.சண்முகம் மணி, சென்னை. |  | கே.வள்ளி ரத்தினம், சுத்தமல்லி விலக்கு பேட்டை. |  | அருமை மகள் படித்து பயன் பெற... |
|  | எம்.வசந்தா, மதுரை. |  | எஸ்.குணா, ஜல்கான், மகாராஷ்டிரா. |  | நல்ல அனுபவங்களையும் அறிவுரைகளையும் பெற்று வாழ்வில் முன்னேற... |
|  | ஜி.நந்தகுமார், அரியலூர். |  | ஜி.ருக்குமணி, கரூர். |  | 15 ஆண்டுகளாக மங்கையர் மலர் படித்து வரும் என் அம்மாவுக்கு அன்புப் பரிசு. |

இரண்டும் நான் நினைத்த மாதிரி...
மனதுக்குப் பிடித்த மாதிரி...







அமிர்த்தா கிரைண்டர் மற்றும் மிக்ஸி **Style - Quality - Smoothness**

உலகத்தரமிக்க கிரைண்டர்களை வழங்கி வரும் அமிர்த்தாவிடமிருந்து அதே உன்னதத் தரத்துடன் அதிநவீன மிக்ஸிகள். உங்கள் தேவை மற்றும் பட்ஜெட்டுக்கு ஏற்ற பல்வேறு மாடல்கள். இனி மேல் உங்கள் வேலை ஈசி... வாழ்வே ஜாலி...

அமிர்த்தாவிற்கு நிகர் அமிர்த்தா மட்டுமே


Six


Als


Ace


Tit


Astra 550



For Grinder



For Mixe

Available with 110V motor for America and Canada

# அமிர்த்தா®
கிரைண்டர் & மிக்ஸி

இல்லத்தில் அமிர்த்தா... உள்ளத்தில் நிம்மதி.

● **Available at all leading out lets** *Only for ALS 1 year warranty on grinder & 3 year warranty on motor. www.amirthaa.com

**Authorised Distributers : Chennai** 26481013, **North Arcot** 98943 15321, **South Arcot** 94434 40069, **Pondy** 2234342, **Thanjavur** 239561, **Madurai City** 97867 00927, **Madurai Up Country** 99441 22077, **Tirunelveli & Tuticorin** 99949 20275, **Nagarcoil** 93605 83375, **Trichy** 2700728, **Salem** 98427 66377 **Coimbatore** 3249990, **Calicut** 2768433, **Bangalore** 41513919, **Mumbai** 098191 33810

*Mktd. by:* **Minit Engineers (I) P. Ltd.**, Erode - 4, Ph : 0424 - 2227050, 2214259. E-mail : amirthaa_grinder@yahoo.com

காலை எழுந்தவுடன் குக்கர்
முகம் பார்த்து
பின் குடும்பம் உண்ண அதில்
பசியாறும் தாய்கள் நாங்கள்!
கணவருக்குத் தோள் கொடுக்க
உத்தியோக 'சிந்து பாத்'தை
முதுகிலேற்றிய சுமைத்தாங்கிகள்!
சிவனுக்கும் திருமாலுக்கும்
சமமானவர்கள்.
அவர்கள் தலையிலும் மார்பிலும்
சுமந்தாலும் என்ன?
யாம் உயிரிலும், உணர்விலும்
சுமக்கிறோம் யுகயுகமாக!
முப்பதாம் தேதி சூரியனுக்காக
உயிர்க்கும் சூரியகாந்திப் பூக்கள்!!
எம் ஒரே இலக்கு எம்மக்கள்
முன்னேற்றம் - அதை நோக்கி
ஓடும் பந்தயக்குதிரைகள் நாங்கள்!
எங்கள் மனம் குளிர...
பட்டோ, பதக்கமோ வேண்டாம்.
எம் துயர் உணர்ந்து, ஆறுதல் சிரிப்பு
சிந்தும் கணவரே நிதி!
அதில் புது மலர்ச்சி அடைந்து
பயணம் தொடரும்!
இத்தனைத் துயர் இருப்பினும்
எமக்கும் ஒரு போனஸ் உண்டு;
எம்நிலைக் கண்டு, கால புருஷன்
குறைத்துவிட்ட வாழ்நாட்களே அது!
நாங்கள் மறைந்தாலும்
எம் இனம் சிரஞ்சீவி
அதற்கு மாற்றமுமில்லை, மறைவுமில்லை!
எம் பெண்கள், பேத்திகள்
என அது நீளும்...
தத்தம் வாழ்க்கை தனைச் சமர்ப்பிக்கும்!

- பி.எஸ்.கமலா பார்த்தசாரதி, சென்னை





# அது... கனவு! இது... நகைச்சுவை!

கிராமமும் இல்லாத நகரமும் இல்லாத இடைப்பட்ட ஊரில் உள்ள எங்களைப் போன்றவர்களுக்கு, தமிழ்நாடு சுற்றுலா துறையின் கிராமத்துச் சுற்றுலா போக ஆசையா இருக்குங்க! கிராமங்களைச் சுற்றுலா தலங்களாக மாற்றிய பெருமை ஐ.ஏ.எஸ். அதிகாரியான வெ.இறையன்புவையே சாரும்.

**- உமா மோகன்தாஸ், திண்டுக்கல்**
**+ சத்திய நாராயணன், நங்கநல்லூர்,**
**- அ.சம்பத், திருவரங்கம்**
**- ஆர்.பிருந்தா, மதுரை**



மாவுப் பூச்சியின் தாக்குதலிலிருந்து, செடிகள் பட்டுப் போவதைத் தவிர்க்க சுலபமான முறைகளைக் கற்றுக் கொடுத்த வான்மதி கண்ணனுக்கு மனமார்ந்த பாராட்டுகள்!

**- ச.காயத்ரி, மங்கலம்**
**+ கிருஷ்வேணி, குடந்தை**
**- கி.பாலா, தாம்பரம்**



பக்கத்துக்குப் பக்கம் கிராமிய மண் வாசனை. 'மறக்க மனம் கூடலடி' - பக்கங்கள் மறக்க முடியாதவை. 'எங்க ஊர் திருவிழா' - மெய் சிலிர்க்க வைத்தது. காப்பீடு திட்டம் பயன் தரும் திட்டம். 'உடல் நலம்' - உஷார் படுத்துகிறது. 'சுவர் பத்திரிகை' - சூப்பர் 'மண் மணக்குது' - மணம் மயக்குது 'கிராமாயணம்' - கிராமத்துக்குப் பெருமை சேர்க்குது.

**- சுகந்தி நாராயன், சென்னை**
**+ கமலா ராஜசேகரன், பொள்ளாச்சி**
**- டி.மல்லிகாதேவி, பெங்களூரு**
**- சி.அருள்ஜோதி, கடலூர்**
**- சாந்தி கருப்பையன், அம்பாபூர்**
**- ப்ரீத்தா ரங்கசாமி, சென்னை**

ஓவியர் மாருதியின் பசுமையான ஓவியத்தை ரசித்துப் பார்த்தபின், கதையின் இறுதியில் 'கிளிகள், மயில்கள் இறந்து கிடக்கின்றன' என்பதைப் படித்த பொழுது 'ஐய்யோ' என்று அலறி விட்டோம். சிரித்த முகம் காட்டிய மேலாண்மை பொன்னுசாமி, சிந்திக்கவும் வைத்துவிட்டார். வாழ்த்துகள்!

**- என்.ராமசுப்ரமணியன், பெங்களூரு**
**+ ஸ்ரீதேவி ராஜன், திருவிடைமருதூர்**
**- ஜெ.துரைராஜ், சென்னை**



'மலர் கொடுத்து வருகிறோம்' என்ற தலைப்பில் பெண் முகவர்களை, புகைப்படத்துடன் போட்டு அசத்தி விட்டீர்கள். எனது கணவரும் முகவர் தான். இதுவரை எந்தப் பத்திரிகையும் செய்யாததை செய்து விட்டீர்கள். நெஞ்சார்ந்த நன்றி!



**- கே.சுலோசனா, மங்கலம்**



'கிராமங்கள் இன்னும் உயிர்ப்போடு இருக்கின்றனவா?' என்ற கட்டுரையில் இன்றைய கிராமங்களின் பரிதாப நிலை குறித்து வாதிட்டிருந்த வாசகியர்களது வாய்ஸ் மற்றும் பட்டிமன்ற பெண் நட்சத்திரம் பாரதி பாஸ்கர் வழங்கியிருந்த தீர்ப்பு ஆகியவை சூப்பர்! முழு நேரப் பட்டிமன்றம் ஒன்றை ரசித்துப் பார்த்த மனநிறைவைத் தந்தது.

**- எஸ்.நிர்மலாதேவி, திருச்சி**
**+ வி.கலைச்செல்வி, தோட்டக்குறிச்சி**
**- உஷா சுதர்ஸன், திருச்செங்கோடு**
**- டி.சாந்தி, அம்மையப்பன் அஞ்சல்**
**- கே.எஸ்.கோவர்த்தனன், சென்னை**

மங்கையர் மலர் கிராமியச் சிறப்பிதழில் இடம் பெற்ற 'திண்ணை' கவிதை, மலரும் நினைவுகளில் மலரச் செய்தது. மிக அற்புதம்!

**- இராம.வேதநாயகம், வடமாதிமங்கலம்**
**+ ஆர்.கஜலக்ஷ்மி ராஜேந்திரன், லால்குடி**
**- கலாவதி தலையூர், சென்னை**
**- ஆர்.பிரகாஷ், பொன்மலை**
**- எஸ்.அம்புஜம் முராரி, சேலம்**





பாரதியைக் கவர்ந்த பாட்டியின் பாடல் எங்களைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. முளைப்பாரி கும்மிப்பாடல் பாடும் கிராமத்துக் குயிலுக்கு எப்படி நன்றி சொல்வது?

**- வி.மோனிஷா பிரியங்கா, திருச்சி**
**+ ஆர்.ஜி.கல்யாணி, திசையன்விளை**
**- ஆர்.ராஜலக்ஷ்மி, ஹுப்ளி**




'செட்டி பாணை சமையல் 64' இலவச இணைப்பு, கிராமியச் சிறப்பிதழுக்கு சுவை சேர்த்தது என்றால், ஓவியர் பிள்ளையின் கார்டூன்கள் பார்க்க நகைச்சுவையாக இருந்தன.

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**
**+ போ.வெங்கடலக்ஷ்மி, சென்னை**
**- சாந்தி தர்மேஸ்வரன், ஆதம்பாக்கம்**
**- லதா கணேசரத்தினம், திருவாரூர்**
**- வளர்மதி மனோதாஸ், கொட்டாரம்**
**- ஜி.ராஜலக்ஷ்மி, தஞ்சாவூர்**

கிராமத்து மக்கள் படும் வேதனையை வெளி உலகுக்குத் தெரிவித்த 'ரோடு இருக்கு, பஸ்சு இல்ல' புலனாய்வுக்கட்டுரை ரத்தத்தை உறையச் செய்துவிட்டது. உடனடியாக அரசாங்கம் உரிய நடவடிக்கை மேற்கொண்டால் அந்தப் புண்ணியம் மங்கையர் மலருக்குத்தான்.

**- ராஜி குருஸ்வாமி, சென்னை**
**+ லதா காமேஷ், சென்னை**
**- எம்.ஜி.பரத், திண்டுக்கல்; ச.செல்விசம்பத், மங்கலம்**
**- சந்திரிகா சண்முகம், ஒட்டேரி; மேகலா மாணிக்கம், சென்னை**
**- சு.கலாவதிமணியன், பெரணமல்லூர்**



# ஜெயஸ்ரீ ராஜ் நினைவுச் சிறுகதை போட்டி - 2009 முடிவுகள்



முதல் பரிசு ரூ.10,000
**நெஞ்சுக்குள் ஈரம்!** – எஸ்.மஞ்சுளா சிவகுமார், பாபநாசம்.

இரண்டாம் பரிசு ரூ.7,500
**வேம்பு மாமியும், வேப்ப மரமும்!** – பத்மா, ஹைதராபாத்.

மூன்றாம் பரிசு ரூ.5,000
**ஓர் அடி நிலம்!** – டி.வள்ளியம்மை, புதுச்சேரி.

மங்கையர் மலரில் இச்சிறுகதைப் போட்டி, நான்காவது ஆண்டாக நடைபெறுகிறது. கடந்த வருடங்களைவிட, இந்த வருடம் போட்டிக்கு வந்த கதைகள் மிக அதிகம் என்பதோடு, இன்னொரு குறிப்பிடத்தக்க அம்சத்தையும் உணர்ந்தோம். சுற்றுச் சூழல் பாதுகாப்பு, மனித நேயம், உடல்தானம், குழந்தை தத்தெடுப்பு, திருநங்கைகளின் உரிமைகள், முதியோர் நலன் போன்ற விஷயங்களைக் கருவாகக் கொண்ட கதைகளைப் பலரும் எழுதியிருந்தனர். மிக்க மகிழ்ச்சி.

பத்திரிகையாளர் 'பூங்காற்று' தனசேகர், சென்னை, மீனாக்ஷி மகளிர் கல்லூரியின் தமிழ் பேராசிரியை பத்மாவதி விவேகானந்தன் ஆகியோர் நடுவர்களாக இருந்தனர். இவர்களுடன் மங்கையர் மலர் பொறுப்பாசிரியர் அனுராதா சேகரும் பரிசீலித்ததில், மேற்கண்ட சிறுகதைகள் பரிசுக்குரியவையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டன.

முதல் பரிசு பெற்ற கதை இந்த இதழில்... பிரசுரத்துக்குத் தேர்வான மற்ற கதைகளின் விவரம் அடுத்த இதழில்...

பரிசு பெற்றவர்களுக்கு வாழ்த்து. ஆர்வமுடன் கலந்து கொண்டவர்களுக்கு நன்றி!

(ஆர்)



படம் : ஸ்ரீஹரி

# 2 & 3 Bedroom
# DELUXE FLATS FOR SALE
# SRIRANGAM
## TRICHY



# COZY NEST

- Three sides ventilation
- Without common wall
- Generator backup
- Covered car park
- Intercom facility
- Automatic lifts

# C.S. PROMOTERS

10/6, Ammamandapam Road,
Mambalasalai, Srirangam,
Trichy - 620 006. Ph: 0431-2435732,
94431-30733, 94425-80733, 94425-60733
E-mail: cspromoters@yahoo.co.in,
cspromoters@gmail.com
www.cspromoters.com

## ரத்னா சித்த மருத்துவமனை மற்றும் மூலிகை ஆராய்ச்சி மையம்

# பரவும்படை - சோரியாசிஸ்

சோரியாஸிஸ்! தோலில் பரவி வரும் இந்தப் படையானது நகரங்களில் நாகரிக வாழ்வு வாழும் மக்களிடம்தான் அதிகமாகப் பரவி வருகிறது என்று தமது மருத்துவமனைக்கு வரும் விசிட்டர்களைக் கணக்கிட்டுக் கருத்துச் சொல்கிறார் டாக்டர் கே. திருத்தணிகாசலம். இவர் ரத்னா சித்தா மருத்துவமனை மற்றும் மூலிகை ஆராய்ச்சி மையத்தின் இயக்குநர்.

சோரியாஸிஸ் எனப்படும் இந்தப்படை தமிழகத்தில் இருப்பதைந்து ஆண்டுகளாகத்தான் வியாபித்துள்ளது. அதற்கு முன்பு ஏற்பட்ட பசுமைப் புரட்சித் திட்டத்தின் போது, வயல்களிலும் தோப்புகளிலும் இடப்பட்ட இரசாயன உரத்தால் இது தோன்றியிருக்கக்கூடும். அது சமீப காலமாக அதிகமாகி வருகிறது. இது முதலில் தலையில் 0.2 தடிமனில் வட்ட வடிவில் தோன்றும். பிறகு கை, கால்களில் தோன்றி, இறுதியில் முகத்தில் தோன்றும் என்றார் டாக்டர் திருத்தணிகாசலம்.

**சோரியாஸிஸ் பரம்பரை வழியே வருமா, தொற்று நோயா?**

இது பரம்பரையாக வராது; பரவக் கூடியதுமல்ல. உடலில் இரசாயனப் பொருட்கள் கூடுதலாகிப் போனதன் வெளிப்பாடுதான் சோரியாஸிஸ். இது தோலுடன் நிற்பதில்லை. சிலருக்கு நகம் அரித்துக் கொண்டே போய் சிதைந்துவிடும். எலும்பையும் தாக்கிவிடும். அப்படிப் பாதிக்கப்பட்டவருக்கு, எலும்புகள் சந்திக்கும் இடங்களில் தோள் இணைப்பு, கை, கால் மூட்டுகளின் புறத்தோலில் வட்டமாகப் படை தெரியும். இது சோரியாடிக் ஆர்த்ரைடிஸ் எனப்படும் இத்தகைய பிரச்னையை எந்த வயதினருக்கும் வரலாம்.

சோரியாஸிஸ், சோரியாடிக் ஆர்த்ரைடிஸ் இரண்டு கோளாறுகளுக்கும் எங்கள் மருத்துவ மனையில் வெள்ளருகு, அருகம் புல், ஆவாரம்பூ, வில்வம் கலந்த மூலிகை உள்ளுக்குக் கொடுத்து, முதலில் இரத்தத்தைச் சுத்தம் செய்வோம். பிறகு ஆடுதீண்டா பாளை, கார்போகி கலந்து தயாரிக்கப்பட்ட தைலத்தை மேல் பூச்சுக்குக் கொடுக்கிறோம். சோரியாஸிஸ் முற்றிய நிலையில் இருந்தால், எங்கள் மருத்துவமனையில் அட்மிட் செய்து பத்திய முறையில் சிகிச்சை கொடுத்து இரண்டு, மூன்று வாரங்களில் முற்றிலும் குணப்படுத்துகிறோம். உடலுக்கு அடிப்படையாகத் தேவைப்படும் சில மூலிகை மருந்துகளை உள்ளுக்குச் சாப்பிட்டால், சோரியாஸிஸ் வராதது மட்டுமல்ல; நோய் எதிர்ப்புச் சக்தியும் பெருகும். அப்படிப் பெருகும் போது, தோல் சம்பந்தப்பட்ட எந்த நோயும் உங்களை அணுகாது. என்கிறார் சித்தா மற்றும் மூலிகை மருத்துவரான கே. திருத்தணிகாசலம்.



விபரங்களுக்கு
டாக்டர் கு. திருத்தணிகாசலம்

**ரத்னா சித்த மருத்துவமனை மற்றும் மூலிகை ஆராய்ச்சி மையம்**

750, பெரியார் நெடுஞ்சாலை, என்எஸ்கே நகர்,
அரும்பாக்கம், சென்னை - 106.

**போன்: 044-2622 3828 / 2622 4688**
**94433 74341**

www.rathnasiddha.com | e-mail: thiruthani12@yahoo.co.in

பெங்களூரு, சேலம், ஓசூர், ஈரோடு, கோவை, மதுரை, திருச்சி, திண்டுக்கல், தஞ்சாவூர், நாகை, புதுவை, தருமபுரியில் டாக்டரை 9443374341 என்ற தொலைபேசியில் முன் அனுமதி பெற்று நேரில் சந்தித்து மருத்துவ ஆலோசனை பெறலாம்.






கவசப் பாராயணம், சஷ்டி விரதம் அதை அனுஷ்டிக்கும் முறை, திருப்புகழ் பாடல்கள், திருப்புகழ்க் கதைகள், சிறுவர்கள் வண்ணம் தீட்ட முருகன் படங்கள். தமிழ், ஆங்கிலம் இரண்டு மொழிகளிலும் உள்ளது. நிறைய பாடல்களைக் கேட்கவும், பதிவிறக்கமும் செய்யலாம். உலகம் முழுவதும் உள்ள முருக பக்தர்கள் பக்தியுடன் பாடியுள்ள பாடல்கள், அருணகிரி நாதர் அருளிய, திருப்புகழ் விளக்கத்துடன் உள்ளது இதன் சிறப்பு.

● பெங்களூரில் உள்ள காயத்ரி தேவி கோயில். ஐந்து தலை / மூன்று கால்கள் கொண்ட காயத்ரி தேவிக்கு யஷ்வந்த்பூரில் இருக்கும் கோயில். அக்கோயிலுக்குச் செல்லும் வழி, அமைந்துள்ள இடம், காயத்ரி தேவியின் மகிமை மற்றும் இங்கு செய்யப் படும் சமூகப் பணிகளையும் தெரிந்து கொள்ள உதவுகிறது. www.gayathridevi.info

● விநாயகர் ஸ்லோகங்கள் தவிர காலையின் எழுந்தவுடன், சாப்பிடும்போது, குளிக்கும்போது, படுக்கச் செல்வதற்கு முன்பு சொல்ல வேண்டிய குட்டி, குட்டி ஸ்லோகங்கள் நிறைய உள்ளன.

பூஜைகள் எப்படிச் செய்ய வேண்டும்? துளசி பூஜை எப்படிச் செய்வது? என்பதைத் தெளிவாக விளக்குகிறது. கணேசா பக்தர்களுக்குப் பிரியமான இணையத் தளம். www.ganesh.us

● முருகப் பெருமான் பக்தர்கள் விசிட் செய்ய வேண்டிய பக்கம் www.kaumaram.com முருகன் பற்றிய விளக்கம், கந்த சஷ்டிக்



● ருத்ராட்சம், பூஜைப் பொருள்கள், வால் ஹேங்கிங் என ஆன்லைனில் வாங்கலாம். ஒரு முகம் முதல் இருபத்தொரு முகம் வரை ருத்ராட்ச மகிமை விபரம் தரும் பக்கம். www.rudrakshacollection.com

● குருவாயூரப்பனைத் தரிசிக்க ஆசையா? www.guru



vayurdevaswom.org குருவாயூரப்பனுக்குச் செய்யப்படும் பூஜைகள், கோயில் அமைந்துள்ள இடம், ஆலய அலுவலகத்தைத் தொடர்பு கொள்ள உதவும் தொலைபேசி எண்கள், ஆலய அலுவலகம் ஏற்பாடு செய்து தரும் தங்கும் வசதி அதன் கட்டணங்கள் பற்றிய பல பயனுள்ள தகவல்கள் உள்ளன.



● திருவருட்பா, திருஅருட்பா உரைநடைப் பகுதி. இராமலிங்க அடிகளின் தத்துவங்கள், அடிகளின் வரலாறு உள்ளன. 'அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி தனிபெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி என உலகத்துக்கு அருளிய வள்ளலார் பற்றி அறிய www.vallalar.org



● சிவபெருமானின் பெருமைகளைக் கூறும் பக்கம். பிரதோஷ புராணம், லிங்காஷ்டகம், தேவாரம், சிவ புராணம் என ஏராளமான சிவஸ்லோகங்களைப் படிக்கலாம். சிவனுக்குரிய விசேஷ தினங்களும் மற்றும் ஆண்கள் பஞ்சகச்சம் அணியவும் சொல்லிக் கொடுக்கிறது. www.pradosham.com

● செவ்வாய் தோஷத்தை நிவர்த்தி செய்ய வைத்தீஸ்வரன் கோயில் செல்ல வேண்டுமா? நவக்கிரக கோயிலையும். திருக்கடையூரையும் தரிசிக்கலாம். அமைந்துள்ள இடம், செல்ல வழி, தங்கும் வசதி அனைத்தும் விவரமாக உள்ளது. www.sadhabishegam.net

● சாயிசரித மகிமை! கல்யாணமாகாத கன்னிப் பெண்கள் நல்ல வரன் அமையப் பெறவும், கல்யாண ஆன பெண்கள் குடும்ப அமைதிக்காக வீட்டிலேயே செய்ய வேண்டிய மகாலக்ஷ்மி பூஜை பற்றிய விவரங்களையும் அழகாக, படிப்படியாகக் கூறுகிறது. ஷீரடி சாயிபாபா மகிமையை எடுத்துரைக்கிறது. 'ஓம் லக்ஷ்மி கணபதேயே நமஹ' என்று ஜபிக்கச் சொல்கிறது. www.starsai.com

● பகவான் பிரஷாந்தி நிலையத்திலிருந்து வரும் ஆன்மிகக் கருத்துகள், தளத்தில் பதிவு செய்தால் அன்றன்று உங்கள் மின்னஞ்சல் முகவரி தேடி வரும். ருத்ரம் கற்கலாம், பாபாவின் அருளுரைகள், அனுபவங்கள், அற்புதங்கள் என பாபா பக்தர்களுக்கு, பரவசம் தரும் தளம். www.radiosai.org

● எப்படி மந்திரங்கள் வேலை செய்கின்றன. எப்படி ஜபம் செய்ய வேண்டும். கணபதி, சிவன், தேவி, ஸ்கந்த, விஷ்ணு,

மகாலக்ஷ்மி, சரஸ்வதி, சூரியஸ்துதி எனப் பல மந்திர, ஸ்லோகங்களை உள்ளடக்கிய தளம். http//mailerindia.com

● ஸ்ரீராகவேந்திரரின் வரலாறு, உண்மை அனுபவங்கள், படங்கள், ராகவேந்திர கவசம், ராகவேந்திர ஸ்லோகம் கேட்டு மகிழலாம். www.pujyaya.org

● நம் இந்து தர்மத்தை அடுத்த தலைமுறையினருக்கு, எடுத்துச் சொல்ல இடமும், நேரமும் இருந்தால் அருகிலுள்ள குழந்தைகளுக்கு வாரம் ஒரு நாள் வகுப்பு எடுக்கலாம். எப்படி எடுக்கலாம், சிலபஸ் என அனைத்து தகவல்களும் உள்ளது. www.balagokulam.org

● இந்து மதம் தோன்றிய வரலாறு, கோயில்களின் சிறப்புகள், சிறுவர்களுக்கான கதைகள், அறிஞர்கள் எழுதிய புத்தகங்கள், பூஜைகள், பூஜை வழிமுறைகள் என விரிந்து கொண்டே செல்கிறது. www.hindubooks.org

● 'ஓம்' என்று ஓதுவதின் மஹிமை பற்றி அறிய, தினமும் சில நிமிடங்கள் 'ஓம்' என்ற பிரணவ மந்திரத்தை ஓதுவதின் மகத்துவம் அறிய உதவுகிறது. www.meditationiseasy.com

● அனுமன் பற்றி தெரிந்து கொள்ள www.panchamukha.org திருவள்ளூர் (சென்னைக்கு அருகே) பஞ்சமுக ஆஞ்சநேயரின் சிறப்புகள், நூற்றியெட்டு ஹனுமான் அஷ்டோத்திர நாமாவளி, ராம நாமாவளி ஹனுமான் சாலிசா கற்கலாம்.

● உங்கள் வீட்டுக் கொலுவை எந்த மாடலில் வைப்பது எனக் குழப்பமா? அல்லது உங்கள் வீட்டுக் கொலுவை அனைவரும் பார்க்க ஆவலா? http//teenwag.com.searchphoto//navaratri சைட்டுக்கு விஜயம் செய்யுங்கள். சென்ற வருட, கொலு புகைப்படங்கள் ஏராளமாக உள்ளன.

● இஸ்லாமிய அன்பர்களின் திருக்குரான், தமிழில் எளிய நடையில் அனைவரும் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் www.tamilquran.com வலைதளத்தில் உள்ளது.

● ரம்ஜான் மாதத்தில் இஸ்லாமிய சகோதரிகள் குடும்பத்தினரையும், நண்பர்களையும், உறவினர்களையும் இரவு உணவில் அசத்த உதவும் பக்கம் http//www.receipezaar.com/receipes/ramadan

● 'யாவர்க்கு மாமிறைவற்கொரு பச்சிலை' என்ற திருமந்திரத்தில் கடைசிவரி 'யாவர்க்கும் மாம் பிறர்க்கின்றுரைதானே' என்கிறது. அதையே எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும் வன்முறை இல்லாமல் இருப்போம் என்கிறார் தீபக் சோப்ரா. உலக நலம் காக்க செல்ல வேண்டிய தளம் www.itakethevow.com

தொகுப்பு :
**லக்ஷ்மி பாலசுப்ரமணியம்,**
**கத்தார்**



## விட்டம் கழிந்த எட்டு!

கிராமப் புறங்களில், ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தியானது, விட்டம் கழிந்த எட்டாவது நாளில் வரும் என்பார்கள். விட்டம் எனப்படுவது ஆவணி அவிட்டம். இது பௌர்ணமியன்று வரும். பௌர்ணமி கழிந்து வரும் எட்டாம் நாள் கிருஷ்ணபட்ச அஷ்டமி. அன்றுதான் ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தி கொண்டாடப் படுகிறது.

**- ஆர். மீனலதா, மும்பை**

பண்டிகை மாதம் இது. மைக்ரோவேவ் சமையலில் ஆரம்ப நிலையில் உள்ளோர்கூட 'பிள்ளையார் சுழி' போட, மிக மிக சுலபமான கொழுக்கட்டை பூரண செய்முறைகள் இதோ!



# ஆல் இன் ஒன் சமையல்!

### வெல்லப் பூரணம்

**தேவையான பொருள்கள் :**

வெல்லத் தூள் - 3/4 கப்
தேங்காய்த் துருவல் - 1 கப்
ஏலத்தூள் - 1/2 டீஸ்பூன்

**செய்முறை :** ஒரு மைக்ரோ ப்ரூஃப் கண்ணாடிப் பாத்திரத்தில் சிறிது தண்ணீர் ஊற்றி, வெல்லத்தூள் போட்டுக் கலந்து இரண்டு நிமிடங்கள் ஹை பவரில் வைத்து எடுக்கவும். உலோக வடிகட்டியில், கெட்டியாக வடிகட்டிக் கொள்ளவும். பிறகு, தேங்காய்த் துருவல், ஏலத்தூள், வடிகட்டிய வெல்லநீர் மூன்றையும் கலந்து கொள்ளவும். இதை மீடியம் ஹை பவரில் மூன்று நிமிடங்கள் (எல்லாம் சேர்ந்தாற்போல் ஆகும் வரை) வைத்து எடுத்தால் வெல்லப் பூரணம் தயார்.



கீதா பாலகிருஷ்ணன்

### உளுத்தம் பூரணம்

**தேவையான பொருள்கள் :**

**ஊறவைத்து அரைக்க :**

உளுத்தம் பருப்பு : 1/2 கப்
மிளகாய் வற்றல் : 2

→ 7



பச்சை மிளகாய் - 2
இஞ்சி - 1 சிறிய துண்டு
பெருங்காயம் : 1 சிட்டிகை
உப்பு : தேவையான அளவு

**தாளிக்க :**
எண்ணெய் : 2 டேபிள் ஸ்பூன்
கடுகு : 1/4 டீஸ்பூன்
உளுத்தம் பருப்பு : 1 டீஸ்பூன்

**செய்முறை :**

ஊறவைத்து அரைக்கக் கொடுத்திருக்கும் பொருள்களை ஒரு மணி நேரம் ஊற வைத்து (மிகவும் நைஸாக இல்லாமல்) கெட்டியாக மிக்ஸியில் அரைக்கவும்.

ஒரு மைக்ரோ - ப்ரூஃப் ஸ்டீமர் பாத்திரத்தில் நான்கு டேபிள் ஸ்பூன் தண்ணீர் ஊற்றவும். மைக்ரோ - ப்ரூஃப் இட்லித் தட்டில் சிறிது எண்ணெய் தடவி அரைத்த விழுதை வைத்து மூடி மூன்று அல்லது நான்கு நிமிடங்கள் மீடியம் ஹை பவரில் வைக்கவும். பிறகு, வெளியே எடுத்து, சூடு ஆறியவுடன் கட்டியில்லாமல் உதிர்க்கவும்.

ஒரு மைக்ரோ - ப்ரூஃப் கண்ணாடிப் பாத்திரத்தில் எண்ணெய் ஊற்றி கடுகு போட்டு, ஹை பவரில் இரண்டு நிமிடங்கள் மூடி வைக்கவும். பிறகு உளுத்தம்பருப்பு சேர்த்து இரண்டு நிமிடங்கள் மீடியம் ஹைபவரில் வைத்து, உதிர்த்த கலவையைச் சேர்க்கவும். அவற்றை நன்கு கலந்து ஹை பவரில் மூன்று நிமிடங்கள் வைத்தால், உளுத்தம் பூரணம் தயார்!

**பின் குறிப்பு :** மாவில் சொப்பு செய்து ஸ்டஃப்பிங் செய்த கொழுக் கட்டைகளை இதே முறையில் மைக்ரோவேவ் அவனில் ஸ்டீமிங் செய்யலாம்.

## 'ஆல் இன் ஒன்' பண்டிகை ஸ்பெஷல் சமையல்

நம் குழந்தைகளுக்கு நம் பாரம்பரியப் பண்பாடுகளைக் கற்றுக் கொடுக்க வேண்டும். சாதாரண நாட்களில் நம் பரபரப்புக்கேற்றவாறு அனுசரித்துப் போகும் வீட்டுப் பெரியவர்களின் மகிழ்ச்சிக்காக ஸிம்பிளாகவாவது கொண்டாட வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கே. இதோ ஆல் இன் ஒன் பண்டிகை ஸ்பெஷல் சமையல் குறிப்புகள் - உங்கள் டென்ஷனைக் குறைக்கும்.

### ஆடிப்பெருக்கு

பிரஷர் குக்கரின் மூன்று ஸெபரேட்டர்கள் ஒவ்வொன்றில் களைந்த சீரகசம்பா அரிசி ( 1 : 2 நீர்), பாஸ்மதி அரிசி ( 1 : 1 1/2 நீர்); பச்சரிசி (1 : 3 நீர்) என்று வைத்து இரண்டு விஸில் விட்டு அணைத்து விடுங்கள்.

விஸில் அடங்கியதும், 'அட் எ டைம்' வெல்ல சாதத்துக்கு பொலபொல சீரகசம்பா அரிசி, தேங்காய் சாதத்துக்கு உதிரி உதிரி பாஸ்மதி அரிசி, தயிர் சாதத்துக்கு குழையக் குழைய பச்சரிசி எல்லாமே ஒன்றாக ரெடி!

**வெல்ல சாதம் :** வாணலியில் நெய்யைவிட்டு, முந்திரியை வறுத்து எடுத்துக் கொள்ளுங்கள். பிறகு, இரண்டு கப் தேங்காய்த் துருவல், கொதிக்க விட்டு, கெட்டியாக வடிகட்டிய வெல்லநீர் இரண்டு



கப் சேர்த்து வதக்கி, ஒரு சிட்டிகை பச்சைக் கற்பூரம் சேர்த்து, நன்கு வதக்குங்கள். கமகம சீரகசம்பா அரிசி சேர்த்து சேர்ந்தாற்போல ஆனதும் இறக்கிவிடுங்கள். பிறகு, வறுத்த முந்திரி தூவினால் மாமியார் மெச்சிய மருமகள் / அம்மாவுக்குப் பாசப் பொன்மகள் நீங்கள்தான்!

**தேங்காய் சாதம் :** நார்மலாக தாளிக்கும் கடுகு, உளுத்தம்பருப்பு, பச்சைமிளகாய், உப்பு, தேங்காய்த் துருவலுடன் ஸ்பெஷல் டச்சாக கறிவேப்பிலைப் பொடி சேர்த்து தாளியுங்கள். வடித்த உதிரி உதிரியான பாஸ்மதி அரிசியைக் கலந்தால், மகன் க்ரூப்பில் கிரேப் செஃப் பட்டம் உங்களை வந்தடையும்!

**தயிர் சாதம் :** குழைந்த பச்சரிசி சாதத்துடன், உப்பு போட்டு பால் ஊற்றி மசித்து, சிறிது கெட்டித் தயிர் சேர்த்து விடவும். பிறகு, கடுகு தாளித்து, கொத்த மல்லித் தழை, மாதுளை முத்துக்களைத் தூவிக் கொடுத்தால், கணவர் ஆஃபீஸில் உங்கள் தயிர் சாதம் தான் சூப்பர் ஹீரோயின்!

## ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தி

வேலை விட்டு வீட்டுக்கு வர லேட் டாகுமே - மாலை ஸ்ரீகிருஷ்ண ஜெயந்திக்கு என்ன செய்வது என்ற யோசனையா?

காலையிலேயே தேவையான அளவு பாலை பாதியளவு சுண்டக் காய்ச்சி, ஆறவைத்து ஃப்ரிட்ஜில் வைத்துவிடுங்கள்.

**அவல் பாயசம் :** வாணலியில் நெய் விட்டு, இரண்டு நிமிடம் நீரில் ஊறி வடித்த மெல்லிய அவல் போட்டு சிறிது வதக்கவும். ஃபிரிட்ஜில் வைத்த சுண்டக் காய்ச்சிய பால் + சர்க்கரைப்பொடி + ஏலத்தூள் சேர்த்து ஐந்து நிமிடங்கள் கொதிக்கவிட்டால் பத்தே நிமிடங்களில் ஸ்ரீகிருஷ்ணருக்குப் பிடித்த மான 'ஆல் இன் ஒன்' - அவல் + பால் + நெய் கலந்த நைவேத்தியம் ரெடி!

**கேஸர் ஸ்ரீகண்ட் :** கட்டித் தொங்க விடப்பட்ட கெட்டித் தயிருடன், சர்க்கரைப்



பொடி, ஏலப்பொடி, குங்குமப்பூ சேர்த்துக் கலந்தால் சுவையான 'ஸ்ரீகண்ட்', நைவேத் தியத்துக்குத் தயார்!

**பாஸந்தி :** கிருஷ்ணஜெயந்திக்கு மூன்று அல்லது நான்கு நாட்கள் முன்பாகவே, பாலைக் காய்ச்சுகையில் மேலே படியும் ஆடையை எடுத்து ஒரு பாத்திரத்தில் போட்டு ஃப்ரீஸரில் வைக்கவும். கிருஷ்ண ஜெயந்தி அன்று சிறிது பாலை அடுப்பில் வைத்து, ஃப்ரீஸரில் உள்ள பாலேடைச் சேர்க்கவும். பிறகு, சர்க்கரைப் பொடி + பாதாம் + பிஸ்தா + முந்திரி + ஏலத்தூள் சேர்த்துக் கிளறியபடி அடிப்பிடிக்காமல் மிதமான தீயில் வைத்து கொதிக்கவிட்டு எடுத்தால் ஜம்மென்ற பாஸந்தி ரெடி!

## விநாயக சதுர்த்தி

**ஈஸி மேல் மாவு (கொழுக்கட்டைக்கு):** ஒரு கப் அரிசியை ஆறு மணி நேரம் ஊற வைக்கவும். ஒரு கப் நீர் சேர்த்து நைஸாக அரைத்து, அதனுடன் மேலும் அரை கப் நீர் சேர்த்துக் கரைத்து வைக்கவும். ஒரு நான்-ஸ்டிக் பானில் இரண்டு டீஸ்பூன் நல்லெண்ணெய் ஊற்றி, கரைத்த அரிசிமாவைப் போட்டு, உப்பு சேர்க்கவும். மிதமான தீயில் மாவு நன்கு உருண்டு திரண்டு பானில், ஒட்டாமல் வெந்து வரும்வரை கிளறவும்.

(தொடர்ந்து கலக்குவோம்)




சமீபத்தில் மங்கையர் மலரும் ஆல்ஃபா மைண்ட் பவரும் இணைந்து, பெங்களூருவில் நடத்திய 'ஆழ்மனம் அறிவோமா?' என்ற நிகழ்ச்சி, பயில வந்தவர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றது. அதில் பங்குபெற்றவர்களின் சந்தேகங்களுக்கு, டாக்டர் விஜயலக்ஷ்மி பந்தையன் அளித்த பதில்களிலிருந்து ஒரு சில...

பெங்களூருவில் ஆங்கிலத்தில் மட்டும் வகுப்பு நடத்தி வந்த எனக்கு, மங்கையர் மலர் வாசகர்களுக்காக பிரத்யேகமாக ஆல்ஃபா மைண்ட் பவர் தமிழில் நடத்தியது ஒரு மறக்க முடியாத அனுபவம். குறிப்பாக ஆசிரியர் லக்ஷ்மி நடராஜன் இந்நிகழ்ச்சியில் பங்கேற்று நடத்தியது மிகவும் சந்தோஷமான விஷயம். ஆழ்மனதின் ஆற்றலைப் புரிந்து மங்கையர் மலர் வாசகர்கள் அனைவரும் மேலும் சிறப்பாக வாழ வாழ்த்துக்கள்.

- டாக்டர் விஜயலக்ஷ்மி பந்தையன்



**இரு வேறு நபர்களின் ஆழ்மனதுடன் பேசலாமா?**

கண்டிப்பாகப் பேசலாம். ஒவ்வொருவருடன் தனித்தனியாகவும் பேசலாம். இருவருடன் சேர்ந்தும் பேசலாம்.

**ஆல்ஃபா தியானத்தில் இருக்கிறோம் என்று எப்படித் தெரியும்?**

ஆல்ஃபா தியானம் என்பது தூக்கத்துக்கும் விழிப்புக்கும் இடையே உள்ள நிலை. அந்த நிலையில் எல்லா ஒலிகளும் கேட்கும் (உதாரணம் : பேப்பர் போடும் சப்தம்). பாதி விழிப்பு, பாதி தூக்கம் என்ற நிலையில் கண்கள் மூடிக்கொண்டே ஆல்ஃபா தியானத்தில் இருக்கலாம் போல தோன்றும்.

**சிறு குழந்தைகளுடன் ஆழ்மனத்தில் பேசலாமா?**

ஆம். சுலபமாகப் பேசலாம். அவர்

# பயனடைந்தோர் பாராட்டுகிறார்கள்!

# தந்த ஆல்ஃபா!

பெங்களூருவில் ஜூலை நான்காம் தேதியன்று மங்கையர் மலர் நடத்திய ஆல்ஃபா தியான பயிற்சியில் கலந்து கொண்டு பயனடைந்தேன். அருமையான வாய்ப்பு. ஆல்ஃபா புத்துணர்ச்சி மழையில் ஆனந்தமாய் நனைந்தோம். வெளியூர் தமிழர்களுக்காக மங்கையர் மலர் தமிழி லேயே நடத்திக் கொடுத்தது மற்றுமொரு விசேஷம்.

இந்தப் பயிற்சி பெற்ற இரண்டு நாட் களிலேயே என்னுள் பலவித மாற்றங்கள் தெரிய வந்தன. இந்த ஆழ்மன தியானத் துக்குப் பிறகு தனியாக வீட்டில் இரவில் தைரியமாக, நிம்மதியாகப் படுத்து உறங் கினேன். அதிசயம்! எங்கிருந்து வந்தது இந்த மாற்றம்? எங்கேயும் இல்லை என் உள்ளிருந்தே வந்தது. இதை வரவழைத்தது ஆல்ஃபா மைண்ட் பவர் பயிற்சிதான். இதேபோல் வீட்டில் உறவுகளிலேயும் நல்ல மாற்றம் தெரிகிறது. மனத்தில் ஓர் அமைதி யான சூழ்நிலை உண்டாகியிருக்கிறது. இன்னும் என்னவெல்லாம் அற்புதங்கள் நிகழப் போகிறதோ? நினைத்தாலே உடலும் மனதும் புல்லரிக்கின்றது.

**- டி.பி.இராஜலக்ஷ்மி, பெங்களூரு**

நான் ரெய்கி, அக்யுப்ரஷர், வேதிக் ஹீலிங் எனப் பல வகுப்புகளுக்குச் சென்று வந்துள்ளேன். இருந்தாலும் இந்தத் தியான வகுப்பு என் மனத்தில் நீங்காத இடம் பெற்று விட்டது.



ஜெயத்தை அடைய விஜயம் செய்த டாக்டர் விஜி அவர்களுக்கு, அன்பும் பாராட்டும் ஆயிரம் ஆயிரம். ஆல்ஃபா தியானமென்ற அமுதை, அள்ளித்தரும் அட்சயப் பாத்திரமே... வாழ்க பல்லாண்டு!

**- ஜெயஸ்ரீ சந்தானம், பெங்களூரு**

இயல்பிலேயே நான் மிகவும் உற் சாகமானவள். நம் உற்சாகத்தையும் சந் தோஷத்தையும் அனைவரிடமும் மிக விரைவில் கொண்டு செல்வது எப்படி என்பதை இந்தப் பயிற்சியின் மூலம் கற் றுக் கொண்டேன். இந்தப் பயிற்சி நமக்கு வேண்டிய நன்மைகளை உடனே வழங்கும் காமதேனு! வாசகியருக்கு எது நன்மை பயக்கும் என்பதைக் குறிப்பறிந்து செய்வது மங்கையர் மலர்தான் என்பது மீண்டும் நிரூபணமாகியுள்ளது.

**- சீதாராமன், பெங்களூரு**

---

கள் உடனடியாக நல்ல பழக்கங்களை மேற்கொள்வார்கள். உதாரணம் : தாமா கவே படிக்கும் பழக்கம், பிடிவாதம் பிடிக்காமல் சொல்பேச்சு கேட்பது, படுக்கை நனைக்கும் பழக்கத்திலிருந்து நிவாரணம். இப்படி நிறைய.

**ஏற்கெனவே மருந்துகள் உட்கொள்ப வர்கள் தங்கள் உடல்நலத்தை ஆல்ஃபா தியானம் மூலமாக சரி செய்யலாமா?**

நிச்சயமாக சரி செய்து கொள்ளலாம். மருந்துகள் மூலமாக ஆறு மாதங்களில் சரியாகும் என்றால், ஆல்ஃபா தியானத்தை யும் சேர்த்து செய்யும்போது ஒன்று அல்லது இரண்டு மாதங்களில் குணமாகும் வாய்ப்பு கள் அதிகம்.

*Launching*

# Sreevatsa Global Village

COIMBATORE

**43** தனி வீடுகள்
(3 படுக்கை அறை : 3000 sft. )

**448** சொகுசு அடுக்குமாடி குடியிருப்புகள்
(3 படுக்கை அறை : 1562 - 2140 sft)

கோவை, சரவணம்பட்டியில் IT பார்க்கிற்கு அருகில் 20 ஏக்கரில் ஸ்ரீவத்ஸா குளோபல் வில்லேஜ் என்ற புதியதோர் குடியிருப்பு உருவாகிறது. சிறிய நீரோடை, தென்னை மரத்தோப்பு மற்றும் பசுமைச் சூழலுக்கிடையே இந்த இல்லங்கள் அமைய உள்ளன. மேலும் கல்லூரிகள், பள்ளிகள் மற்றும் Cognizant, Robert Bosch, Ford, KGISL முதலிய IT கம்பெனிகளும் வெகு அருகாமையிலேயே உள்ளன. இங்கிருந்து காந்திபுரம் 8 கி.மீ.-ம், விமான நிலையம் 9 கி.மீ.-ம், ரயில்வே ஸ்டேஷன் 10 கி.மீ. தூரத்திலும் அமைந்துள்ளன.

**ஸ்ரீவத்ஸாவின் சிறப்பம்சங்கள்**

கோவையில் பல்வேறு டவுன்ஷிப் மற்றும் அடுக்குமாடிக் குடியிருப்புகளை வெற்றிகரமாக உருவாக்கியுள்ள ஸ்ரீவத்ஸா ரியல் எஸ்டேட் பி. லிட். நிறுவனம் தரத்திற்கும் நம்பிக்கைக்கும் பெயர் பெற்றது. இந்நிறுவனத்தினால் நேர்த்தியுடன் கட்டப்படும் ஒவ்வொரு இல்லமும் வாங்குபவர்களை முழு திருப்தியடையச் செய்கிறது.

சிறப்பம்சங்கள் பல கொண்ட இந்த இல்லங்களை உடனே உங்களுடையதாக்கிக் கொள்ளுங்கள்.





**BOOKINGS OPEN**

IN THE IT CORRIDOR
OPP. KUMARAGURU COLLEGE OF TECHNOLOGY,
ATTHIPALAYAM ROAD, OFF SATHY ROAD, COIMBATORE




**ஸ்ரீவத்ஸா ரியல் எஸ்டேட்ஸ் பி. லிட்.,**
8/2, மேட்டுப்பாளையம் ரோடு, கோயமுத்தூர் - 641 043.
செல் : 94433 41901, 94430 21990 போன் : 0422 - 2437422 / 2441481 / 2432184 / 2432042, Fax : 0422 - 2430899
E-mail : realestate@sreevatsa.com Website : www.sreevatsa.com



எழில்மிகு தனி வீடுகள்




அடுக்குமாடிக் குடியிருப்புகள்

# Changing Coimbatore's Landscape

## Common Amenities :

Member of







Coimbatore Property Developers Association




- நீச்சல் குளம்
- டென்னிஸ் கோர்ட்டுகள்
- கிளப் ஹவுஸ்
- கம்யூனிட்டி ஹால் & ஜிம்
- 24 மணி நேர பாதுகாப்பு
- ஒருங்கிணைக்கப்பட்ட இன்டர்நெட், சேட்டிலைட் ரேடியோ, சேட்டிலைட் டி.வி. மற்றும் கண்காணிப்புக் கேமரா போன்ற வசதி
- குடிநீர் மற்றும் போர்வெல் தண்ணீர் வசதி

Architects : M/s. Sankar G Associates. Electrical Consultant : Mr. P.P. Subramaniam

# பகவான்

## அனுராதா சேகர்

'இறைவனுடன் இனிய அனுபவங்கள்' தொடரில் பகவான் பாபாவைப் பற்றிய செய்திகளைப் படித்து ஆனந்தம் அடைபவர்களில் நானும் ஒருத்தி. கடந்த முப்பது ஆண்டுகளுக்கு மேலாக பகவான் சத்ய சாயிபாபா நடத்திவரும் பால விகாஸ் வகுப்புகளைப் பற்றி எல்லோரும் தெரிந்து பயனடைய வேண்டும் என்ற நோக்கத்தில் எழுதுகிறேன்.

ஸ்ரீ சத்ய சாயிபாபா அனைத்து ஆன்மிகக் கருத்துகளையும் வழிமுறைகளையும் தொகுத்து, தமது அளப்பரிய ஞானத்தின் மூலம் நல்லுபதேசத்தைக் குழந்தைகளுக்குத் தெரிவிக்குமளவில் தெய்விகத் திட்டத்தை (ஸ்ரீசத்ய சாயி பாலவிகாஸ்) வகுத்தார்.

பகவான் பாபாவிடம் மிகுந்த பக்தியும், நம்பிக்கையும் கொண்டு குருமார்கள், ஆசிரியர்கள் சத்யசாயி பாலவிகாஸ் திட்டத்தை நிறைவேற்றி வந்துள்ளனர். இந்தப் பாடத் திட்டத்தில் பயின்ற குழந்தைகள் தத்தம் நாடுகளில், சிறந்த பிரஜைகளாக உருவாகியிருப்பதைக் கண் கூடாகப் பார்க்கலாம்.

பொது மத நோக்குடைய இதில் ஜெபம், தியானம், வேதம், பஜனைகள், நீதிக்

நான் ஆசிரியையாக நாற்பத்தைந்து ஆண்டுகள் முன்பு செம்மங்குடி உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றிய தருணம். எனது அம்மா ஸ்ரீசத்யசாயி பக்தை. எனக்கு மூன்று இடங்களில் இருந்து வரன் வந்து, மூன்றும் பொருந்தி இருந்தது. எந்த வரனைத் தேர்ந்தெடுப்பது என்ற குழப்பம்.

இறுதியில் என் அம்மா மூன்று ஜாதகங்களையும் ஸ்ரீபாபாவின் படத்தின் கீழ் வைத்து, பிரார்த்தனை செய்து கொண்டு படுக்கச் சென்றுவிட்டார். மூன்று தினங்கள்

குழப்பத்துடனேயே கழிந்தன. அன்று வியாழக்கிழமை. வழக்கம்போல் படத்தைத் துடைக்கச் சென்ற எனது அம்மா, என்னை உரத்த குரலில் அழைத்தார். எப்படி இந்த அதிசயம் நிகழ்ந்தது? பன்னிரண்டு சிறிய சாயியின் படங்கள் சதுர வடிவில் பிரேம் செய்யப்பட்டு, நடுவில் பகவானின் பெரிய படம் அமர்ந்த நிலையில் இருக்கும். எல்லாவற்றிலும் வலது கை தூக்கி அபய முத்திரை. ஒவ்வொரு கரத்திலிருந்தும் குங்குமம் பொழிந்திருந்தது. சட்டம் போட்ட கண்ணாடி பிரேமின் உள்ளே அந்தக் குங்குமம் எங்கிருந்து வந்தது? இன்று வரை விடை தெரியவில்லை.

மேலே இருந்த மூன்று ஜாதகங்களில் ஒன்று மட்டும் படத்தின் அடியில் இருந்தது. மற்ற இரண்டும் சிறிது தொலைவில் தள்ளியிருந்தன. அவர் ஆசி அளித்து, குங்குமம் தந்த வரனுடன் எனது திருமணம் முடிந்தது. குறைவில்லாத நிறைவான வாழ்க்கை. அன்று எனது வயது இருபத்து ஆறு. இன்று எனது வயது எழுபது. இதைப் பற்றி நான் எழுதுவதும் ஒரு வியாழக்கிழமை. இதோ சாயி பகவானிடம் ஆசிபெறப் புறப்படுகிறேன்.

**- எஸ்.சுந்தரி சுப்ரமணியன்,**
**புனே**

## பாபா! இறைவனுடன் இனிய அனுபவங்கள்! 14

கதைகள், கூட்டமாகச் சேர்ந்து செயல்படுதல் போன்ற எளிய முறைகள் மூலம் நற்போதனைகள் கற்றுத் தரப்படுகின்றன. இந்தப் பாடத் திட்டத்தில் பயிற்சி பெறும் குழந்தை கீழ்கண்ட நன்மைகளைப் பெறுகின்றனர்.

* பெற்றோருக்கும், வீட்டிலுள்ள பெரியோருக்கும் உரிய மரியாதை தருதல்.
* பள்ளிப் பாடங்களில் உரிய கவனம் செலுத்துதல், பள்ளி ஆசிரியர்களுக்கு உரிய மரியாதை தருதல்.
* பள்ளியிலும் சமூகத்திலும் நடையுடை பாவனைகளில் ஒழுங்காகவும் தோற்றப் பொலிவுடனும் இருத்தல்.
* தனது உதவியை நாடுபவருக்கு சேவை செய்யும் உணர்வு
* நன்னடத்தை, பணிவு, உண்மை, நேர்மை, இரக்கம், இறைவனிடம் திட நம்பிக்கை.

ஒவ்வொரு ஊரிலும் உள்ள ஸ்ரீசத்ய சாயி சேவா நிறுவனம் சமிதி, பால விகாஸ் வகுப்புகளைப் பல மையங்களில் ஞாயிற்று கிழமைகளில் இலவசமாக நடத்தி வருகிறது.

என்னுடைய மகனும், மகளும் பால விகாஸ் வகுப்பு மாணவர்களாக இருந்தவர்கள். அவர்களுக்கு ஸ்ரீசத்ய சாயி கல்வி நிறுவனங்களில் படிக்கும் வாய்ப்பு கிடைத்ததை எங்கள் பாக்கியமாகவே கருதுகிறோம்.

**- சாயி ப்ரியா,**
**கல்பாக்கம்**

எனக்கு 1990ல் சத்யசாய் பாபா பற்றி தெரிய வந்தது. எங்கள் வீட்டுக்கு அருகில் ராகவன் என்பவர் பஜனா மண்டலி ஆரம்பித்து, அழைத்தார். போய் உட்கார்ந்ததும், பஜனையில் ஈர்ப்பு வந்தது. ஓரளவு குரல் வளம் இருந்ததால், நானும் சேர்ந்து பாட ஆரம்பித்தேன்.

ஒருமுறை கொடைக்கானலில் இருந்து புட்டபர்த்தி செல்லும் வழியில், உடுமலை யில் சுவாமி தரிசனம் கொடுத்தார். வரும் வழியில், ''உடுமலையில் பக்தர்கள் பஜனை செய்கிறார்கள் நன்றாக உள்ளது'' என லயித்துச் சொன்னாராம். உடன் வந்த மாணவர்கள் ஆச்சரியப்பட ''எனக்குக் கேட்கிறது'' என்றாராம். அருமையான தரிசனம். சுவாமியின் நேர் பார்வை கிடைத்த அற்புத தினம் அது.

அதன்பிறகு பல சம்பவங்களில் பாபா என் கூடவே இருப்பதை உணர்த்தினார். வாழ்க்கை என்றால் நாம் நினைப்பது நடக்கிறதா? மனம் சோர்ந்து போகும் போதெல்லாம் சுவாமியின் மடிதான் எனக்குத் தாய்மடி.

ஒருமுறை உடல் நலம் சரியில்லாமல் கோவை மருத்துவமனை ஒன்றில் ஸ்கேன் செய்யப் போயிருந்தேன். உடன் யாரும் வரவில்லை. அந்தக் கருவியில் படுத்த வுடன் ரொம்ப பயமாக இருந்தது. யாரு மில்லையே என்ற கழிவிரக்கம் தோன்றி யது. அப்போது சுவாமி என் அருகே வந்து, தலையைத் தடவி கொடுத்ததை என்னால் உணர முடிந்தது. ஸ்கேன் பரிசோதனை முடிவும் நல்லவிதமாகவே இருந்தது.

2001ல் எனது கண் பார்வையில் ஒரு

ஊட்டி எனது பிறந்த ஊர். சிறு வயது முதலே எங்களுக்கு சாயிபாபா விடம் மிகுந்த பக்தி உண்டு.

சாயி ஆசியினால் எனக்குத் திருமணம் நடந்தது. புகுந்த வீடான மாயவரத்துக்கு வந்தேன். பல வருடங்கள் கழிந்தன. ஆனால் குழந்தைப் பேறு கிட்ட வில்லை.



நிறைய நாட்கள் இரவு கண்ணீருடனே படுப்பேன். ஒரு நாள் இரவு என் கனவில் பாபா தோன்றி, ''கவலைப்படாதே என்னை வந்து பார்'' எனக் கூறினார். கண் விழித்ததும். 'அட! நம் கனவில் பாபா வந்தார்' என்று ஒரே சந்தோஷம். உடனே என் கணவரிடம் பாபாவிடம் அழைத்துப் போகும்படி சொன்னேன்.

என் கணவருக்கு அப்போதெல்லாம் சுவாமிமேல் நம்பிக்கை இல்லாம லிருந்தது. ஆனாலும், ''சரி. எங்கு இருக் கிறாரென்று விசாரித்து உன்னை அழைத்துப் போகிறேன்'' என்று ஆறுதலாகக் கூறினார்.

இது நடந்து இரண்டு அல்லது மூன்று நாட்களில் என் பெற்றோர் மாயவரம் வந்தனர். என் தங்கைக்குக் கல்யாணம், நிச்சயமாகி இருப்பதாகச் சொன்னார்கள். கல்யாணம் வரை அவளுடன் சேர்ந்து இருக்க என்னை ஊட்டிக்கு அழைத்துச் சென்றனர்.

மறுநாளே, என் அப்பா, ''விமலா, பாபாவுக்குக் கல்யாணப் பத்திரிகை

தடுமாற்றம் வந்தது. தனியார் மருத்துவமனையில் காண்பித்த போது இது அபூர்வமான வியாதி. அதுவும் பெண்ணுக்கு வருவது மிக அதிசயம் எனக் கூறி ஆச்சரியப்பட்டார்கள்.

அந்த வருடம் நாராயண சேவைக்காக, புட்டபர்த்தி சென்றிருந்தேன். அங்குள்ள சூப்பர் ஸ்பெஷாலிடி மருத்துவமனையில் காண்பித்தேன். சிங்கள கண் டாக்டர் ஒருவர் எனது கண்களைப் பரிசோதனை செய்துவிட்டு தனியார் மருத்துவமனையில் சொன்னதையே சொன்னார். ''இதற்கு சிகிச்சை இல்லை. கண் பார்வை சுத்தமாகப் போன பிறகு லேஸர் சிகிச்சை செய்து பார்க்கலாம். அதுவும் உறுதியாகச் சொல்ல முடியாது. டென்ஷனாக இருந்தால்தான் இதுமாதிரி வரும். எனவே, மனதை அமைதியாக வைத்துக் கொள்ளுங்கள்'' என்று அறிவுறுத்தினார்.



என் கவலையை சுவாமியின் பாதத்தில் வைத்துவிட்டு சென்னை வந்துவிட்டேன். இன்று வரை கண் பார்வை போகவில்லை. போய் விடுமோ என்ற பயமும் இல்லை. ஸ்ரீ சாயி இருக்க பயமேன்?

**- என்.கற்பகவல்லி, உடுமலைப்பேட்டை**

கொடுக்க வேண்டும். நீயும் புட்டபர்த்திக்கு வருகிறாயா?'' என்று என்னைக் கேட்க -

சந்தோஷத்தினால் எனக்குப் பேச்சே வரவில்லை! கண்களில் நீர்மல்க என் கனவில் ஸ்ரீபாபா வந்ததைக் கூறினேன். அப்பாவுக்கும் மகிழ்ச்சி!

மறுநாள். நான், என் அப்பா, என் தங்கை மூவரும் புட்டபர்த்தி சென்றோம். உடனே எங்களுக்கு இன்டர்வ்யூ கிடைத்தது. என் அப்பா. ''இவள்தான் என் இரண்டாவது மகள் விமலா'' என்று என்னைக்காட்ட, பாபா, ''எனக்குத் தெரியுமே? நான்தான் சொப்பனத்தில் வந்தேனே?'' என்று கூற, நாங்கள் வாயடைத்துப் போனோம். கோடிக்கணக்கான பக்தர்கள் அவருக்கு இருக்க, என் கனவில் அவர் வந்தது. அதை அவரே சொன்னது, ஆச்சரியமல்லவா?

என் அம்மா, பாபாவுக்கு மஞ்சள் நிறத்தில் பட்டு அங்கியை என்னிடம் கொடுத்து, ''பாபாவுக்கு உன் கையால் இதைக்கொடு'' என்று கூறியிருந்தார்.

மறுநாள் அந்த அங்கியை பாபாவிடம் கொடுத்தேன். ''சன் பிறந்ததும் வாங்கிக்கறேன்'' என்று கூறி ஆசீர்வதித்தார். என் கண்கள் பனித்தன. அவருக்கு நமஸ்காரம் செய்துவிட்டு, பிரசாதங்களுடன் ஊர் திரும்பினோம்.

பாபாவின் ஆசியினால் எனக்கு ஒரு பெண்ணும், பிள்ளையும் பிறந்தார்கள். பாபா சொன்னதுபோல் மகன் பிறந்ததும் பாபாவுக்கு அங்கியைச் சேர்ப்பித்து விட்டேன்.

நம் உள்ளங்களில் தோன்றும் ஒவ்வொரு எண்ணத்தையும் பாபா அறிவார். பக்தியுடன் நாம் பிரார்த்தனை செய்தால் நிச்சயம் அருள் புரிவார்.

**- விமலா தியாகராஜன், சென்னை**



கண்ணுக்குத் தெரியாத கடவுளுக்காக, ஏங்குவதை விட்டு, கண்ணெதிரே இருக்கும் வாழும் தெய்வமான தாயை வணங்கி, வழிபட வேண்டும். அது உங்களைக் காப்பாற்றும்.

- ஸ்ரீபாபா

என்னுடைய தந்தை தீவிர பாபா பக்தர். விபூதியை நெற்றியில் பூசிக்கொண்டு எந்த நேரமும் சாய்ராம் என்று சொல்லிக் கொண்டிருப்பார். அப்போதுகூட எனக்கு பகவான் அருமை தெரிந்ததில்லை. நான் புதுச்சேரியில் பணிபுரிந்தபோது என்னுடன் பணியாற்றிய ராம்கிஷோர் தீவிர சாய் பக்தர். வாரம்தோறும் சாய்பஜனில் கலந்து கொள்ளும் அவரை சாய்சமிதிக்கு அழைத்து செல்வேன். அப்பொழுதும் மனம் பாபாவை நாடியதில்லை.



ஒருநாள் சாய் சமிதியைத் தாண்டி என்னுடைய சைக்கிளில் சென்று கொண்டிருந்தேன். அந்த வீதியின் முனையில் மோட்டார் சைக்கிளில் பின் தொடர்ந்து வந்த ஒருவர் ''விரைவில் நீ பாபாவைச் சந்திப்பாய்'' என்று கூறி சென்றுவிட்டார். எனக்கு விளையாட்டாக இருந்தது. ஆனால், பதினைந்து நாட்களில் ராம்கிஷோர் மூலமாக ஒயிட் ஃபீல்ட் செல்லும் வாய்ப்பு கிடைத்தது. அப்போது, என்னுடைய நண்பர் ஒருவர் பெங்களூரில் இருந்தார். விரைவில் சாமி தரிசனம் செய்துவிட்டு என் நண்பனுடன் பொழுதைக் கழிக்க முன்பே திட்டமிட்டேன்.

பெங்களூர் சென்றவுடன் எனது நண்பனைத் தொடர்பு கொண்டபோது ''எனது பாட்டிக்கு திடீரென உடல்நிலை சரியில்லை. அதனால் நான் ஊருக்குச் சென்று கொண்டிருக்கிறேன்'' என்று கூறி ஃபோனை வைத்துவிட்டான். உடனே என் கவனம் பகவான் பாபா பக்கம் திரும்பியது. ஒயிட் ஃபீல்ட் செல்லும்போது என்னுடைய ஐம்புலன்களும் பகவானைப் பார்க்கத் துடித்தது. என் மனம் மாறிய போக்கும் எனக்குள் பக்தி கிளர்ந்த விதமும் எனக்கே ஆச்சர்யமாக இருந்தது.

பாபாவைத் தரிசிக்கும்போது என்னையே மறந்தேன். ''விரைவில் உனக்கு டெல்லியில் வேலை கிடைக்கும்'' என்றார். அதன்படியே டெல்லியில் வேலை கிடைத்தது.

திருமணம் முடிந்து அவரைத் தரிசனம் செய்தபோது எனக்குக் குழந்தை பிறக்க வேண்டும் என்று வேண்டினேன். அதே போல எனக்கு அழகான மகன் பிறந்தான்.

பிறகு, சென்னையில் பணிபுரிந்தபோது பயங்கரச் சிக்கலிலிருந்த என்னை வெளிநாட்டில் வேலை பார்க்கச் செய்து, என்னுடைய கஷ்டத்தைப் போக்கினார். பகவான் பாபா. இன்றும் என்னை நல்வழியில் நடத்திச் செல்கிறார். துன்பத்திலும், இன்பத்திலும் பாபா நாமத்தை மட்டுமே உச்சரிக்கும் பக்குவம் பெற்று விட்டேன். இது போல, பாபாவின் அருளால் என் வாழ்க்கையில் நடந்த அற்புத அனுபவங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம்.

- ராஜ்குமார், மஸ்கட்

(அடுத்த இதழில் நிறைவுறும்)




# பட்சண டிப்ஸ்!

**கி**ருஷ்ண ஜெயந்திக்கு சீடை செய்யும்போது, சீடையை அழுத்தி உருட்டாமல் இலேசாக உருட்டி எண்ணெயில் போட்டால், சீடை வெடிக்காமல் இருக்கும்.

**சீ**டையை உருட்டி பேப்பர் அல்லது துணியில் போட்டு பதினைந்து நிமிடம் கழித்து எண்ணெயில் போட்டு எடுக்க வேண்டும். சீடை எண்ணெய் குடிக்காமல் இருக்கும்.

**வெ**ல்லச்சீடை அலண்டு போகாமல் இருக்க, வெல்லத்தை இளம் பாகு வைத்து மாவை கொட்டி, கலந்து செய்ய வேண்டும்.

**சீ**டை, முறுக்கு செய்யும் போது ஈர மாவை வறுத்து செய்தால், மிகவும் சுவையாக இருக்கும்.

**கொ**ழுக்கட்டை மேல் மாவு செய்யும்போது, தண்ணீருடன் பால் கலந்து செய்தால் சுவையாக இருக்கும்.

**தே**ங்காயைத் துருவி, வறுக்கவும். வறுத்த முந்திரி, பாதாம் பருப்பை மிக்ஸியில் ஒரு சுற்றுச் சுற்றி, தேங்காயுடன் கலந்து வெல்லம் அல்லது சர்க்கரை சேர்த்து, பூர்ணம் செய்து கொழுக்கட்டை செய்யலாம்.

**க**டையில் தயாராக விற்கப்படும்



வரட்டு அரிசிமாவைப் பயன்படுத்துவதைவிட, ஊற வைத்து, நிழலில் உலர்த்தி, மிஷினில் அரைக்கப்பட்ட அரிசி மாவே பட்சணங்களுக்கு ஏற்றது!

கொஞ்சம் மெனக்கெட்டால், சுவையான நிறமான முறுக்கு செய்யலாம்.

- **வஸந்தாராமன்,**
**மும்பை**



# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்க திருவண்ணாமலை, வேலூர் மாவட்டங்களுக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- திருவண்ணாமாலை, வேலூர் வட்டாரத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார,. சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 20.8.09**

**கலக்க வருதுப்பா கல்கி** ம.ம

**திருவண்ணாமலை, வேலூர்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்

☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



# மறுவாழ்க்கை

எனது பெயர் நம்புகிருஷ்ணன். எனது வயது 66. சென்ற 30.10.07 இரவு சுமார் 9 மணி அளவில் எனது மார்பின் இடது புறம் எரிச்சல், வலி மற்றும் மூச்சுத் திணறல் ஏற்பட்ட காரணத்தால் சென்னை, வடபழனியில் இருக்கும் ஒரு பிரபல மருத்துவமனையில் அவசரப் பிரிவில் சேர்க்கப்பட்டேன்.

ICU வந்த நகரத்தின் பிரபல இதய டாக்டர் (Cardiologist) என்னை பரிசோதனை செய்துவிட்டு, உடனே ஆஞ்சியோ கிராம் செய்ய ஏற்பாடுகள் செய்தார். பரிசோதனைக்குப்பின் கடுமையான இதய அடைப்புகள் இரத்த நரம்புகளில் மூன்று இடங்களில் 70, 90, 100% என்ற நிலையில் இருப்பதாகவும், இன்னும் சில தினங்களில் By Pass Surgery என்ற இதய அறுவை சிகிச்சை செய்யப்பட வேண்டும் என்றும், அவ்வாறு செய்யத் தவறினால் உயிருக்கே ஆபத்து நேரும் என்று கூறிவிட்டார். இதற்காகும் செலவு ரூ. 4,00,000 (இலட்சங்கள்) என்றும் உடனே பணத்தை ஏற்பாடு செய்யும்படி அறிவுரை கூறிச் சென்றுவிட்டார். ஆனால் இதற்குள் மொத்தம் ரூ. 60,000 செலவாகி விட்டது. மேலும் பணத்துக்காக நான் அலைந்து கொண்டிருந்த நேரத்தில் மீண்டும் இதயத்தில் வலி, எரிச்சல், மூச்சுத்திணறல் ஏற்பட்டதால், மற்றொரு டாக்டரிடமும் இரண்டாவது கருத்து கேட்டேன். அவரும் அதையே சொன்னார். அந்தசமயம் என்னைக் காண வந்த எனது நீண்ட நாள் குடும்ப நண்பர் திரு. சாந்தகுமார் என்பவர், தனக்கும் இப்படி இதயக் கோளாறு இருந்ததாகவும், அறுவைசிகிச்சை தான் வழி என்று எல்லா டாக்டரும் சொன்னநேரத்தில்தான் Oxymed என்ற மருத்துவமனைக்குச் சென்றதாகவும், ஆனால் அங்குள்ள டாக்டர் திரு. அயாஸ் அக்பர் என்பவர், தனக்கு அறுவை சிகிச்சை அளித்ததாகவும், அதன்பின் எந்த தொல்லையும் இல்லாமல் எப்பொழுதும் போல், அன்றாட காரியங்களைச் செய்துகொண்டு (Normal Life) வாழ்ந்து வருவதாகவும் சொல்ல, அவரது அறிவுரைப்படி 31.12.2007 நந்தனத்தில் உள்ள மருத்துவமனைக்கு அவருடன் சென்றேன்.



காலை சரியாக 10 மணிக்கு என்னை அழைத்த டாக்டர் திரு. அயாஸ் அக்பர் அவர்கள், நான் அவர் முன் மிகுந்த சிரமத்துடன் சுவாசிப்பதையும், நடக்க சிரமப்படுவதையும், ஏன் நிமிர்ந்து உட்காரக் கூட சிரமப்படுவதையும் கண்டு, உடனே உடல் பரிசோதனை

செய்து உடனடியாக 3DCCG எடுத்து வாருங்கள். இது நூற்றுக்கு நூறு ஆஞ்சியோ கிராம் போன்றது. ஆனால் எந்தவித மருந்தும், உள்ளுக்கு கொடுக்காமல் கம்ப்யூட்டர் மெஷின் மூலம் துல்லியமாக இதயத்தின் தற்சமய நிலைமையை பிரிண்ட் செய்து உடன் (with in ½ hour) கொடுக்கும். ஆகவே எவ்வித சிரமும் நோயாளிக்கு இருக்காது என்று உறுதியுடனும், கனிவுடனும் அவர் கூறியவிதமே எனக்கு மிக்க நம்பிக்கை அளிப்பதாகவும் இருந்தது.

டாக்டரின் அறிவுரைப்படி ½ மணி நேரத்திற்குள் 3DCCG எடுக்கப்பட்டது. ரிப்போர்ட்படி 30, 70, 100% என்ற முறையில் 3 அடைப்புகள் எனது இதய இரத்த நாளங்களில் இருப்பதாகவும் இதற்கு ஐந்து நாட்கள் ஓஸோன், 15 நாட்கள் கிலேசன் என்ற மருத்துவ சிகிச்சை எடுத்துக் கொள்ளும்படியும் மற்றும் தினமும் 1 மணி நேரம் EECP மெஷின் சிகிச்சை தொடர்ந்து 35 நாட்கள் எடுக்க வேண்டும் என்று கூறினார். இதற்காக ஆஸ்பத்திரியில் பெட்டில் தங்க வேண்டிய அவசியம் இல்லை என்றும், தினசரி வீட்டுக்கு சென்று விடலாம் என்றும், இதற்கு மொத்தம் ஆகும் செலவு அறுவை சிகிச்சைக்கு ஆகும் செலவில் 3–ல் ஒரு பாகம் கூட ஆகாது என்றும் சொன்னார்.

அதன்படியும் அங்கிருந்த சில நோயாளிகள் சொன்ன விபரத்தின்படியும் எனது சிகிச்சையை மறுநாள் ஆரம்பித்தேன். 1½ மாத கிசிச்சைக்குப் பின் மீண்டும் 3DCCG எடுத்துப் பார்த்த பொழுது எனது இதய அடைப்புகள் முற்றிலும் நீக்கப்பட்டிருப்பது அறிந்து மிக்க ஆச்சரியமாகவும், மகிழ்ச்சியாகவும் இருந்தது. அதன் பிறகு மாதம் ஒரு முறை தனது Oxymed புற நோயாளி கிசிச்சைக்கு வரவழைத்து எனது உடல் நிலையைப் பரிசோதித்து தக்க அறிவுரை கூறி வருகிறார் திரு. அயாஸ் அக்பர் அவர்கள். இதற்காக கன்சல்டிங் பீஸ் அது, இது என 1 ரூபாய் கூட இன்று வரை கேட்ட்தில்லை.

தற்சமயம் நான் நார்மலாக எனது அன்றாடப் பணிகளைச் செய்து கொண்டு டாக்டர் சொன்ன சில யோகாசனங்களைச் செய்து கொண்டுமகிழ்ச்சியாக வாழ்ந்து வருகிறேன்.

வாழ்க Oxymed! வளர்க அதன் சேவை! இது சம்பந்தமாக என்னைத் தொடர்பு கொள்ள விரும்பினால் எனது Cell No. 9445342426.

இப்படிக்கு :

க. நம்புகிருஷ்ணன், 11.07.2009

இதன்மூலம் என்னைப் போன்ற இதய நோயாளிகள் காலத்தையும், பணத்தையும் வீணாக்காமல் தக்க சிகிச்சையைப் பெற்று நல்வாழ்வு வாழ முழு இதயத்துடன் இதை எழுதியுள்ளேன்.



பிரட் ஸ்லைசின் மேல் இலேசாகத் தண்ணீர் தெளித்து, சப்பாத்திக் கல்லில் வைத்து, தட்டை யாக்கிக் கொள்ளவும். தட்டையான பிரட் ஸ்லைசின் மேல் ப்ளான்ச் செய்த பாலக் இலையை பிரட் சைஸுக்கு மடித்துப் பரப்பவும். அதன்மேல் துரு விய சீஸைப் பரப்பி,

# குக்கரி க்வீன்!

## மிக்ஸ் அண்ட் மேட்ச் சமையல் போட்டி முடிவுகள்!

**கண்டிப்பாகப் பயன்படுத்த வேண்டிய பொருள்கள் : பாலக்கீரை + சீஸ்**

### க்ரன்ச்சி பாலக் சீஸ் ரோல்



**தேவையான பொருள்கள் :**

பாலக்கீரை - 10 இலைகள்
துருவிய சீஸ் - 1 கப்
பால் - 1/2 கப்
மிளகுத் தூள் - 1 டீஸ்பூன்
சீரகத் தூள் - 1 டீஸ்பூன்
பிரட் ஸ்லைஸ் - 5
உப்பு, எண்ணெய் - தேவைக்கு

**செய்முறை :** பாலக்கீரை இலைகளை நன்றாகக் கழுவிச் சுத்தம் செய்து வைத்துக் கொள்ளவும். ஒரு பாத்திரத்தில் 1/2 கப் பாலுடன் அதே அளவு தண்ணீர், ஊற்றிக் கொதிக்க வைக்கவும். அதில் பாலக் இலைகளைப் போட்டு ப்ளான்ச் செய்ய வும். எல்லா பாலக் இலைகளையும் ப்ளான்ச் செய்யவும்.

மிளகுத்தூள், சீரகத்தூள், உப்புத் தூவி அதன்மேல் மற்றொரு பாலக் இலையால் மூடவும். அப்படியே சிலிண்ட்ரிகல் ரோல் ஆகச் சுருட்டிப் பிடிக்கவும்.

மற்ற பிரட் ஸ்லைஸ் ரோல்களையும், இதேபோல் செய்யவும். ஒரு கடாயில்

எண்ணெய் ஊற்றிக் காய்ந்ததும் ரோல்களைப் போட்டுப் பொன்னிறமாகப் பொரித்தெடுக்கவும்.

சுவையான க்ரன்ச்சி பாலக் சீஸ் ரோல் ரெடி! தக்காளி சாஸுடேன் பரிமாறவும். தனியாகவும் சாப்பிடலாம்.

**பின்குறிப்பு :**

1) பிரட் ஸ்லைசின்மேல் தண்ணீர் தெளிப்பதற்குப் பதில் மஞ்சள்பொடி கலந்த தண்ணீரைத் தெளித்து, தட்டையாக்கிச் செய்தால், க்ரன்ச்சி ரோல் மஞ்சளும் பிரவுனுமாகக் கலர்ஃபுல்லாக வரும்.

2) பார்ட்டிகளில் பாலக் சீஸ் ரோலை இரண்டாகக் கட் செய்து வைக்கலாம். வெட்டப்பட்ட பகுதி பார்க்க அழகாக இருக்கும்.

3) ப்ளான்ச் செய்த பாலை வீணாக்காமல் சமைக்கும்போது சூப்பிலோ, ரசத்திலோ, பருப்பிலோ அல்லது சாம்பாரிலோ சேர்த்துவிடலாம்.

**- மீனாட்சி அம்மாள், சேலம்**

**குக்கரி க்வீன் போட்டிக்கு வந்து குவிந்த சமையல் குறிப்புகளைப் பொறுமையாக அலசி, சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்துத் தந்த கோமளா நாராயணனுக்கு நன்றி!**



## பாலக் போன்டா சீஸ் மசாலா

**தேவையான பொருள்கள் :**

**போண்டாவுக்கு :**

பாலக்கீரை (இளசு) - 1 கட்டு
கடலைப்பருப்பு - 100 கிராம்
சோயா பீன்ஸ் - 100 கிராம்
வர மிளகாய் - 7
சோம்பு - 1 டீஸ்பூன்
கறிவேப்பிலை - 2 கொத்து
பெரிய வெங்காயம் - ஒன்று
சோளமாவு - 1 டீஸ்பூன்
உப்பு, எண்ணெய் - தேவையான அளவு

**மசாலாவுக்கு :**

சீஸ் - 200 கிராம்
பெரிய வெங்காயம் - 2
தக்காளி - 2
ப. மிளகாய் - 2
இஞ்சி-பூண்டு விழுது - 1 டேபிள் ஸ்பூன்
காஷ்மீர் மிளகாய்ப் பொடி - 1 டீஸ்பூன்
தனியாப் பொடி - 2 டீஸ்பூன்
கரம் மசாலாப் பொடி - 1 டீஸ்பூன்
கசகசா - 1 டீஸ்பூன்
முந்திரிப் பருப்பு - 7
உப்பு, எண்ணெய் - தேவையான அளவு

**செய்முறை :**

சோயா பீன்ஸை ஆறு மணி நேரமும் கடலைப் பருப்பை ஒரு மணி நேரமும் ஊற வைக்கவும். பின்பு, தனித்தனியாக, வரமிளகாய், சோம்பு



சேர்த்துக் கரகரப்பாக அரைத்துக் கொள்ளவும்.

நன்றாக அலசி பொடியாக அரிந்த பாலக்கீரை, பொடியாக நறுக்கிய வெங்காயம், கறிவேப்பிலை, உப்பு, சோளமாவு அனைத்தையும் மாவுடன் கலந்து சிறுசிறு போண்டாக்களாகப் பொரித்தெடுக்கவும்.

வெங்காயம், தக்காளி நறுக்கி வதக்கி அரைத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் காய வைத்து, இஞ்சி-பூண்டு, விழுது போட்டு வதக்கவும். பச்சை மிளகாய், வெங்காய-தக்காளி கலவை, உப்பு, தனியாப் பொடி மிளகாய்த் தூள் சேர்த்து வதக்கவும். ஐந்து நிமிடம் கழித்து கரம் மசாலாத் தூள் சேர்த்து வதக்கி, தேவையான அளவு நீர் சேர்த்து கொதிக்கவிடவும். கசகசா, முந்திரியை ஊறவைத்து அரைத்து கலந்து கடைசியில் ஐந்து நிமிடம் கொதிக்க வைத்து அடுப்பை அணைக்கவும்.

இப்போது போண்டாக்களை வாயகன்ற பாத்திரத்தில் போட்டு, மசாலா கலவையைச் சேர்க்கவும். சீஸை ஃப்ரிட்ஜில் இருந்து எடுத்து, துருவி போண்டாக்களின் மேல் அலங்கரிக்கவும்.

புரோட்டின், வைட்டமின் நிறைந்த பாலக்போண்டா சீஸ் மசாலா ரெடி. சப்பாத்தி, பூரி, இட்லியுடன் சாப்பிட சுவையாக இருக்கும்.

- பிரீத்தி கிருஷ்ணமூர்த்தி,
அந்தமான்

## பாலக் பகோடா சாட்

**தேவையான பொருள்கள் :**

பாலக் இலைகள் - 20
சீஸ் துண்டங்கள் - 5
கடலைமாவு - 1 கப்
மிளகாய்த் தூள் - 1/2 தேக்கரண்டி
ஓமம் - 1/4 தேக்கரண்டி
உப்பு, எண்ணெய் - தேவையான அளவு

**புதினா சட்னி செய்ய :**

புதினா, கொத்தமல்லி இலை - 2 கப்
பச்சை மிளகாய் - 1
சர்க்கரை - 1/2 தேக்கரண்டி
எலுமிச்சை சாறு - 1 தேக்கரண்டி
பொட்டுக்கடலை - 1 மேசைகரண்டி
உப்பு - தேவையான அளவு

**இனிப்பு சட்னி :**

பேரீச்சை - 100 கிராம்
புளி - 1 சிறு உருண்டை
வெல்லம் - சிறிதளவு
சாட் மசாலா - 1 தேக்கரண்டி
மிளகாய்த்தூள் - 1/4 தேக்கரண்டி
வறுத்த சீரகத்தூள் - 1/2 தேக்கரண்டி
உப்பு - தேவையான அளவு

**அலங்கரிக்க :**

பொடியாக நறுக்கிய வெங்காயம்
பொடியாக நறுக்கிய கொத்தமல்லி
சாட் மசாலா - 1 தேக்கரண்டி

**செய்முறை :** புதினா சட்னிக்கான பொருள்களைச் சேர்த்து, மிக்ஸியில் சட்னி அரைத்துக் கொள்ளவும்.

பேரீச்சை, புளி, வெல்லம் கொஞ்சம் தண்ணீர் சேர்த்து, கொதிக்க வைக்கவும். பிறகு, ஆறியதும், அரைத்து வடிகட்டி, உப்பு, மற்றும் எல்லா பொடிகளையும் சேர்த்துக் கலக்கினால், இனிப்புச் சட்னி தயார்.

பாலக் இலையைச் சுத்தம் செய்து கொள்ளவும். கடலைமாவு, உப்பு, மிளகாய்த்தூள், ஓமம் சேர்த்து, கெட்டி பஜ்ஜி மாவு தயாரிக்கவும்.

எண்ணெய் சூடானதும் ஒரு தேக்கரண்டி சூடான எண்ணெயை எடுத்து மாவில் ஊற்றி நன்றாகக் கலக்கவும். பாலக் இலை ஒன்றின் மேல் பாதி சீஸ் ஸ்லைஸ் வைத்து அதன் மேல் கொஞ்சம் புதினா சட்னி பூசி, இன்னொரு பாலக் இலையை அதன் மேல் வைத்து அழுத்தி, பஜ்ஜி

மாவில் தோய்த்து சூடான எண்ணெயில் போட்டு, பொன்னிறமாகப் பொரித் தெடுக்கவும்.

இதேபோல் எல்லா பஜ்ஜியும் செய்து எடுத்து தட்டில் பரவலாக வைத்து, அதன் மேல் சாட் மசாலா தூவி, இனிப்புச் சட்னி



தெளித்து, வெங்காயம், கொத்தமல்லி தூவி பரிமாறவும்.

**- காமாக்ஷி சுந்தரம், சென்னை**

## சீஸ் பாலக் பேக்ட் டிஷ்

**தேவையான பொருள்கள் :**

பாலக்கீரை - 2 கட்டு
பச்சை மிளகாய் - 2
பெரிய வெங்காயம் - 1
இஞ்சி - இரண்டு துண்டு
பூண்டு - 3 பல்
மக்ரோணி - 1 கப்
துருவிய சீஸ் - 1 கப்
நெய் - 2 டேபிள் ஸ்பூன்
சர்க்கரை - 1 டீஸ்பூன்
க்ரீம் - 1/2 கப்
உப்பு - தேவையான அளவு

**வெள்ளை சாஸ் செய்ய :**

வெண்ணெய் - 2 டேபிள் ஸ்பூன்
மைதா - 1 டேபிள் ஸ்பூன்
பால் - 1 கப்
மிளகுத் தூள், உப்பு - தேவையான அளவு

**செய்முறை :** பாலக்கீரையை நன்கு கழுவி சிறிது தண்ணீரில் சர்க்கரை சேர்த்து (நிறம் மாறாமலிருக்க) இரண்டு நிமிடம் வேகவைத்து ஆறவிடவும். பின் மிக்ஸியில் அரைத்துக் கொள்ளவும்.

வெங்காயம், ப.மிளகாய், இஞ்சி, பூண்டு இவற்றை அரைத்து வாணலியில் நெய்விட்டு பச்சை வாசனை போகும் வரை நன்கு வதக்கவும். பிறகு அதில் அரைத்து வைத்துள்ள பாலக்கீரையை போட்டு, தேவையான உப்பு போட்டு இரண்டு நிமிடம் வதக்கவும்.

மக்ரோணியை நான்கு கப் தண்ணீர், ஒரு டீஸ்பூன் நெய் ஊற்றி வேக வைத்து தண்ணீரை வடிகட்டி, குளிர்ந்த நீரில் அலசி வைத்துக் கொள்ளவும்.

வாணலியில் வெண்ணெய்போட்டு குறைந்த அளவில் உருக்கவும். அதனுடன் மைதா சேர்த்து அடிக்கடி கிளறிவிட்டு கொண்டே கொஞ்சம் கொஞ்சமாகப் பால் ஊற்றவும். கொஞ்சம் கெட்டியானதும் மிளகுத் தூள், சர்க்கரை சேர்த்து நன்கு கிளறி அடுப்பை அணைத்துவிடவும். இதில் வதக்கி வைத்துள்ள பாலக், மக்ரோணியைப் போட்டு நன்கு கலந்து பேக்கிங் செய்யும் பாத்திரத்தில் போட்டு, மேலே துருவிய சீஸ், க்ரீம் (பால் ஏடு) போட்டு அவனில் வைத்து பழுப்பு நிறம் வரும்வரை பேக் செய்யவும்.

இதை அப்படியே சாப்பிடலாம். அல் லது பூரி, சப்பாத்தி, நான் போன்றவற் றுடனும் சாப்பிடலாம். 'அவன்' இல்லா விடில் குறைந்த தணலில் வைத்து, சீஸ்

சிறிது பழுப்பு நிறம் வரும்வரை வைத்துச் சாப்பிடலாம்.

- சீதாலக்ஷ்மி, தானே

## பாலக் சீஸ் சப்ஜி

**தேவையான பொருள்கள் :**

பாலக் - 1 கட்டு

சீஸ் துருவல் - ¼ கப்

வெந்தயக் கீரை - ¼ கப் (இலைகளை மட்டும் எடுத்து அலசி வைக்கவும்)

உருளைக்கிழங்கு - ¼ கிலோ (தோல், சீவி, குழையாமல் வேகவிட்டு சிறு துண்டுகளாக்கவும்)

பச்சை மிளகாய் - 3

பெரிய வெங்காயம் - 2

பெங்களூர் தக்காளி - 3

இஞ்சி - 1 துண்டு

பூண்டு - 3 பல்

வெல்லம் - சுண்டைக்காய் அளவு

நெய் - 4 அல்லது 5 டீஸ்பூன்

மிளகுத்தூள் (அ) மிளகாய்த் தூள் - ¼ டீஸ்பூன்

புளிப்பில்லாத புதிய கெட்டித் தயிர் - 1 கப் (நன்கு கடைந்துகொள்ளவும்)

உப்பு - தேவையான அளவு

**செய்முறை :** பாலக்கீரை, வெந்தயக் கீரை இரண்டையும் ஒரு டீஸ்பூன் நெய்யில் வதக்கி உப்பு ஒரு சிட்டிகை போட்டு, ஆறியபின் அதனுடன் பச்சை மிளகாயையும் போட்டு அரைத்துக் கொள்ளவும். மீதி உள்ள நெய்யில் வெங்காயம் போட்டு பொன்னிறமாக வதக்கி, இஞ்சி, பூண்டு போட்டு வதக்கவும். பிறகு, தக்காளி, தேவையான உப்பு, மிளகாய்த்தூள் (அ) மிளகு தூள் போட்டு தக்காளி வதங்கி நெய் பிரிந்து வரும் சமயத்தில், அரைத்து வைத்துள்ள கீரையைப் போட்டு நன்கு கிளறிவிடவும். (அடுப்பை நிதானமாக எரியவிடவும்)

வெட்டி வைத்துள்ள உருளைக்கிழங்கைப் போட்டு இரண்டு நிமிடங்கள் கொதிக்கவிட்டு வெல்லம் சேர்த்து அடுப்பிலிருந்து இறக்கி வைக்கவும். தயிரை ஊற்றிக் கலந்துவிடவும்.

பரிமாறும் பாத்திரத்துக்கு, பாலக் சீஸ் சப்ஜியை மாற்றவும். சீஸ் துருவலை மேலே தூவி அலங்கரிக்கவும். மிகவும் சுவையும், சத்துக்களும் நிறைந்த இந்த பாலக் சீஸ் சப்ஜியை, கீரை சாப்பிடாத குழந்தைகளும் விரும்பிச் சாப்பிடுவார்கள். இதைச் செய்வதும் எளிது.

சாப்பாடு மற்றும் பூரி, சப்பாத்தி, தோசை போன்றவற்றுக்கு சைட் டிஷ்ஷாகவும் பரிமாறலாம்.

- எஸ்.சீதாலக்ஷ்மி, மதுரை



## மஞ்சள் பிள்ளையார்!

சென்ற வருட விநாயகர் சதுர்த்தி அன்று நான் அமெரிக்காவில் இருந்தேன். எப்போதும் களிமண்ணில் விநாயகர் செய்து வழிபடும் எனக்கு, அமெரிக்காவில் எங்கு தேடியும் களிமண் கிடைக்கவில்லை. உடனே மஞ்சளை நீரில் ஊற வைத்து, நன்கு அரைத்து விநாயகர் செய்தேன். என்னிடம் இருந்த சமிக்கி, சிறிய மணி, புடைவையில் பதிக்கும் வண்ணக் கற்கள், பிறை வடிவ சமிக்கி கொண்டு அலங்கரித்து வழிபட்டேன். அன்று அங்கு எங்கள் இல்லத்துக்கு வந்த அமெரிக்க நண்பர்கள் பலரும் வியந்து பாராட்டினார்கள்.

- செ.கலைவாணி, சென்னை

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

வழங்கும்

## ஆன்மிகப் போட்டி - 7

# ரூ. 5,000 பரிசு

பெருமைக்குரிய நமது இதிகாசங்கள், காவியங்கள், புராணம், திருக்கோயில்கள் போன்றவற்றிலிருந்து வினாக்களைத் தந்திருக்கிறோம். ஒவ்வொரு கேள்விக்குக் கீழேயும் மூன்று பதில்கள் தரப்பட்டுள்ளன. சரியான விடையைத் தேர்ந்து '✔' செய்து அனுப்புங்கள். குலுக்கல் முறையில் 20 பேருக்கு தலா ரூ.250/- பரிசளிக்கப்படும்... எங்கே உங்க ஆன்மிக அறிவை சோதிச்சுப் பாருங்க!



1. காசியில் பிரபலமான சிவபெருமானின் பெயர் என்ன?
   (அ) சுந்தரரேஸ்வரர் ☐
   (ஆ) ஏகாம்பரேஸ்வரர் ☐
   (இ) விஸ்வநாதர் ☐

2. ராம இலக்குவரை மிதிலை சுயம்வரத்திற்கு அழைத்துச் சென்ற முனிவர் யார்?
   (அ) வசிஷ்டர் ☐
   (ஆ) விஸ்வாமித்திரர் ☐
   (இ) பரத்வாஜர் ☐

3. அர்ஜுனன் மகன் அபிமன்யு எந்த வியூகத்தில் சிக்கி இறந்தான்?
   (அ) சர்ப்ப வியூகம் ☐
   (ஆ) சக்கர வியூகம் ☐ (இ) கருட வியூகம் ☐

4. கஜானனன் என்ற பெயர் கொண்டவர் யார்?
(அ) விநாயகர் ☐ (ஆ) முருகர் ☐ (இ) சிவபெருமான் ☐

5. பந்தள மன்னனின் மகனாக வளர்ந்த தெய்வம் யார்?
(அ) பரசுராமன் ☐ (ஆ) மணிகண்டன் ☐ (இ) பலராமன் ☐

6. 'ஸ்வாமி புஷ்கரிணி' என்று அழைக்கப்படும் புண்ணியக் குளம் எங்கு உள்ளது?
(அ) திருமலை ☐ (ஆ) பழனி ☐ (இ) வாரணாசி ☐

7. வள்ளியை மணக்க முருகப்பெருமான் எந்த வேடமிட்டார்?
(அ) யானை ☐ (ஆ) மீனவர் ☐ (இ) முதியவர் ☐

8. கன்யாகுமரி அம்மன் யாரை வதம் செய்தார்?
(அ) நரகாசூரன் ☐ (ஆ) விருத்தாசூரன் ☐ (இ) பாணாசூரன் ☐



9. கைலாயத்தின் அருகில் உள்ள புண்ணிய தீர்த்தம் (ஏரி) எது?
(அ)கமலாலயம் ☐ (ஆ)மானசரோவர் ☐ (இ)நர்மதை ☐

10. பரீட்சித்து மகாராஜாவுக்கு ஸ்ரீமத் பாகவத புராணத்தை உபதேசித்த முனிவர் யார்?
(அ) சுகப்பிரம்மர் ☐ (ஆ) வசிஷ்டர் ☐
(இ) பரத்வாஜர் ☐

- ஜி.எஸ்.எஸ்.

## போட்டி விதிகள் :

ஆன்மிக விடைகளை நிரப்பி இந்தப் பக்கத்தைக் கிழித்து அனுப்புங்க. ஒருவரே எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஜெராக்ஸ் கூடாது.

அனுப்ப வேண்டிய முகவரி : ஆன்மிகப் போட்டி - 7, மங்கையர் மலர்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032.

கடைசித் தேதி : 15.08.2009

பெயர் : .............................................. விலாசம் : ..............................................
..............................................................................................
..............................................................................................
தொலைபேசி எண் : .............................. ஈ-மெயில் : ..............................



மறக்க முடியாத அனுபவம்

# "ஐயோ... விழுந்துடுச்சே!"

இரண்டு வருடங்கள் முன்பு, நடந்த சம்பவம் இது. என் கணவர் வெளியூர் சென்றிருந்தார். நான், எனது இரண்டு வயது செல்லப் பெண்ணைத் தூக்கிக் கொண்டு, என் பெற்றோரை வழியனுப்ப இரயில் நிலையம் சென்றிருந்தேன்.

இரயிலில் என் பெற்றோர் ஏறி ஜன்னலோரம் உட்கார, நான் அவர்களிடம் வெளியில் நின்று பேசி கொண்டிருந்தேன். திடீரென்று என் குழந்தை என் கண்ணாடியைக் (-5 பவர்) கீழே தட்டிவிட்டாள். கண்ணாடி தண்டவாளத்தில் விழுந்துவிட்டது. கண் சரியாக தெரியாத நிலையில், அது விழுந்த இடத்தை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை.

சிறு குழந்தையை வைத்துக்கொண்டு தண்டவாளத்தில் இறங்கி தேடவும் முடியவில்லை. இரயில் கிளம்ப ஐந்து நிமிடங்கள் மட்டுமே இருந்ததால், நான் உதவி கேட்ட யாரும் கீழே இறங்கத் தயாராக இல்லை. என் வயதான பெற்றோரோ செய்வதறியாது திகைத்து நின்றனர்.

கண் சரியாக தெரியாத நிலையில், சிறு குழந்தையை அழைத்துக் கொண்டு எப்படி வீடு திரும்புவது என்று நினைத்து எனக்கு பதற்றமாகிவிட்டது. இறுதியில், என் நிலைமையைப் பார்த்து பரிதாபப்பட்ட ஓர் இராணுவவீரர், வண்டி கிளம்ப இரண்டே நிமிடங்கள் இருந்தபோது, கீழே இறங்கி என் கண்ணாடியை எடுத்துக் கொடுத்தார். அதிர்ஷ்டவசமாக, கண்ணாடி உடையவில்லை. நா தழு தழுக்க அவருக்கு நன்றி கூறினேன். சரியான தருணத்தில் உதவி செய்த அந்த நபரை நான் இன்றைக்கும் மறக்கவில்லை.

அதனால் தோழிகளே, அதிகமான பவர் உள்ள கண்ணாடியை அணிபவர்கள், கைப்பையில் அதே பவருள்ள ஒரு மாற்றுக் கண்ணாடியை வைத்திருந்தால், இது மாதிரி தர்மசங்கடமான தருணங்களிலிருந்து தப்பிக்கலாம். தேர்வுக்குச் செல்பவர்கள், பயணம் செய்பவர்களும் மாற்றுக் கண்ணாடியை மறக்காமல் எடுத்து செல்வது அவசியம்!

- எஸ்.சங்கீதா, ஹைதராபாத்

3 உஷா ராமகிருஷ்ணன்

# சாரதா பேசுகிறேன்!

அங்கம் அங்கமாக பொறுக்க முடியாத வலி தொடர்ந்தது. அமிட்ரிப்டாலின் மாத்திரைகள் வலி பொறுக்கும் தன்மையை அதிகரிக்கும் என்று அதைக் கொடுத்தார்கள். இதனால் வலி மட்டும் குறையவில்லை, நான் நடமாடுவதே குறைந்துவிட்டது. நாளின் பெரும் பகுதி தூக்கமா மயக்கமா என்று தெரியாத நிலை.

இதற்குப் பிறகு, அளவுக்கதிகமாக உற்பத்தியாகும் எதிர்ப்பு சக்தியை ஸ்டீராய்ட் கட்டுப்படுத்தும் (இம்யூனோஸப்ரஸன்ட்) என்பதால் அதைக் கொடுக்கத் தொடங்கினார்கள். முதலில் 60 எம்.ஜி அளவு கொடுக்க முடிவு எடுக்கப்பட்டது, இதனால், ஓரளவு சுதாரித்துக் கொண்டு நடமாடத் தொடங்கினேன். இரட்டை முனை கத்தி போல் விளங்கும் ஸ்டீராய்ட்ஸ், உடலுக்கு தெம்பைக் கொண்டு வர உதவும். அதே நேரத்தில், பக்க விளைவுகளையும் ஏற்படுத்தும். அதில் ஒன்று தூக்கமின்மை.

**தீராத நோயோடு போராடும் ஒரு பெண்ணின் தன்னம்பிக்கை ததும்பும் உண்மைக் கதை!**

என் உடல் நிலையில், நான் தொடர்ந்து கஷ்டத்தை அனுபவித்தாலும், மனதை திடமாக வைத்துக் கொள்ளும் சக்தியை கடவுள் எனக்குக் கொடுக்கிறார் என்பதை இங்கே வலியுறுத்தியே ஆக வேண்டும்.

கவலைப்படக் கூடாது, மனதில் பாரம் தோன்றக் கூடாது என்றெல்லாம் முயற்சி எடுத்தாலும், என்னால் தூங்க முடியவில்லை. தூக்க மாத்திரை போட்டுக் கொண்டாலும், இன்னும் அதிகத் தெளிவாக இரவில் நடமாடும் விசித்திரம் நடந்தது.

லதா மங்கேஷ்கரே என் அருகில் அமர்ந்து தாலாட்டுப் பாடினாலும் தூக்கம் வருவதாக இல்லை. நிம்மதியாகத் தூங்குபவர்களையும் எழுப்பிவிடுவதில் பயன் இல்லை.

இரவு முழுதும் கண் விழித்துக் கிடக்கும் போது, பயப்படுவதற்குப் பதிலாக, காதில் கேட்கும் சத்தங்களையும், கண்ணில் தெரியும் நிழல் பிம்பங்களையும் கவனிப்பேன். கயிற்றைப் பிடித்துக் கொண்டு நாயின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்த முயலும் மனிதரை அந்த நாய், தன் வேகத்

"எனக்கு வந்திருக்கும் நோய் சார்ந்த கவலைகள் என்னைத் தாக்காமல் இருக்க சுய ஊக்கம் செய்து கொண்டும் கூட, மருந்துகளால் ஏற்பட்ட பின் விளைவுகள் என்னைத் தூங்க விடவில்லைதான். கவலைகளில் மூழ்கி, அதனால் தூக்கத்தை இழந்திருப்பவர்கள், இன்று முதல் நிம்மதியாகத் தூங்குவது ஒரு வரபிரசாதம் என்பதை உணர்ந்து, நிதர்சனமான வாழ்க்கை வாழப் பழக வேண்டும். கஷ்டங்களைத் தாண்டி அமைதியைக் காத்துக் கொள்வது முழுக்க முழுக்க நம் வசம் தான் இருக்கிறது!"



துக்கு இழுத்துக் கொண்டு போவ தைத் தெருவில் பார்க்கிறோமே, அது போல, எண்ண ஓட் டங்களைக் கட்டுப் படுத்த நான் முயல, அந்த எண்ணங்கள் என்னை ஒரு பொருட் டாக மதிக்காமல் ஓடிக் கொண்டே இருக்கும்.

தொலைக்காட்சி பார்ப் பது, புத்தகம் படிப்பது என்று இரவுப் பொழுதைக் கழிக்கத் தொடங்கினேன். எனக்குள் இருந்த கேள்வி கள், வருத்தம், விரக்தி எல்லா வற்றுக்கும் எழுத்தின் மூலம் வடிகால் தேடினேன். தூக்க மின்மையை நினைத்துக் கவலைப்பட்டால், தூக்க மின்மை, கவலை இரண் டுமே அதிகரிக்கும் என்பதை எனக்கு நானே புரிய வைத் துக் கொண்டேன். 'இன்று தூக்கம் வரவில்லையென் றால் என்ன, நாளை தூங்கிக் கொள்ளலாம்' என்று சமா தானம் சொல்லிக் கொள் வேன்.

**டா**க்டர். ராஜசேகர், ருமடாலஜிஸ்ட், ஆர்த்ரைடிஸ் அண்ட் ருமடாலஜி கேர் சென்டர்.

"ருமடாய்ட் ஆர்த்ரைடிஸ் குடும்பத்தைச் சேர்ந்த **ஸ்லீரோடெர்மா** என்ற நோயினால் சருமம் தடிமனாகவும் இறுக்கமாகவும் ஆகிறது. சாரதாவைத் தாக்கியிருக்கும் **ஸிஸ்டமிக் ஸ்லீரோஸிஸ்** வகை எந்த உள்ளுறுப்பையும் எந்த நேரத்திலும் தாக்கக் கூடும். இதனுடைய முக்கியமான ஆரம்ப அறிகுறிகள் இரண்டு - சருமம் இழுக்க அல்லது கிள்ள முடியாதபடி ஓர் இறுக்கத்தை அடையும். இரண்டாவது ரேனாட்ஸ் ஃபினாமினன் அதாவது, மிகவும் சில்லென்ற பொருளில் கைகளை வைக்கும் போது சுருங்கியிருக்கும் ரத்த நாளங்கள் மேலும் சுருங்கி, ரத்த ஓட்டம் சீராக இல்லாமல் போய் அந்த இடம் நீலம் பாய்ந்தாற் போல் தோன்றும்.

இன்று வரை ஸ்லீரோடெர்மாவை குணமாக்கும் மருந்து கண்டுபிடிக்கவில்லை.



**இ**ந்தத் தூக்கமின்மை ஒரு மாதத் திற்குத் தொடர, 'உங்களுக்கு உடல் நிலையில் நல்ல முன்னேற்றம் தெரி கிறது. இனி ஸ்டீராய்ட்ஸ் அளவை படிப்படியாக குறைத்துக் கொள்ளலாம்' என்று மருத்துவர்கள் முடிவு செய் தார்கள்.

அளவைக் குறைத்த உடனே, புது விதமான பிரச்னைகள் தோன்றின. உடல், கை, கால் எல்லாம் வெடவெடவென்று நடுங் கும்; சின்ன அதிர்வில்கூட படபடப்பு தோன்றும். தலைவலி பிளக்கும்; இனம் புரியாத அமைதியின்மையும் அவஸ்தையும் இருக்கும். என் முகம் முழுவதுமாக வீங்கி, பூசணிக்காயில் பாகங்கள் வரைந்தது போன்று தோன்றும். எனக்கே என்னை அடையாளம் தெரியாத அளவுக்கு வீங்கிப் போகும்.

மருத்துவரிடம் இது பற்றிக் கூறிய போது, இது 'வித்ட்ராயல்' அறிகுறி- போதைமருந்து போல ஸ்டீராய்ட்ஸ் அளவைக் குறைத்த உடனே இப்படி

அவ்வப்போது தோன்றும் அறிகுறிகளை மட்டுமே குணப்படுத்துகிறோம். நுரையீரல், இதயம், கிட்னி, வயிறு என்று எந்த உறுப்பு வேண்டுமானாலும் பாதிப்புக்குள்ளாகும் அபாயம் இந்த வகையில் இருக்கிறது. ஒரு நல்ல விஷயம் என்னவென்றால், இதன் சிகிச்சையில் ஆராய்ச்சியாளர்கள் ஈடுபட்டிருப்பதால் சில வருடங்களில் இதற்கு முழு நிவாரணம் வரும் என்று எதிர்பார்க்கலாம்.

எந்த நோயானாலுமே ஆரம்பத்திலேயே அணுகிவிட்டால் பாதிப்புகள் குறையும். தேவையில்லாத தாமதத்தினாலும், பணம் செலவு செய்யத் தயங்கியும் டாக்டரிடம் போகாமல் இருக்கக் கூடாது. டாக்டர் மீதும், இறைவன் மீதும் நம்பிக்கை வைத்து, டாக்டர்கள் அறிவுரைக்கேற்ப மருத்துவம் செய்து கொண்டால் நோய்கள் முற்றுவதைத் தவிர்க்கலாம்.''

ஆகும் என்பது புரிய வைக்கப் பட்டது.

**ம**ருந்துச் சங்கிலித் தொடர்ந்தது. ஸ்டீராய்ட்ஸினால் ஏற்பட்ட மனவுளைச்சலைப் போக்க வேறொரு மருந்தைக் கொடுத்தார்கள். அந்த மருந்தினால் அசாதாரணமான விஷயங்கள் நடந்தன. எந்த ஒரு சாதாரண செயலிலும் ஓர் அபரிமிதமான பீதி தோன்றும். உதாரணத்துக்கு, ஒரு ஸ்விட்சை போடப்போனால், அது அப்படியே வெடித்து விடுவது போன்ற பிரமை தோன்றும். ஃபேன் சுற்றினால், மேலே விழுந்து விடுமோ என்ற அச்சம் வரும். எனக்கு என்னவோ ஆகிவிட்டது என்று பயந்துவிட்டேன்.

படிப்படியாக ஸ்டீராய்ட்ஸ் அளவைக் குறைக்கக் குறைக்க, அதன் பாதிப்புகளிலிருந்து மீள்வது ஒரு புனர்ஜன்மமாகவே எனக்கு அமைந்தது.

**எ**னக்கு மட்டும் ஏன் இப்படி என்று நான் நொந்து கொண்டபோது, என் அம்மா அருகில் அமர்ந்து, ''சாரதா, உனக்கு ஒரு நல்ல டாக்டர் கணவராக வந்திருக்கிறார், சிகிச்சை செய்யத் தேவையான அளவு பண வசதி இருக்கிறது; மணியான குழந்தைகளும், உனக்கு பக்கபலமாய் இத்தனை நெருங்கின சொந்தங்களும் இருக்கிறோம். இதெல்லாம் இல்லாமல் உனக்கு இந்த நோய் வந்திருந்தால் பல மடங்கு கஷ்டமாக இருந்திருக்குமே. வந்த கஷ்டத்தை நினைத்து வருந்துவதற்கு பதிலாக, கடவுள் தந்திருக்கும் நல்ல விஷயங்களை நினைத்து திருப்தி அடைய கற்றுக் கொண்டாயானால் உடலோடு மனமும் சீர் கெடாமல் இருக்குமே'' என்று சொன்னபோது ரொம்ப தெம்பாக இருந்தது.

நாட்கள் ஓடின... லண்டனில் பணிபுரியும் டாக்டர். நவரத்னம் என்ற ருமடாலஜிஸ்டை சந்திக்க நேர்ந்தது. என் சருமமெல்லாம் இறுகியும் தடித்தும் போயிருப்பதை சுட்டிக் காட்டி, வந்திருப்பது ஸ்லீரோடெர்மா என்று அவர் தான் உணர்த்தினார் - பிரச்னைகள் தொடங்கி பத்து வருடங்களுக்குப் பிறகு.

''உன் நோய் கட்டுப்படுத்தப்பட்டு, நிலை முன்னேற வேண்டுமென்றால், கிமோ தெரபி கொடுக்க வேண்டும்'' என்றார்.

**(இன்னும் பேசுவேன்)**

திருத்தல மகிமை

# கண் நோய் குணமாக...



திருவாரூர் - திருத்துறைப் பூண்டி சாலையில் பன்னிரண்டாவது கிலோ மீட்டரில் திருக்காரவாசல் என்ற ஸ்தலம் உள்ளது. இங்குள்ள மூலவரின் பெயர் கண்ணாயிர நாதர். தாயார் கைலாச நாயகி.

சாபத்தால் பீடிக்கப்பட்டு பதவி இழந்த பிரம்மன், இங்கு வந்து கடுந்தவம் செய்தபின், ஆயிரம் கண்களுடன் சிவன் அவருக்குக் காட்சியளித்ததாக ஸ்தல வரலாறு.

இறைவன் ஒரு கண்ணைத் திறந்தாலே பிரச்னை! அப்படியிருக்க ஆயிரம் கண்களைத் திறந்ததால் பெரும் பிரளயங்கள் ஏற்படத் துவங்கியதாம். தேவர்கள் நடுங்கி, பார்வதியை வேண்ட, அவர் உடனே ஓடி வந்து சிவனை ஆலிங்கனம் செய்து சாந்தப்படுத்தினாராம்.

இதனைக் கண்ட பிரம்மன், ''ஆயிரம் கண்களுடன் காட்சியளித்த நீ, இங்கு உன்னைத் தேடி வரும் பக்தர்களின் கண்களில் ஆயிரம் பிரச்னை என வந்தாலும் குணப்படுத்த வேண்டும்'' என சிவனிடம் வேண்ட, அவரும் சம்மதித்தார். இந்தக் கண்ணாயிரநாதரிடம் கண் சார்பாக வேண்டிக் கொண்டால் குணம் நிச்சயம்.

இறைவனுக்கு சாத்திய தைலத்தையும் (கரிசலாங் கண்ணி + பொன்னாங்கண்ணி + தேங்காய் எண்ணெய் கலந்தகலவை) தேனில் ஊறவைத்த அத்திப் பழங்களையும் பிரசாதமாகத் தருகின்றனர்.

நாற்பத்தியெட்டு நாட்கள் தினமும் காலையில் எழுந்ததும் வெறும் வயிற்றில், தைலத்தைத் தலையில் தேய்த்து, நீராடி அத்திப் பழம் ஒன்றை எடுத்துச் சாப்பிட வேண்டும். சிரத்தையாகச் செய்தால் கண் நோய் குணமாவதுடன், சரும வியாதிகளும் குணமாகின்றனவாம்.

- ராஜிராதா, பெங்களூர்

தேங்காய்ப்பால் எடுத்தபிறகு, மிச்சமாகும் சக்கையைத் தூக்கி எறியாமல் அதில் ஃபுட் கலர்களைச் சேர்த்துக் காய வைக்கவும். கலர் தேங்காய்ப் பூ ரெடி! இதைப் பண்டிகைக் கோலத்தில் பயன்படுத்த, சூப்பராய் இருக்கும்.

- ஐஸ்வர்யா, தஞ்சாவூர்



# ஆகஸ்ட் மாதம் எப்படி?

| | | | |
|---|---|---|---|
| | | செ | சுக் |
| | 1.8.2009 அன்று ராசி கிரகநிலை | | சூ கே |
| | | | பு சனி |
| கு(வ்) ரா | | | |
| | சந் | | |

**கிரக நிலை**

## ராசி பலன்களும், எளிய பரிகாரங்களும்



கணித்து வழங்குபவர் :
டாக்டர் முருகடிமை துரைராஜ்



# மேஷம்

(அசுவினி, பரணி, கார்த்திகை 1ம் பாதம்)

மேஷ ராசி நேயர்களே! உமது ராசிநாதன் உமது ராசிக்கு 2ல் குரு பகவானின் பார்வை பெற்று குருமங்கள யோகம் தருகிறார். சரளமான பணப்புழக்கம் உண்டாகும். திருமணம் கைகூடும். புத்திர பாக்யம் இல்லாதவருக்குப் புத்திர பாக்யம் கிட்டும். தாய், தந்தை உடல் நலனில் கூடுதல் கவனம் தேவை. சகிப்புத்தன்மையே சந்தோஷத்தின் திறவு கோல் என்பதை மறக்க வேண்டாம். மாணவர்கள் படிப்பில் கூடுதல் கவனம் செலுத்தவும். வியாபாரிகளுக்கு நல்ல லாபம் கிட்டும். பங்குவர்த்தகம் தவிர்க்கவும். உத்யோகஸ்தர்கள் உயர் அதிகாரிகளிடம் சற்று பக்குவமாக நடந்து கொள்ளவும். விவசாயி, கலைஞர்களுக்கு அனுகூலம் கிட்டும்.

26.8.2009 இரவு மணி 9.15 முதல் 29.8.2009 காலை மணி 8.07 வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள் 3, 6, 9. அதிர்ஷ்ட நிறம் சிவப்பு, மஞ்சள்.

**பரிகாரம்** : பிரதி செவ்வாய் கருமாரியம்மனுக்கு, குங்கும அர்ச்சனை செய்க. ஸ்ரீதட்சிணாமூர்த்திக்கு நெய்தீபம் ஏற்றவும். பிரதோஷ காலத்தில் சிவாலய தரிசனம் செய்க. செவ்வாய் ராகு காலத்தில் விஷ்ணு துர்க்கைக்குக் கனி மாலை சாத்தி வழிபடவும்.

# ரிஷபம்

(கார்த்திகை 2, 3, 4-ம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 பாதங்கள்)

ரிஷப ராசி நேயர்களே! பணப்புழக்கம் சரளமாக இருந்தாலும் வரவுக்கு மீறிய செலவு காரணமாக, கடன் உண்டாகும். கண் சம்பந்தமான மருத்துவச் செலவுகள் வரும். வெளிநாடு செல்ல வாய்ப்பு கிட்டும். வாக்கினால் ஜீவனம் புரிவோர் மேன்மை அடைவர். அரசு வழி அல்லல் தீரும். வியாபாரிகளுக்கு பணியாட்களின் பூரண ஒத்துழைப்பு கிட்டும். உத்யோகஸ்தர்களுக்குப் பதவி உயர்வு காரணமாக பணிச் சுமையும் இடமாறுதலும் கிட்டும்.

29.8.2009 காலை மணி 8.07 முதல் 31.8.2009 இரவு மணி 9 வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள் 5, 6, 9. அதிர்ஷ்ட நிறம் ரோஸ்.

**பரிகாரம்** : பிரதி வெள்ளிக் கிழமை ராகு காலத்தில் வீட்டிலேயே பூஜை அறையில் ஒரு தட்டில் பச்சரிசி பரப்பி, அதன்மீது 'ஓம்' என எழுதி அதன்மீது மஞ்சளினால் நிரப்பி மஹாலட்சுமியே எழுந்தருள்வாய் என்றோ அல்லது மகாலக்ஷ்மி ஆவாஹயாமி என்றோ சொல்லி பின்பு குத்துவிளக்கு ஏற்றி தட்டில் வைத்து பூஜை செய்க. மஹாலக்ஷ்மி அஷ்டோத்திரம் சொல்லவும்.





# மிதுனம்

**(மிருக சீரிஷம் 3, 4-ம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3-ம் பாதங்கள்)**

மிதுன ராசி நேயர்களே! உமது ராசிநாதன் புதன் உமது ராசிக்கு 3ல் சனி பகவானுடன் சேர்க்கை. பெரும்பாலான கிரக நிலைகள் சாதகமாக இல்லை. எனினும் 2ல் உள்ள சூரியன் கேதுவுக்கு குரு பார்வை இருப்பதால், தீமைகள் குறையும் நன்மைகள் பெருகும். கடன் தீரும். யாருக்கும் ஜாமீன் கையெழுத்து போடவேண்டாம். குடும்பத்தில் வீண் வாக்குவாதம் தவிர்க்கவும். மாணவர் படிப்பில் மந்த கதி நிலவும். கவனம் தேவை. வியாபாரிகள் முதலீடு செய்வதில் பதற்றம் காட்ட வேண்டாம். உத்யோகஸ்தர்கள் எச்சரிக்கையுடன் செயல்படுவது நன்று. கலைஞர்களுக்கு விருது கிடைக்கும்.

4.8.2009 பகல் மணி 2.25 முதல் 7.8.2009 அதிகாலை மணி 3.05 வரை சந்திராஷ்டமம் கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள், 5, 6 அதிர்ஷ்ட நிறம் பச்சை.

**பரிகாரம் :** பிரதி புதன் கிழமை. லக்ஷ்மி ஹயக்ரீவரையும், பிரதி வெள்ளிக்கிழமை யோக நரசிம்மரையும் வழிபடவும். விஷ்ணு சகஸ்ரநாமம் பாராயணம். விஷ்ணு காயத்ரி மந்திர ஜெபம் செய்ய நன்று.

# கடகம்

**(புனர்பூசம் 4ம் பாதம், பூசம், ஆயில்யம்)**

கடக ராசி நேயர்களே! உமது ராசிநாதன் சந்திரன் மாத ஆரம்பத்தில் உமது ராசிக்கு 5ல் நீச்சம் அடைகிறார். எந்தப் பணியில் ஈடுபட்டாலும் தடைகள் இருக்கும். பிரயாணம் மூலம் அதிக செலவுகள் வரும். வீடு மாற்றம், வண்டி வாகன மாற்றம் உண்டாகும். அரசு வழி அனுகூலம் கிட்டும். உடல் நலனில் கவனம் தேவை. தெய்விகப் பணிகளுக்கு இயன்ற அளவு செய்யுங்கள். இதனால் பெரும் நஷ்டம் தவிர்க்கப்படும். பெண்கள் விரும்பிய ஆடை அணிமணி வாங்கிடுவர். மாணவர்கள் கல்விப் பயணம் தொடரும் படிப்பில் கூடுதல் கவனம் தேவை. பூர்விகச் சொத்தில் வில்லங்கம் தீரும். உத்யோகஸ்தர்களுக்கு பதவி உயர்வு காரணமாக இடமாறுதல் கிட்டும். கலைஞர்களுக்கு வெளிப் புறப் பணிகள் அதிகம் ஆகும்.

7.8.2009 அதிகாலை மணி 3.05 முதல் 9.8.2009 பகல் மணி 2.17 வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள் 3, 6, 9 அதிர்ஷ்ட நிறம் இளம் பச்சை மற்றும் வெண்மை.

**பரிகாரம் :** பிரதி திங்கள் கிழமை சிவாலயத்தில் உள்ள அம்பாளுக்கு நெய் தீபம் ஏற்றவும். அபராமி அந்தாதி படிக்கவும்.





# சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் 1ம் பாதம்)

சிம்ம ராசி நேயர்களே! உமது ராசிநாதன் சூரியன் உமது ராசிக்கு 12ல் கேதுவுடன் இணைந்து அமர்வு. புனித ஸ்தலங்களுக்கு செல்வீர்கள். தூரதேசத்திலிருந்து நற்செய்தி வரும். செய்தொழிலில் லாபம் மிகும். கணவன் மனைவி இடையில் நிலவிய கருத்து வேறுபாடுகள் மறைந்து சந்தோஷம் மிளிரும். மாணவர்கள் கூடுதல் சிரத்தையுடன் படித்தல் நலம். வியாபாரப் பிரிவினர் ஏற்றம் அடைவர். உத்யோகஸ்தர்களுக்கு வேலைப் பளு கூடும். கலைஞர்களுக்கு அதிகமான முன்னேற்றமும் பெயரும் புகழும் கிட்டும்.

9.8.2009 பகல் மணி 2.17 முதல் 11.8.2009 இரவு மணி 11.14 வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள் 1, 5, 9 அதிர்ஷ்ட நிறம் சிவப்பு.

**பரிகாரம் :** தினசரி சூரிய நமஸ்காரம் செய்க. காயத்ரி மந்திரம் உபதேசம் ஆனவர்கள் தவறாமல் சந்தியா வந்தனம் செய்யவும். பிரதோஷ காலத்தில் சிவாலயதரிசனம் செய்க. சிவபுராணம் அல்லது லிங்காஷ்டகம் பாராயணம் செய்யலாம்.

# கன்னி

(உத்திரம் 2, 3, 4-ம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2-ம் பாதங்கள்)

கன்னி ராசி நேயர்களே! உமது ராசிநாதன் புதன் உமது ராசிக்கு 12ல் சனி பகவானுடன் சங்கமம். பெரும்பாலான கிரகங்கள் சாதகமாகவே உள்ளன. உமது செயலில் புத்துணர்ச்சி பிறக்கும். செய் தொழிலில் மேன்மை கிட்டும். கணவன் மனைவி இடையே சிறு சிறு கருத்து வேறுபாடுகள் இருக்கும். அரசுக்குச் செலுத்த வேண்டிய வரிபாக்கிகளைச் செலுத்திவிடுவது நலம். மாணவர்களுக்கு நினைவாற்றல் குறைய இடமுண்டு. சிரமம் பாராமல் அதிகாலையில் எழுந்து படிப்பது நலம். வியாபாரிகளுக்கு லாபம் மிகுந்து காணும். உத்யோகஸ்தர்களுக்கு அனுகூலம் கிட்டும். கலைஞர்களுக்கு எதிர்பாராத வாய்ப்பு கிட்டும்.

11.8.2009 இரவு மணி 11.14 முதல் 14.8.2009 காலை மணி 5.26 வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள் 6, 3, 9. அதிர்ஷ்ட நிறம் பச்சை.

**பரிகாரம் :** பிரதி புதன் கிழமையில் விஷ்ணு துர்க்கையை வழிபடவும். அஷ்டமி (அ) சதுர்த்தசி தினத்தில் ஸ்ரீமஹா பிரத்யங்கரா தேவியைப் பேரீச்சம் பழம் + தேன் நைவேத்யம் வைத்து குங்கும அர்ச்சனை செய்யவும்.





# துலாம்

**(சித்திரை 3, 4-ம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 பாதங்கள்)**

**து**லாம் ராசி நேயர்களே! உமது ராசிநாதன் சுக்ரன் உமது ராசிக்கு 9ல் அதாவது மஹாலக்ஷ்மி ஸ்தானம் பெற்றுள்ளார். பூர்விகச் சொத்தில் வில்லங்கம் தீரும். திருப்பணி செய்யும் யோகம் கிட்டும். அரசு வழியில் நிலவிய அல்லல் அகலும். எதிலும் சற்று நிதானமாக முன் யோசனையுடன் செய்வது நன்று. வீடு வாகனம் என வாங்க அல்லது புதுமையாக மாற்றியமைக்க இடமுண்டு. மாணவர்கள் படிப்பில் கடினப் பிரயாசை தேவை. வியாபாரிகளுக்கு முதலீடு பெருகும். ஏற்றுமதி இறக்குமதி தொழில் சிறப்புறும். உத்யோகஸ்தர்கள் அதிகாரிகளிடம் கவனமாக நடந்து கொள்ளவும். கலைஞர்கள் பாராட்டு பெற இடமுண்டு.

*14.8.2009* காலை மணி *5.26* முதல் *16.8.2009* காலை மணி *8.45* வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள் 5, 6, 9. அதிர்ஷ்ட நிறம் ரோஸ்.

**பரிகாரம் :** பிரதி வெள்ளிக்கிழமை ராகுகாலத்தில் துர்க்கை அம்மனை வழிபடவும். மாலை வேளையில் விளக்குப் பூஜை செய்து, மஹாலக்ஷ்மி அஷ்டோத்திரம் சொல்லவும்.

# விருச்சிகம்

**(விசாகம் 4ம் பாதம், அனுஷம், கேட்டை)**

**வி**ருச்சிக ராசி நேயர்களே! உமது ராசிநாதன் செவ்வாய் உமது ராசிக்கு 7ல் குரு பகவானின் பார்வையுடன் அமர்வு. திருமணம் கைகூடும். தம்பதிகள் இணைந்து ஒற்றுமையோடு வாழ்வர். கண் சம்பந்தமான உபாதைக்கு இடமுண்டு. மனைவியின் சேமிப்பு உதவும். தூரதேசத்திலிருந்து நற்செய்திகள் வரும். பணம் கையாளும் பணியினர் மிகவும் எச்சரிக்கையுடன் செயல்படவும். யாருக்கும் ஜாமீன் கையெழுத்து போடவேண்டாம். புதிய முயற்சிகளில் அபார வெற்றி கிட்டும். மாணவர்கள் உற்சாகமாகப் படித்து வெற்றிப் படிகளில் முன்னேறுவர். வியாபாரிகள் அரசு வழி அனுகூலம் பெறுவர். உத்யோகஸ்தர்கள் புதிய பொறுப்புக்களைப் பெறுவர். கலைஞர்களுக்குப் பிரகாசமான வாய்ப்புகள் கிட்டும். *16.8.2009* காலை மணி *8.45* முதல் *17.8.2009* இரவு மணி *12.47* வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள் 6, 9. அதிர்ஷ்ட நிறம் சிவப்பு.

**பரிகாரம் :** பிரதி செவ்வாய்க் கிழமை ராகு காலத்தில், திருவேற்காடு கருமாரியம்மனைக் குங்கும அர்ச்சனை செய்து வழிபடவும். நெய்தீபம் ஏற்றுவதால் லக்ஷ்மி கடாக்ஷம் பெருகும்.





# தனுசு

(மூலம்,
பூராடம்,
உத்திராடம் 1ம் பாதம்)

**த**னுசு ராசி நேயர்களே! உமது ராசிநாதன் குருபகவான் உமது ராசிக்கு 2ல் ராகுவுடன் இணைவு. பணம் சார்ந்த விஷயங்களில் எச்சரிக்கை தேவை. சூரியனை குரு பார்வை செய்வதால் எத்தகைய இக்கட்டிலும் மீண்டு விடுவீர்கள். புதிய முயற்சிகளில் அனுபவம் மிக்கவர்களின் ஆலோசனை கேட்டு அதன்படி நடப்பது நன்று. தம்பதிகள் ஒற்றுமையாக இருப்பர். ஜீரணசம்பந்தமான பிரச்னைகள் உண்டாகும். தொழில் ரீதியில் வெளிநாடு செல்ல வாய்ப்பு வரும். மாணவர்கள் படிப்பில் கவனம் தேவை. வியாபாரிகள் தொட்டது துலங்கும். உத்யோகஸ்தர்களுக்கு உயர் அதிகாரிகளின் கெடுபிடிகள் இருக்கும். கலைஞர்களுக்கு யோகம் கிட்டும்.

17.8.2009 இரவுமணி 12.47 முதல் 20.8.2009 காலை மணி 9.51 வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம். அதிர்ஷ்ட எண்கள் 3, 6, 8, 9 அதிர்ஷ்ட நிறம் பொன் வண்ணம்.

**பரிகாரம்** : பிரதி வியாழன், தக்ஷிணா மூர்த்திக்கு நெய்தீபம் ஏற்றி, மஞ்சள் நிற மலர்சாத்தி அர்ச்சனை செய்க.

# மகரம்

(உத்திராடம் 2, 3, 4-ம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2-ம் பாதங்கள்)

**ம**கர ராசி நேயர்களே! உமது ராசி நாதன் சனி பகவான் உமது ராசிக்கு 8ல் புதனுடன் அமர்வு. அஷ்டமத்தில் சனி என்றாலும் உமது ராசி அதிபதி உமக்குக் கெடுதல் செய்யமாட்டார். தேவையற்ற பிரயாணங்களைத் தவிர்த்து விடுங்கள். வீடு, மனை, வண்டி என்று சேர்க்கை உண்டு. குரு பகவானின் பார்வை செவ்வாய் பெறுவதால் குரு மங்கள யோகம் உண்டாகிறது. குலதெய்வ வழிபாடு செய்வீர்கள். புத்திர பாக்யம் கிட்டும். கணவன் மனைவி இடையில் கருத்தொற்றுமை தேவை. மாணவர்கள் உயர்கல்வி பெற வெளிநாடு செல்வர். வியாபாரிகள் லாபம் பெறுவர். உத்யோகஸ்தர்களுக்கு வெற்றி கிட்டும். கலைஞர்களுக்கு வர வேண்டிய பாக்கிகள் கிட்டும்.

20.8.2009 காலை 9.51 முதல் 22.8.2009 காலை மணி 10.40 வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள் 6, 9 அதிர்ஷ்ட நிறம் நீலம்.

**பரிகாரம்** : தினசரி வெங்கடேச சுப்ரபாதம் படிக்கவும். சனிக்கிழமைகளில் சனி பகவானுக்கு நல்லெண்ணெயில் தீபம் ஏற்றவும்.





# கும்பம்

**(அவிட்டம் 3, 4-ம் பாதங்கள் சதயம், பூரட்டாதி 1, 2, 3-ம் பாதங்கள்)**

கும்ப ராசி நேயர்களே! உமது ராசி நாதன் சனி பகவான் உமது ராசிக்கு 7ல் புதனுடன் இணைவு. அரசு வழி அல்லல் அகலும். தந்தையுடன் கருத்து வேறுபாடு அகலும். மகன் அல்லது மகள் வழியில் சுபச் செலவுகள் வரும். தொழில் புரிபவர்கள் பிரயாணம் மூலம் ஏற்றம் பெறுவர். பணம் சார்ந்த பொறுப்பில் உள்ளவர்கள் மிகுந்த எச்சரிக்கையுடன் பணிபுரிதல் அவசியம். தூர தேசத்திலிருந்து நற்செய்தி கிட்டும். வியாபாரிகள் பழைய இருப்பினைத் தள்ளிவிடலாம். கடன் தீரும். விவசாயிகளுக்கு அரசு வழி அனுகூலம் கிட்டும். உத்யோகஸ்தர்களுக்கு எதிர்பார்த்த இடமாறுதல் கிட்டும். கலைஞர்கள் பரிசும் பாராட்டும் பெறுவர்.

22.8.2009 காலை மணி 10.40 முதல் 24.8.2009 பகல் மணி 2.03 வரை சந்திராஷ்டமம். கவனம் தேவை. அதிர்ஷ்ட எண்கள் 4, 6, 9 அதிர்ஷ்ட நிறம் புகை வண்ணம்.

**பரிகாரம் :** பிரதி ஞாயிற்றுக் கிழமை ராகு காலத்தில் பைரவருக்கு எட்டு மிளகை துணியில் முடிந்து அதனைத் திரியாக்கி நல்லெண்ணெயில் தீபம் ஏற்றவும்.

# மீனம்

**(பூரட்டாதி 4ம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி)**

மீனராசி நேயர்களே! உமது ராசிநாதன் குரு பகவான் வக்ரகதியில் உமது ராசிக்கு 11ல் ராகுவுடன் இணைவு. சரளமான பணப்புழக்கம் நிலவும். கடன் தீரும். சேமிப்பு தக்க தருணத்தில் கைகொடுக்கும். வீட்டின் வசதி வாய்ப்புகள் அதிகரிக்கும். சகோதர வழியில் எதிர்பாராத முன்னேற்றம் கிட்டும். தொழில் வழியில் முன்னேற்றம் இருப்பினும் ஏதாவது மனக்குறையுடனே அதனை நடத்த வேண்டியிருக்கும். வேறு மொழி பேசுவோரால் அனுகூலம் கிட்டும். வியாபாரிகள் முதலீட்டை அதிகரிப்பர். எனினும் வரவேண்டிய பாக்கிகள் வசூலாவதில் சுணக்கமான நிலைமையே நிலவும். உத்யோகஸ்தர்களுக்கு உயர் அதிகாரிகளிடம் நிலவி மோதல் போக்கு தவிர்க்கப்படும்.

24.8.2009 பகல் மணி 2.03 முதல் 26.8.2009 இரவு மணி 9.15 வரை சந்திராஷ்டமம் அதிர்ஷ்ட எண்கள் 4, 6, 9. அதிர்ஷ்ட நிறம் பொன் நிறம்.

**பரிகாரம் :** பிரதி செவ்வாய் மற்றும் வியாழக் கிழமை சொர்ண ஆகர்ஷண பைரவரை வழிபடவும்.



'ராசிபலன்' ஜோதிடப் பகுதி தற்காலிகமாக நிறைவுறுகிறது. மீண்டும் சிறு இடைவெளிக்குப் பிறகு தொடரும். - ஆர்

பூஜைகளில்...

# எது செய்யலாம்? எது செய்யக் கூடாது?





பிரதிமை, யந்திரம், படம் இவற்றை தினமும் ஸ்நானம் செய்விக்க வேண்டியதில்லை.

பருவ தினங்களிலும், தூசி படிந்த போதும் மட்டும் ஸ்நானம் செய்விக்க வேண்டும். விரத பூஜை போது அந்தந்த பிரதமைகளுக்கு அபிஷேகம் செய்யலாம்.

விஷ்ணுவுக்கு அக்ஷதையாலும், ஊமத்தம்பூ, எருக்கம்பூ இவற்றாலும் விநாயகருக்கு துளசியாலும் அர்ச்சனை செய்யலாகாது.

மேலும், துர்க்கையை அருகம்புல்லாலும் சூரியனை வில்வத்தாலும் அர்ச்சிக்கலாகாது. லக்ஷ்மியைத் தும்பைப் பூவினாலும் சரஸ்வதியை பவள மல்லியினாலும் அர்ச்சிக்கக் கூடாது.

பைரவரை மல்லிகைப் புஷ்பத்தினாலும் பரமசிவனை தாழம்பூவாலும் அர்ச்சனை செய்யலாகாது.

பூக்களின் மொட்டுக்கள், பூச்சி விழுந்த, காய்ந்த பூக்கள், கனகாம்பரம், டிசம்பர் போன்றவற்றில் பூஜை செய்யக்கூடாது.

துளசி இல்லாமல் எந்தப் பூஜையும் செய்யலாகாது. துளசியை செவ்வாய், வெள்ளி, மாதப்பிறப்பு, ஏகாதசி, துவாதசி தினங்களில் பறிக்கக் கூடாது. துளசிச் செடியை உலுக்கி உதிர்வதை எடுத்துக் கொள்ள வேண்டும்.

- அனுராதா ரவீந்திரன், மேலச்சிந்தாமணி



## விளக்குத் துதி!

"தீபம் ஜோதி பரப்பிரம்மகம்
தீபம் சர்வ தமோ பகம்
தீபனே சாத்யதே சர்வம்
சந்தியா தீப நமோஸ்துதே"

மாலையில் தீபம் ஏற்றும்போது இந்தத் துதியை மூன்று முறைகள் சொல்ல வேண்டும். நாள் கிழமைகளில் கூறும் பொழுது பல மடங்கு நன்மைகள் உண்டாகும்.

- திலகவதி துரைராஜ்,
கோவை

மாட்டுத் தொழுவத்தில் பித்ரு பூஜை செய்பவர்களுக்கு முன்னோர்களுடைய பரிபூரண ஆசியும் ஆதரவும் நிச்சயம் உண்டு

# மஹாளய அமாவாசை அன்று (18-9-2009)

## மாட்டுத் தொழுவத்தில் நடைபெறும் பித்ரு தர்ப்பண பூஜையில் அனைவரும் கலந்து கொண்டு பித்ரு தேவதைகளின் ஆசிர்வாதத்தை பெற்று அனைத்து தோஷங்களில் இருந்தும் நிவர்த்தி பெற அன்புடன் அழைக்கிறோம்

நமது குடும்பத்தில் மறைந்த முன்னோர்களுக்கு (பித்ருக்கள்) சரியாக பூஜை செய்து திருப்திபடுத்தாத காரணத்தினால்தான் நமக்கு துன்பங்கள் அடுக்கடுக்காக வருகின்றன. இது நீங்க மாட்டுத் தொழுவத்தில் பித்ரு தர்ப்பண பூஜை செய்வது மிகவும் நல்லது. மாட்டுத் தொழுவத்தில் பசுவின் சாணம், கோமியத்தில் (கன்றுபோட்ட பசுவின் கோமியம்) சுத்தம் செய்து பித்ரு பூஜை செய்வதால், தேவர்கள் வந்து சிறப்பாக நடத்தி வைப்பார்கள். அவர்களது நல்லாசியால் பித்ருக்கள் முக்தி அடைகின்றனர். அதனால் பித்ருக்கள் மனமகிழ்ந்து அவர்களது குடும்பத்தினர் அனைத்து தோஷங்களில் இருந்தும் விடுபட்டு ஆரோக்கியமாக நீண்ட ஆயுளுடன் வாழ ஆசிர்வதிக்கின்றனர். அனைவரும் பித்ரு பூஜை செய்ய வேண்டும் என்ற இறை சிந்தனையோடு மஹாளய அமாவாசை அன்று திலஹோமம் செய்து, வைதீக முறைப்படி மாட்டுத் தொழு வத்தில் முன்னோர் வழிபாடு செய்யப்படுகிறது. இதில் அனைவரும் கலந்து கொண்டு பசுமடத்தில் உள்ள வயதான அனைத்து பசுக்களுக்கும் அகத்தி கீரை, அருகம் புல், கருப்பு எள் உருண்டை, வெல்லம், வெண் பொங்கல் போன்ற உணவை அளித்து, வஸ்த்திர தானத்துடன் தர்ப்பணம் செய்து, பித்ரு தோஷங்களில் இருந்து நிவர்த்தி பெற அன்புடன் அழைக்கிறோம்.

பித்ருக்கள் நினைவாக வயது முதிர்ந்த, பால் வற்றிய, ஊனமுற்ற, நோயுற்ற பசுக்களை பசுமடத்தில் பாதுகாத்து பராமரிக்க தங்களால் முடிந்த கீழ்கண்ட நன்கொடையை அனுப்பும் அன்பர்கள் சார்பாக மஹாளய அமாவாசை அன்று தில ஹோமத்துடன் முன்னோர் வழிபாடு முழுமையாக செய்து பிரசாதத்துடன் கீழ்கண்ட பூஜிக்கப்பட்ட பொருட்கள் மற்றும் கோமாதா வண்ணப்படம் அனுப்பி வைக்கப்படும். பசுவை பாதுகாக்க ரூபாய் அனுப்பும்போது யாருக்கு திதி செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர் திதி மற்றும் கோத்திரம் போன்ற விவரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

- ரூ. 500 - அனுப்பும் அன்பர்களுக்கு வெள்ளியிலான பெருமாள் டாலர் அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 1000 - அனுப்பும் அன்பர்களுக்கு வெள்ளியிலான ஸ்ரீ ராமர் பாதம் 2 அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 2000 - அனுப்பும் அன்பர்களுக்கு பசுவும் கன்றும் சேர்ந்த (கோமாதா) வெள்ளியிலான விக்ரகம் அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 3000 - அனுப்பும் அன்பர்களுக்கு வெள்ளியிலான துளசி மாடம் அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 4000 - அனுப்பும் அன்பர்களுக்கு வெள்ளியிலான தவழும் கண்ணன் அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 5400 - அனுப்பும் அன்பர்களுக்கு பெரிய வலம்புரி சங்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 9000 - கோதானம் செய்யும் அன்பர்களுக்கு வெள்ளியிலான ஐஸ்வர்ய பெருமாள் விளக்கும், ஸ்ரீ கிருஷ்ணர் படம் போட்ட வாட்ச் (பெண்கள் அணிவது) ஒன்றும் அனுப்பி வைக்கப்படும்.

முன்னோர்கள் நினைவாக மஹாளய அமாவாசை அன்று மகிஷ (எருமை) தானம் செய்ய ரூ.10,500, காராம் பசு தானம் செய்ய ரூ.10,000 அனுப்பி, பித்ரு தோஷம், புத்திர தோஷம், செவ்வாய், நாக தோஷம், ஆபிசார தோஷம், நவக்கிரஹ தோஷம், திருமணத் தடை, வியாபாரத் தடை மற்றும் அனைத்து தோஷங்களும் விலகி ஐஸ்வர்யம் தங்களுக்கும், தங்களுடைய சந்ததியினருக்கும் கிடைக்க கலந்து கொள்ள வேண்டுகிறோம்.

பணம் அனுப்பும் அன்பர்களுக்கு ரசீதும், மேற்கண்ட பிரசாதங்களும் மஹாளயபக்ஷம் முடிந்த பிறகு அனுப்பி வைக்கப்படும்

சைவ முறைப்படி சுத்தமான நாட்டு பசுஞ் சாணத்தில் தயாரிக்கப்பட்ட விபூதி பிரசாதங்களுடன் அனுப்பி வைக்கப்படும்

தங்கள் நன்கொடையை Cheque / D.D/ M.O ஆக Shri Ghosala Seva Trust, Chennai என்ற பெயருக்கு அனுப்ப வேண்டுகிறோம். நன்கொடைகளுக்கு 80ஜி பிரிவின்படி வரி விலக்கு உண்டு.

# பசுமடம்

(Recognised by Animal Welfare Board of India)

வயதான பசுக்களை பராமரிக்கும் இல்லம், ஆதரவற்ற பசுக்களை பாதுகாக்கும் இல்லம், ஊனமுற்ற, நோயுற்ற பசுக்களை பேணும் இல்லம்

பெருமாளகரம், திருவேற்காடு(PO), சென்னை -77. Ph: 044 - 3299 9888

Donate liberally to receive Gomatas Blessings

'போகம்' என்னும் சொல்லுக்கு உடல் சார்ந்த, ஆன்மா சார்ந்த பேரின்பம் என்று அர்த்தம். சித்தர்களுக்கு, மூலாதார சக்தி மையத்திலிருந்து குண்டலினி சக்தி யானது வெளிப்பட்டு, சகஸ்ரதளத்தை அடையும்போது அனுபவிக்கப் படுகின்ற பரவச நிலை - போகம் என்று சொல்லப் படுகின்றது.

இமயமலையைச் சார்ந்த பகுதியில் ஐந்துமுக்கியமான சிவாலயங்கள் உள் ளன. அமர்நாத் (சிவன் - உமையம்மைக்கு கிரியை யோகத்தைப் போதித்த இடம்) கேதார்நாத், பத்ரிநாத் (இந்தியா) கைலாஷ் நாத் (திபெத், சீனா) பசுபதிநாத் (நேபாளம்) ஆகியவை. இந்த ஐந்து சிவா லயங்களிலும் போகர் யோகநிஷ்டையில் இருந் துள்ளார்.

போகர், திருமூலர் வரிசையில் வைத்து வணங்கக்கூடிய தலைமைச் சித்தர். போகரின் வரலாற்றை மூன்று நிலைகளில் பார்க்கலாம். முதலாவதாக தமிழ்நாட்டில் அவர் வாழ்ந்த நிலை. இரண்டாவதாக சீனாவுக்குச் சென்று யோக மார்க்கத்தைப் போதித்த நிலை. மூன்றாவ தாக தமிழ்நாட்டுக்குத் திரும்பி வந்து பழநியில் சமாதி நிலை எய்தியமை.

புனித நகரமான காசியில், காளங்கி நாதர் என்றொரு சித்தர் வாழ்ந்து வந்தார். இவருடைய சீடர்களுள் முதலாவதாக விளங்கியவரே போகர். காளங்கிநாதர், போகருக்கு அறிவியல், காயகல்ப முறை கள், இரசவாதம் ஆகியவற்றைப் போதித்து விட்டு தனிமையில் சமாதி நிலைக்குச் சென்றுவிட்டார்.

# சீனத்துச் சித்தர்

## சிலிர்க்க வைக்கும் சித்தர் வரலாறு 7

இறைவனை அடைய அன்பும், பக்தியும், யோக மார்க்கமும் சிறந்த உபாயங்களாகச் சித்தர்களால் கருதப்பட்டன. ஆங்காங்கே சித்தர்கள் யோக சமாதியில் நிலைபெற்றனர். பிற்காலத்தில், அந்த இடங்கள் சக்தி மிகுந்த புகழ்பெற்ற கோயில்களாயின. சூக்கும வடிவில் இந்தக் கலியுகத்திலும் சித்தர்கள், மக்களை வழி நடத்திக் கொண்டு நிலைபெற்று இருக்கிறார்கள்!



சமிக்ஞையின்றி, மனத்தினால் தம் கருத்தைப் பிறருக்கு அறிவிக்கும் (Telepathy) முறையில் போகரைச் சீனாவுக்குச் சென்று, யோக மார்க்க போதனைகளைப் பரப்புமாறு காளங்கிநாதர் பணித்தாராம். குருவின் ஆணையை சிரமேற்கொண்ட போகர், சீனாவுக்குப் பயணப்பட்டார்.

சீனாவில் தம்முடைய போதிக்கும் பணியை எளிதாக மேற்கொள்ள, இறந்து போன சீனர் ஒருவரது உடலில் பரகாயப்பிரவேசம் செய்தார். தன்னுடைய பெயரை போ - யாங் என்று வைத்துக் கொண்டார். 'யாங்' என்பது சக்தி என்ற அர்த்தத்தைக் குறிக்கும் சொல்லாகும். பின்னர் சீனாவில் நீண்ட நெடுங்காலம் சீனராகவே வாழ்ந்தார்.

# -போகர்!

## பேராசிரியர்.இல.கோமதி

அங்கு அவருக்கு பல சீடர்கள் இருந்தனர். குண்டலினி கிரியையும், யோக மார்க்கங்களையும் சீடர்களுக்குப் போதித்தார். தம்முடைய குருநாதர் தமக்கு இட்ட பணியை முடித்துக் கொண்டு தமது சீடர் 'யு' என்பவருடன் இந்தியாவுக்குத் திரும்பினார். இந்த 'யு' என்பவரே புலிப்பாணினி சித்தர் என்ற இந்தியப் பெயர் கொண்டவர்.



தமது சீடர்களுள் சிறந்த மூன்று பேரையும், தம்முடைய நாயையும் அழைத்துக் கொண்டு இந்தியாவுக்குத் திரும்பினார். வரும் வழியில், இமய மலையின் கொடிய குளிரும் நெடிய பயணமும் அவர்களை வருத்தின. போகர், தான் வைத்திருந்த காயகல்ப குளிகையை நாய்க்குக் கொடுத்தார். அதை விழுங்கியவுடன் நாய் சுருண்டு விழுந்தது. பின்னர் தன் சீடர்களுள் ஒருவனுக்குக் கொடுத்தார். அவனும் மயங்கி விழுந்தான். பிறகு, மற்ற இரண்டு சீடர்களுக்கும் கொடுத்தார். அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். அவர்களுக்கு பயம் ஏற்பட்டது. எனவே குளிகையை விழுங்காமல் மறைத்து விட்டனர். மீதி இருந்த குளிகையை போகர் விழுங்கினார். உடனே பிரக்ஞையில்லாமல் கீழே விழுந்தார்.

சீடர்கள் இருவரும் தம் குருநாதர் இறந்துவிட்டார் என்று நினைத்து மனம் வருந்தினார்கள். பின்னர் மனதைத் தேற்றிக் கொண்டு அவரை அடக்கம் செய்ய குழி

தோண்டினார்கள். அந்த வேலையை முடித்து விட்டுத் திரும்பிப் பார்த்தால், உடல்கள் அங்கே இல்லை. போகரும், அவரது உண்மையுள்ள சீடனும், நாயும் வெகுதூரத்தில் போய்க் கொண்டிருந்தனர்.

காய கல்பக் குளிகையின் வேகம் தாங்காது மூர்ச்சையாகி விழுந்தனர். பின்னர் அக்குளிகை உடலில் வேலை செய்ய ஆரம்பித்து தெம்பையும், உடல் உறுதியையும் ஆற்றலையும் அளித்தது. அவர்கள் எழுந்து சென்றனர். அவர்களது தேகம் வஜ்ரம் போல் கல்ப தேகமாகியது. கைக்கு எட்டியது, வாய்க்கு எட்டாமல் போன மாதிரி இந்த அற்புதமான வாய்ப்பை இழந்துவிட்ட சீடர்கள் வருந்தினர். இவ்வாறு சீனாவிலிருந்து மீண்டும் தமிழ்நாடு வந்து சேர்ந்தார் போகர்.

தமிழ்நாடு வந்து சேர்ந்ததும் கலியுகம் தொடங்குவதற்கு முன், சித்தர்கள் கூட்டமொன்றை நிறுவினார் போகர். கொங்கணவர், கருவூரார், நந்தீஸ்வரர், கமலமுனி, மச்சமுனி ஆகியோர் அவரது சீடர்களாயினர். போகர், அவர்களுக்கு காயகல்ப யோக முறைகளைக் கற்பித்தார். வரப்போவது கலியுகம்; இருண்டகாலம். எனவே மனித குலத்தை ஆன்மிகப் பாதையில் எப்படி முன்னேற்றுவது என்று எண்ணினார்.

அன்பும், இறைவன் மீது கொள்ளும் பக்தியும், இறைவனை அடைய யோக மார்க்கமும் சிறந்த உபாயங்களாகச் சித்தர்களால் கருதப்பட்டன. ஆங்காங்கே சித்தர்

இலங்கையில் உள்ள கதிர்காமம் என்னும் இடத்துக்கு போகர் சென்றார். அங்கு 1008 இதழ்கள் கொண்ட கமலச் சக்கரத்தை (எந்திரம்) நிர்மாணித்தார். அந்த எந்திரத்தின் மேல் ஸ்தாபிக்கப்பட்டது தான் கதிர்காம முருகன் ஆலயம்.

போகர், ஏழு லட்சத்துக்கு மேல் பாடல்களை எழுதியுள்ளதாகத் தெரிகிறது. பின்னர் அவை தொகுக்கப்பட்டு போகர் - சப்த காண்டம், போகர்

நீர் சுருங்கும் தன்மை கொண்ட கிரானைட் கருங்கல் போல பொருளோ அல்லது, உலோகக் கலவை கொண்டோ சிலை செய்யப்பட்டிருந்தால், தினமும் செய்யப்படும் அபிஷேக ஆராதனைகளுக்கு ஈடு கொடுக்க முடியாமல் விரிசல் ஏற்பட்டிருக்கும் அல்லது கரைந்துபோயிருக்கும். போகர், ஒன்பது பாஷாணங்களைக் கூட்டி அதன் கலவையைக் கொண்டு பழநியாண்டவரின் சிலையை ஸ்தாபித்தார்.



'பாஷாணம்' என்பது முறை தவறாமல் செய்யப்படும் ஒரு கூட்டுப் பொருள். அவ்வாறு செய்யப்பட்ட ஒன்பது கூட்டுப் பொருள்களின் கட்டு' என்பது பாறையை விட உறுதியாக இருக்கும். காற்று, நீர், வெப்பம், வேதிப் பொருட்கள், இவற்றால் எந்த வித விளைவும் பாஷாணக் கட்டுக்கு ஏற்படாது.

- ஏழாயிரம் என வழங்கப்பட்டது. இந்தத் தொகுப்பில் காயகல்ப யோக முறைகள், தீட்சைவிதி, கல்பசித்தி, காயசித்தி, யோகசித்தி, இரசவாத முறைகள், பாஷாணங்கள், உபரசங்கள், கற்ப மூலிகைகள், தம் வாழ்க்கையில் நடந்த சம்பவங்கள் இவை அனைத்தையும் போகர் சொல்லியிருக்கிறார். இந்நூல் மிக அரிய பொக்கிஷம்!



கள் யோக சமாதியில் நிலைபெற்றனர். பிற்காலத்தில், அந்த இடங்கள் சக்தி மிகுந்த புகழ்பெற்ற கோயில்களாயின. சூக்கும வடிவில் இந்தக் கலியுகத்திலும் சித்தர்கள், மக்களை வழி நடத்திக் கொண்டு நிலைபெற்று இருக்கிறார்கள்.

போகர், பின்னர் பழநி என்று தற்போது பெயர் பெற்றுள்ள தலத்துக்கு வந்தார். அங்கே உள்ள முருகன் சிலை போகரால் நிறுவப்பட்டது. பழநியில் முருகனுக்கு செய்யப்படும் அபிஷேகங்கள், பஞ்சாமிர்த அபிஷேகம் உள்பட அனைத்தும் போகர் வகுத்த நியமப்படியே நடத்தப்படுகின்றன. கலியுகம் முழுவதும் நிலைத்து நிற்கக்கூடிய தன்மை கொண்டது பழநி முருகன் சிலை.

**கா**யகல்ப குளிகையை உண்டதால் தம்முடைய சீன சரீரத்தை உருமாற்றி போகர், பன்னிரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்ததாகக் கருதப்படுகிறது. பழநியில், முருகன் சிலையை நிர்மாணித்துவிட்டு அதற்குரிய பூசை நியமங்களையும் வகுத்து அந்த முறைகளைத் தமது சீடரான புலிப்பாணி சித்தருக்குப் போதித்தார். பின்னர் புலிப் பாணி சித்தரிடம் அந்தப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, போகர் சதுரகிரி, சிவகிரி ஆகிய மலைப் பகுதிகளில் தவம் மேற்கொண்டார்.

இறுதியாக பழநிக்குத் திரும்பிய போகர் அங்கே சொருப சமாதியானர். பழநியில் தம்முடைய தூல சரீரத்தை விட்டு அகன்ற போதும் தொடர்ந்து சூக்கும நிலையில் இன்றும் நிலைபெற்று இயங்கி சமுதாயத்தை வழி நடத்தி வருகிறார் என்பது உண்மை. போகரை வணங்கி, தியானிப்பவர்கள் தம் உள்ளத்தில் அருள் கிளர்ச்சி, அகத்தூண்டுதல் ஏற்படுவதை அனுபவ பூர்வமாக உணர்கின்றார்கள்.

பழநியாண்டவர் சிலை தயாரிப்பில் என்னென்ன கூட்டுப் பொருள்கள் சேர்க்கப்பட்டன என்று விஞ்ஞானிகள் ஆராய்வதற்கு முயன்றனர். ஒரு சிறிய பகுதியை எடுத்து, சூடுபடுத்தும்போது வெப்பத்தால் அந்தக் கட்டு பற்றியெரிந்து உடனே மீண்டும் திடப் பொருளாக மாறியது. வேதியியல் இந்த மாற்றத்தை பதங்கமாதல் (sublimation) என்று குறிக்கிறது.

அறிவியல் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்து விட்டபோதும் பழநியாண்டவர் சிலை தயாரிப்பில் உபயோகப்படுத்தப்பட்டுள்ள நவ பாஷாணக் கூட்டு மட்டும் யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. போகருக்கு மட்டுமே தெரிந்த புதிர் அது.

*(சித்தர் நெறி தொடரும்)*

சுற்றுலா

ராமாயணக் கதை அனைவருக்கும் தெரிந்ததுதான்! அயோத்தியில் ராமனது அரண்மனையில் அஸ்வ மேத ராஜசூய யாகங்கள் நடந்தன. யாகத்துக்கு வந்த லவகுசர்கள், ராமனின் கதையைப் பாடலாகப் பாடிய தைக் கேட்ட ராமன், அவர்கள் தனது பிள்ளைகள் எனத்





தெரிந்துகொண்டார்.

''சீதையின் கற்புத் திறனை உலகுக்கு உணர்த்த மீண்டும் அவளைத் தீ புக வைப்பேன்'' என்றார் ராமன். எல்லோரும் வேண்டாம் என்று கூறினாலும் அவருடைய முடிவில் மாற்றமில்லை.

இதைக் கேட்ட சீதை, மிகவும் மனம்

---

திண்டுக்கல் மாவட்டத்துக்கு அருகில் தாடிக் கொம்பில் புகழ் பெற்ற ஸ்ரீசௌந்திர ராஜப் பெருமாள் கோயில் உள்ளது. அங்குள்ள சொர்ண பைரவருக்கு அஷ்டமி (தேய்பிறை) யன்று வெள்ளைப் பூசணியில் விளக்கேற்றி வழிபடுகிறார்கள். பொதுவாக, சிவன் கோயில்களில்தான் பைரவர் வழிபாடு உண்டு. ஆனால், தாடிக்கொம்பு பெருமாள் கோயிலில் பைரவர் வழிபாடு இருப்பது இதன் சிறப்பு!

- கே.மகாலக்ஷ்மி, திண்டுக்கல்





அதிலிருந்து பெண் வடிவில் வெளிப்பட்ட பூமா தேவி, சீதையை இறுகத் தழுவியபடி பூமிக்குள் சென்று மறைந்தாள்.

இந்த நிகழ்ச்சி நடந்ததாகச் சொல்லப்படும் இடம் 'சீதா மர்ஹி'. இது உ.பி.யில் உள்ள அலகாபாத்திலிருந்து காசிக்குச் செல்லும் வழியில் பத்து கி.மீ. தூரத்தில் உள்ளது. இங்கு வட இந்தியப் பாணியில் ஒரு பெரிய கோயில் கட்டப்பட்டிருக்கிறது. இரண்டு தளங்களைக்

# சீதா பூமிக்குள் மறைந்த இடம்!

கொண்ட இக்கோயிலின் கீழ்தளத்தில் சீதா தேவியை, பூமாதேவி தன் கைகளில் தாங்கியிருக்கும் காட்சியைக் காணலாம். சுவர்களில் ராமாயண சம்மந்தப்பட்ட முக்கிய நிகழ்ச்சிகளைச் சித்திரமாகத் தீட்டியுள்ளனர்.

பக்கத்தில் உள்ள பழமையான கோயில் தான், சீதை பூமிக்குள் புகுந்த இடம் என்கிறார்கள்.

சீதாதேவியை நோக்கி 107 அடி உயரமுள்ள ஆஞ்சநேயர் கைகூப்பி நிற்கிறார்.

வருந்தி பூமித் தாயைப் பார்த்து, ''அன்னையே நான் ராமனைத் தவிர வேறு யாரையும் நினைக்காதது உண்மையானால் உன் மடியில் இப்போதே எனக்கு இடம் கொடு'' எனப் பிரார்த்தித்தாள். அப்பொழுது படாரென்று பூமி வெடித்தது.

- கே. ராஜலக்ஷ்மி,
சென்னை - 82

காஃபி அருந்துவதினால் உடலின் வெப்பநிலை 15 டிகிரி ஏறுகிறது. இதயத் துடிப்பு 15 சதவிகிதம் அதிகரிக்கிறது. இரத்த அழுத்தம் 14 சதவிகிதம் கூடுதலாகிறது. காஃபியிலுள்ள 'காபைன்' என்ற நச்சுப் பொருளே இதற்கெல்லாம் காரணம் என மாஸச்யூடஸ் தொழில் நுட்ப ஆராய்ச்சிக் கழகம் கூறுகிறது.

- கே.எல். பகவதி, சென்னை - 53






இன்றைய சமூகத்தின் ஆழமாக வேரூன்றிவிட்ட ஒரு தீமை வரதட்சணை. மணமக்களுக்குத் திருமணத்தின்போது பெற்றோர் ஆசையோடும், பாசத்தோடும் பரிசுப் பொருட்களை அளிப்பது தொன்றுதொட்டு வருகிற வழக்கம். இன்று திசை மாறி தங்கள் பெண்ணுக்குத் திருமணம் செய்து வைக்கும்போது பெற்றோர்கள், வரதட்சணை என்ற பெயரில் ரொக்கமும், தங்கமும், இதரப் பரிசுகளும் கொடுக்க வேண்டும் என்ற கட்டாயமாகிவிட்டது.

வசதியான பெற்றோர்கள் தங்கள் மகளது திருமணத்துக்கு மிகுதியான சீர் வரிசைகள் அளித்தார்கள். இதைக் கண்டு, தங்கள் வீட்டுக்கு வருகிற மருமகளும், நிறைய சீர் வரிசையுடன் வர வேண்டும் என்ற எதிர்பார்ப்பு அனைவருக்கும் அதிகரிக்கத் தொடங்கியது. இதனால், தங்கள் மகனது திருமணத்தின்போது இவ்வளவு மதிப்புள்ள சீர்வரிசைகள் தர வேண்டும் எனக் கட்டாயப்படுத்த ஆரம்பித்தார்கள்.

காலப்போக்கில் திருமணத்தின் போது மட்டும் என்று இல்லாமல், திருமணத்துக்குப் பிறகும்கூட சீர்வரிசைகள் கொண்டுவரும்படி மருமகளை நிர்பந்தப்படுத்தத் தொடங்கினார்கள். அப்படிக் கொண்டு வராதவர்கள் துன்புறுத்தலுக்கு உட்படுத்தப் பட்டார்கள். கொதிக்கும் வார்த்தைகள் முதல் மண்ணெண்ணெய் ஊற்றிக் கொளுத்துவதுவரை பலவிதமான

கொடுமைகள் நடந்தன. சித்ர வதைகளைத் தாங்க முடியாமல் தற்கொலை செய்து கொள்ளும் சம் பவங்களும் அதிகமாயின.

இத்தகைய கொடுமை களுக்கு முடிவு கட்ட வேண் டும்; புகுந்த வீடு செல்லும் பெண்களுக்குப் பாதுகாப்பு அவசியம் என்று கருதி அர சாங்கம் 1961ல் கொண்டு வந்த சட்டம்தான் வரதட்சணை தடுப்பு சட்டம். மேலும், இது தொடர்பாக ஏற்கெனவே இருக்கும் இந்திய தண்டனை சட்டம், குற்றவியல் நடைமுறை தொகுப்பு சட்டம் (1973), இந்திய சான்றியல் சட்டம் ஆகியவற்றில் திருத்தங்களும், மாற்றங்களும் கொண்டுவரப்பட்டன.




**சட்டத்தின் பார்வையில் 'வரதட்சணை' என்பது என்ன?**

திருமணத்தின் ஒரு தரப்பினரால், இன்னொரு தரப்பினருக்கு, நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ ஏற்படும் ஒப்பந்தம். அதாவது, திருமணத்தின் போதோ, அல்லது திருமணத்துக்குப் பின்னரோ கொடுக்க ஒப்புக் கொள்ளும் சொத்து அல்லது மதிப்பாவணம்தான் 'வரதட்சணை'. (இஸ்லாமியர்கள் இடையிலான மெஹர் அல்லது மணக் கொடைக்கு இது பொருந் தாது)

# கொடுமை!

பாலா நடராஜன்

**வரதட்சணை கேட்பது தானே குற்றம்?**

வரதட்சணை தடுப்புச் சட்டம் பிரிவு 3 மற்றும் 4ன் படி, வரதட்சணை கேட்பது மட்டுமின்றி கொடுப்பதும்கூட தண்டனைக்குரிய குற்றம்தான். இதற்கான புகார் தாக்கல் செய்யப்பட்டால், தான் குற்றம் புரிய வில்லை என்பதை மெய்ப்பிக்கும் சுமை, குற்றம் சாட்டப்பட்டவரையே சேர்ந்தது. அது மட்டுமில்லை. வரதட்சணை கொடுப் பதற்கும், வாங்குவதற்கும் உடந்தையாக இருப்பதும் தண்டனைக்குரியதே!

மத்திய அரசு 1976ல், அதன் ஊழியர்கள் வரதட்சணை கொடுப்பதையும், வாங்கு வதையும் தடை செய்து உத்தரவு பிறப் பித்தது. இது மத்திய அரசின் பணியாளர் நன்னடத்தை விதிகளில் குறிப்பிடப்பட் டுள்ளது. இதற்குரிய தண்டனையாக ஐந்தாண்டுகளுக்குக் குறையாத சிறை தண்டனை உண்டு. மேலும், பதினைந் தாயிரம் ரூபாய் அல்லது வரதட்சணையின் மதிப்பு இவற்றில் எது அதிகமோ அந்த அளவுக்கு அபராதம் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. சில வழக்குகளில் ஐந்தாண்டு களுக்குக் குறைவாகவும் நீதிமன்றம் தண்டனை அளிப்பதுண்டு.

திருமணத்தின்போது மணப்பெண் ணுக்கோ, மணமகனுக்கோ வரதட்சணைக் கான கோரிக்கை ஏதும் இல்லாமலேயே அன்பளிப்புகள் அளிக்கப்படும். இவற் றுக்கு இந்த விதிகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. இந்த அன்பளிப்பு களைப் பட்டியலிட்டு, இரு தரப்பினரும் கையெழுத்திட வேண்டும்.

வரதட்சணை சம்மந்தப்பட்ட வழக்கு களை எந்த நீதிமன்றத்தில் வேண்டு மானாலும் தாக்கல் செய்ய லாமா என்றால் கிடை யாது. மெட்ரோபாலிடன்

மாஜிஸ்திரேட் என்னும் பெருநகர் குற்றவியல் நடுவர் அல்லது ஃபர்ஸ்ட் கிளாஸ் ஜுடிசியல் மாஜிஸ்திரேட் எனப்படும் முதல் வகுப்பு நீதித்துறை நடுவர் நீதிமன்றத்துக்குக் குறைவான எந்த நீதிமன்றத்தையும் நாட முடியாது.

**பாதிக்கப்பட்ட பெண்தான் வரதட்சணை கொடுமை குறித்த புகாரை அளிக்க முடியுமா?**

பாதிக்கப்பட்ட பெண், அவரது பெற்றோர்கள் அல்லது காப்பாளர்கள் புகார் கொடுக்கலாம். மேலும், மத்திய, மாநில அரசுகளால் அங்கீகரிக்கப்பட்ட பொதுநல அமைப்புகளும் வரதட்சணைக் கொடுமை குறித்து தாராளமாகப் புகார் கொடுக்க சட்டத்தில் அனுமதி வழங்கப் பட்டுள்ளது. 1985 ஆம் ஆண்டுக்கு முன்னால், பாதிக்கப்பட்ட பெண் அல்லது அவரது பெற்றோர்கள் மட்டுமே புகார் அளிக்க முடியும் என்ற நிலை நிலவியது.

**வரதட்சணை சம்பந்தமாக புகார் கொடுக்க கால வரம்பு ஏதாவது உள்ளதா?**

பல வழக்குகளில் திருமணமாகி, பல வருடங்கள் கழித்தே இத்தகைய கொடுமைகள் வெளிச்சத்துக்கு வருகின்றன. எனவே, புகார் கொடுக்க காலவரையறை ஏதுமில்லை. முன்பு, திருமணமாகி ஓராண்டு எனக் கால வரையறை இருந்தாலும், அது பின்னர் நீக்கப்பட்டுவிட்டது.

வரதட்சணை புகாரின் பேரில் ஒருவரை வாரன்ட் இல்லாமலேயே கைது செய்ய முடியும். அதே போல, கைது செய்யப் பட்டவர் ஜாமீனில் வெளி வர முடியாது. அது மட்டுமின்றி, வரதட்சணை கோருதல், வாங்குதல் அல்லது வாங்க உடந்தையாக இருத்தல் ஆகியவற்றின்பேரில் ஒருவர் மீது வழக்கு தொடரப்பட்டால், தான் குற்ற மற்றவர் என்பதை நிரூபிக்கும் சுமை அவரையே சார்ந்தது என்பது குறிப்

எனக்குத் தெரிந்த குடும்பத்தில் நடந்த சம்பவம் இது. மணமகன் குடும்பத்தினர், மணமகள் குடும்பத்தினிடம் பேசி இவ்வளவு வரதட்சணை என்று பரஸ்பரம் ஒப்புக்கொண்டு, அதை எழுத்து பூர்வமாக எழுதி கையெழுத்து போட்டுவிட்டார்கள். "நாளைக்கு பெண் வீட்டார், தங்கள் மீது வரதட்சணை கேஸ் போட்டால், அவர்கள் மனமுவந்து கொடுத்த அன்பளிப்புதான் வரதட்சணை" என்று சொல்லி இந்த ஒப்பந்தத்தைக் காட்டி விடலாம் என்பது மணமகன் குடும்பத்தினரது திட்டம். அந்தக் குடும்பத்தில் அதற்கான சந்தர்ப்பம் வாய்க்கவில்லை என்றாலும், இதைக் கேள்விப்பட்டபோது எனக்கு சிரிப்புதான் வந்தது. காரணம், மணமகன் வீட்டார் தங்களை புத்திசாலிகள் என நினைத்து செய்துகொண்ட எழுத்து பூர்வமான ஒப்பந்தம் சட்டப்படி செல்லாது. நாளைக்கு வரதட்சணை புகார் கொடுக்கப்பட்டால், அந்த ஒப்பந்தக் காகிதம் அவர்களைக் காப்பாற்றக் கை கொடுக்காது.



பிடத்தக்கது.

வரதட்சணை கொடுமை காரணமாக பெண்கள் தற்கொலை செய்துகொள்ளும் பரிதாபம் ஒரு பக்கம் நடக்கிறது. இன்னொரு பக்கம் வரதட்சணையைக் காரணம் காட்டி, பெண்களைத் துன்புறுத்துவதும், கொலை செய்வதும் அதிகரித்து வருகிறது. இது கண்டிக்கத் தக்கது. இதன் அடிப்படையில் இந்திய தண்டனைச் சட்டத்தில் 'வரதட்சணை மரணம்' என்ற குற்றமும் சேர்க்கப்பட்டிருக்கிறது.



**அது என்ன வரதட்சணை மரணம்?**

ஒரு பெண் திருமணமாகி, ஏழு ஆண்டுகளுக்குள் தீக்காயம் அல்லது உடற்காயங்கள் காரணமாக இறந்திருந்தாலும் இயல்பான சூழ்நிலையில் இல்லாமல் சந்தேகத்துக்கு இடமான முறையில் இறந்திருந்தாலும் அதை வரதட்சணை மரணம் என்று சொல்லலாம். இத்தகைய மரணங்களில், வரதட்சணை தொடர்பாக கணவனால் அல்லது அவனது உறவினர்களால் அந்தப் பெண் கொடுமைக்கு உள்ளாக்கப் பட்டாள் என்பதற்கு ஆதாரம் இருக்க வேண்டும். குற்றம் சந்தேகத்துக்கு இடமில்லாமல் நிரூபணமானால் குற்றம் இழைத்தவருக்கு ஏழு ஆண்டுகள் சிறை தண்டனை முதல் ஆயுள் தண்டனை வரை கிடைக்கலாம்.

**அடுத்த இதழில், வரதட்சணைக் கொடுமையின் சகோதரியான பெண்கள் மீதான வன்முறைகுறித்த சட்டங்கள் பற்றி பார்ப்போம். அதனைத் தொடர்ந்து இன்றைய பெண்கள் ஆண்களைப் பழிவாங்கும் கருவிகளாக அவற்றை எப்படிப் பயன்படுத்துகிறார்கள் என்ற கொடூரத்தையும் பார்க்கலாம்.**

எழுத்து, வடிவம் : **எஸ்.சந்திரமௌலி**

## இஞ்சிக் குழம்பு!

ஐம்பது கிராம் இஞ்சியைத் தோல் சீவி, சிறு சிறு துண்டுகளாக்கி, நல்லெண்ணெயில் நன்கு வதக்கவும். அதனுடன் எலுமிச்சையளவு புளி, தேங்காய் இரண்டு துண்டுகள், சீரகம் ஒரு டீஸ்பூன், பத்து சின்ன வெங்காயம் சேர்த்து, மிக்ஸியில் நன்கு அரைத்துக் கொள்ள வேண்டும். அரைத்த விழுதுடன் தேவையான அளவு மிளகாய்த் தூள், மல்லித்தூள், மஞ்சள் தூள், பெருங்காயம் சேர்த்துக் கரைத்துக் கொள்ளவும். நல்லெண்ணெயில் கடுகு, வெந்தயம், வெங்காயம், கறிவேப்பிலை தாளித்து, குழம்பில் ஊற்றி அடுப்பில் வைத்து, கொதிக்கவிட்டு உப்பு போடவும். குழம்பு கெட்டியானதும், சாதத்தில், போட்டுச் சாப்பிட்டால், சளி, வாதம், பித்தப் பிரச்னைகள் நீங்கும். ஜீரணத்துக்கு நல்லது.

- கமலா ராஜசேகரன்,
பொள்ளாச்சி



13 - 7 வரை
இடைப்புள்ளி,
எம்.இந்திராணி,
கோவை



என்.சுபஸ்ரீ,
வடவள்ளி





35 - 5 நேர்புள்ளி
ப.கமலாம்பிகை,
ஓசூர்

# வண்ணக்



ஆர்.எஸ்.லக்ஷ்மி,

மதுரை



9 புள்ளி 5 வரை

இடைப்புள்ளி

ஹெட்விக் அம்மாள்,

நாகர்கோவில்



15 - 8 வரை

இடைப்புள்ளி

எஸ்.பத்மாவதி சுப்பையன்,

பாபநாசம்

# கோலங்கள்!

## தெரிந்து கொள்ள...

நம் நாட்டு பெண்கள் முக்கால்வாசிப் பேர் திருமணமாகி, அமெரிக்கா போனதும் மேல் படிப்பு படிக்க சேர்ந்து விடுகிறார்கள். படிப்பு முடிந்ததும் வேலைக்கு முயல்கிறார்கள். ஆகையால் ஃபேமிலி பிளானிங்தான்.

இதனிடையில் பாட்டி, தாத்தா, அம்மா, அப்பா உறவினர்கள் நச்சரிப்பு ''ஏண்டி? இன்னும் எத்தனை நாளைக்கு இப்படியே இருக்கப் போகிறீர்கள்?'' என்று.

ஒரு வழியாகக் குழந்தை பெற்றுக் கொள்ளலாம் என்று தீர்மானித்து விடுகிறார்கள். பிறகு அதற்கும் பிளானிங்தான்.

இனிமேல்தான் வேடிக்கை! கர்ப்பமா, இல்லையா என்று அறிந்து கொள்ள ஒரு கருவி. அதை வைத்து முதலில் கணவன் மனைவியே தெரிந்து கொண்டு பின்னர் டாக்டரிடம் போய் 'கன்ஃபர்ம்' செய்துகொண்டு பெற்றோர்களுக்கும் முக்கியமான நண்பர்களுக்கும் சொல்கிறார்கள்.



# "நாங்க கர்ப்பம்

எப்படித் தெரியுமா? ''என் மனைவி உண்டாகியிருக்கிறாள்'' என்றோ அல்லது ''அம்மா நான் குளிக்காமல் இருக்கிறேன்'' என்றோ அல்ல. ''வி ஆர் பிரக்னெண்ட்'' என்று பெருமையாக.

அப்பொழுதே முதல் மாதத்திலிருந்து குழந்தை பிறப்பு வரை எப்படி இருக்கும், இருக்க வேண்டும் என்பதைப் புத்தகங்கள் மூலமாகவும் வலையத் தளங்கள் மூலமாகவும் படிக்கத் தொடங்கி விடுகிறார்கள்.

இனி மாதாமாதம் டாக்டரிடம் செக் அப். எல்லாம் டாக்டர் சொல்படிதான். எப்பொழுது வந்தப் பெற்றோரை வரவழைக்கலாம் என்று பிளான் செய்யப்படுகிறது. பிரசவ சமயத்தில் பெண்ணுக்குத் தாய் தந்தை அருகில் இருக்கும்படி ஏற்பாடு செய்து கொள்கிறார்கள். (ஆறு மாதம்தானே இருக்க முடியும்!)

இங்கு கர்ப்பவதிக்கு எல்லாவற்றுக்கும் பயிற்சி வகுப்பு உண்டு. (சில இடங்களில் இலவசம் என்று கேள்வி!) பெற்றோர்கள் டாக்டர்களாகவே (நம்மூர்) இருந்தால்கூட அவர்கள் அமெரிக்க டாக்டர்கள் சொல்படி தான் நடக்க வேண்டும். பயிற்சி வகுப்புக்கு கணவன் மனைவி போகிறார்கள். கணவன் கட்டாயம் போகவேண்டும்.

பயிற்சி எதற்கு என்கிறீர்களா? குழந்தை பிறப்புக்கு போகுமுன் எப்படி மூச்சுவிட வேண்டும். எப்படி உட்கார, படுக்க வேண்டும், மருத்துவமனையில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது வரை கற்றுத் தரப்படும். மேலும், குழந்தை பிறந்த பிறகு எப்படிக் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொள்ள வேண்டும், தாய்ப்பால் எப்படி ஊட்ட வேண்டும் என்பதெற்கெல்லாம் பயிற்சிகள் உண்டாம். நமது பாட்டி வைத்தியம் எல்லாம் இங்கு செல்லாது.

ஒரு சிறு மாத்திரை கொடுப்பதாக இருந்தாலும் இது எதற்காக கொடுக்கப் படுகிறது. அதில் என்னென்ன உள்ளது. பின் விளைவு இருந்தால் எப்படி இருக்கும் என்று சொல்லி (நம் சம்மதத்துடன்) கொடுக்கிறார்கள்.

இங்கு டாக்டர்கள் சிசேரியன் இல்லா மல் நார்மல் டெலிவரிக்குத் தான் முயற்சி செய்வார்களாம். ஏனெனில், இங்கு சட்டம் எல்லோரையும் பயமுறுத்துகிறது. ஏதாவ தென்றால் வழக்கு போட்டுவிடுவார் களாம்!

அடுத்து குழந்தை பிறக்குமுன்பே (ஆணா? பெண்ணா? என்று தெரிந்து விடுவதால்) பெயர் 'செலக்ட்' செய்துவிடு கிறார்கள். அதற்குப் பல வெப்சைட்டுகள், புத்தகங்கள் ஆராயப்படுகின்றன. மேலும் பெயரின் பொருள், உச்சரிப்புகூட பார்க் கிறார்கள். இல்லாவிட்டால் பள்ளிகளில் ஒன்று கிடக்க மற்றொரு பெயரால் கூப் பிட்டு விடுவார்களாம். (சரியாக உச்சரிக்க முடியாமல்) அர்த்தம் மாறிவிடுமாம்.

ஓகே! பெயர் செலக்ஷன் ஓவர்! இனி குழந்தைக்கு பேபி சீட் ஒன்று வாங்கி காரில் பொருத்திக்கொள்ள வேண்டும். அது நாமே செய்யக்கூடாது. போலீஸ் துறையிலோ, தீயணைப்புப் படை ஆஃபீஸிலோ போய் ஃபிக்ஸ் செய்து கொண்டு சான்றிதழ் வாங்கி வைத்துக் கொள்ள வேண்டும்.

மேலும் 36வது வாரமே பிரசவத் துக்கு எடுத்துப்போக வேண்டிய வற்றைத் தயார் செய்து காரில் வைத்துவிட வேண்டும். என் னென்ன? தெரியுமா?

முதலில் புகைப்பட கேமரா. வீடியோ கேமராகூட எடுத்துப் போகலாம். வலி எடுக்கும் போதும், பிறகும் பாட்டுப் போட்டுக் கேட்க சி.டி.க்கள். கணவனுக்கான மற்றும் கூடவே இருக்கும் பெண்ணின் தாய்க்கான உடைகள். ஸ்வெட்டர், குல்லா போன்ற குளிர்தாங்கும் உடை கள். தாய்க்கான நைட்டி முதல் பிரசவத்துக்குப் பிறகு போட்டுக் கொள்ளக்கூடிய ஆடைகள். குழந்தைக் கான உடைகள். அவை பலவிதம். சட்டைகள். ரிசீவிங் கிளாத். குழந்தை யைப் போத்தி வைக்க ஸ்வாட்லிங் கிளாத். டைப்பர்ஸ். ஹக்கீஸ் எனப் படும் டைபர்ஸ். இன்னும் பல.




ஒருவழியாக பிரசவ அறைக்கும் போயாகிவிட்டது. கூட யார் வேண்டுமானாலும்

இருக்கலாம். நமது பெண்களைப் பொறுத்தவரை பிரசவிக்கும் பெண்ணின் தாயும், கணவரும் இருக்கிறார்கள்.

வலி எடுப்பதும் குழந்தை அசைவதும் அணு அணுவாகக் கம்ப்யூட்டரில் பதிவாகி (சத்தமும் கேட்கிறது) தெரிகிறது. சுகப் பிரசவம் ஆனால் சரி! சில சமயங்களில் மனைவி கஷ்டப்படுவதைப் பார்த்து கணவனே சிசேரியன் செய்யச் சொல்லி விடுவாராம்.

அப்பா! பிரசவம் ஆகி அழகான ஆணோ பெண்ணோ பிறந்துவிட்டது. குழந்தைக்கு டோக்கன் கட்டி தாயிடம் காட்டிவிட்டு (தாயின்மேல் போடுவார்களாம்) க்ளீன் செய்து, குளிப்பாட்டி தந்தையிடம் கொடுத்து எடுத்து வரச்சொல்கிறார்கள். குழந்தை மருத்துவரும் உடன் இருப்பார். குழந்தையின் கண் காது, மூக்கு, தொண்டை எல்லாவற்றையும் உடனே பரிசோதித்துவிட்டு தாயிடம் கொண்டு வந்து விட்டு விடுவார்கள். இதெல்லாம் நார்மல் பிரசவத்துக்குதான்.

ரூமில் சகல வசதிகளும் உண்டு. கரும் பலகை ஒன்றில் குழந்தை மல, ஜலம் கழிப்பதையும் தாய்ப் பால் அருந்துவதையும் மணிக்கணக்கு தவறாமல் குறித்து வைக்கிறார்கள்.

மருத்துவமனையிலிருந்து வருமுன்பே குழந்தை மருத்துவரை நாமே பார்த்து தேர்ந்தெடுத்து பதிவு செய்து கொள்ள வேண்டும். அவருக்கு எல்லா ரிக்கார்டுகளையும் அனுப்பி விடுவார்கள்.

எல்லா டாக்டர்களையும் முன் பதிவு மூலம்தான் சந்திக்க முடியும். ஆனால் அவர்களும் நமக்கு போன் செய்து நினைவூட்டுகிறார்கள். எல்லாம் நேரப்படி நடக்கிறது.

நம்மூர் மாதிரி பிரசவம் ஆனவுடனேயோ அல்லது மருத்துவமனையிலோ நண்பர்கள்கூட வந்து பார்க்கமாட்டார்கள். (தொந்தரவு கொடுக்க வேண்டாமென்றுதான்!) வீட்டுக்கு வந்தபின் நம் சௌகர்யம் தெரிந்துகொண்டு வந்து பார்க்கிறார்கள்.

முக்கியமான விஷயம். யாராக இருந்தாலும் குழந்தையைத் தொடுமுன் கைகளை நன்கு சுத்தம் செய்து கொண்டுதான் தொடுகிறார்கள். தூக்குகிறார்கள். (நர்ஸ்கள், டாக்டர்கள் உள்பட) வீட்டில் கூட.

அன்புத் தாய்மார்களே! பாசமுள்ள பாட்டிமார்களே! தாயாகப் போகும் (இந்தியப்) பெண்களே! உங்கள் பெண்ணோ, பேத்தியோ கூட ஒருநாள் திருமணமாகி அமெரிக்கா போகலாம். ஆகையால் தாங்கள் பிரசவ காலத்தில் பட்ட/படும் அனுபவங்களை தயவுசெய்து குறித்து வைத்துக் கொள்ளுங்கள். ''எத்தனாவது மாதம் எப்படி இருந்தது?'' என்று போனில் கூப்பிட்டு கேட்கலாம் ''எனக்கு ஞாபகம் இல்லேடி'' என்று சொல்ல வேண்டாம் அல்லவா?

சுகப்பிரசவ பிராப்திரஸ்து!

**- முத்யாலு ஸ்ரீனிவாசன், சென்னை**



ஒரு தம்ளர் கடலை மாவு, கால் தம்ளர் இட்லி மாவு, மிளகாய்த் தூள், மஞ்சள் தூள், பெருங்காயம், உப்பு, சோடா சிறிதளவு சேர்த்து பஜ்ஜி செய்தால், மெதுவாகவும் ருசியாகவும் இருக்கும்.

**- வி.பானுமதி, சென்னை - 28**

# Oxymed Hospital Group

## எலும்பு மற்றும் மூட்டுவலிக்கு அறுவைசிகிச்சை அற்ற மருத்துவம் முதன்முறை சென்னையில் அறிமுகப்படுத்தப்பட உள்ளது.

**EMITRON PST THERAPY**
**(From Europe)**



**இதன் பலன்கள்**

- ✓ அறுவை சிகிச்சை இல்லை
- ✓ வலி இல்லை
- ✓ மருத்துவமனையில் தங்கும் அவதி இல்லை
- ✓ மயக்க மருந்து இல்லை
- ✓ குறுகிய நாட்களிலேயே உங்கள் மூட்டுவலியை குணப்படுத்தலாம்

★ ISO சான்றிதழ் பெற்ற மருத்துவமனை ★ தமிழ்நாடு அரசு அங்கீகாரம் பெற்றது

**Contact us at**



**OXYMED HOSPITALS**
**PRIVATE LIMITED**
CLOSE TO YOUR HEART

**ISO 9001:2000**

Main Branch, 786, Anna Salai, (Huma Hospital Building) Nandanam, Ch-35. Ph : 42131010 / 421310104 / 42131016. Fax : 42131020

E-mail : oxymedhospitals@yahoo.com Website : www.oxymedhospitals.in

Timings : Week days 10 am to 6 pm | With prior appointment only

''உடம்பு எப்படி?'' என்றாள், மீரா.

''தேவலை!''

''டாக்டர் என்ன சொல்றார்?''

''தேறிட்டேன் என்கிறார்.''

''சைகியாட்ரிஸ்ட் வராரா?''

''வரார். என் மூளையைக் கழுவிப் புதுப்பிக்கணும்னு பார்க்கிறார்.''

''முடியுமா?''

சிரித்தான் அவன்.

இன்னும் எத்தனை நாள் இங்கே இருப்பே! இப்பவே ஆறு மாசம் ஆச்சே!

அவன் நினைவு உடனே ஓடியது.

'நானா அப்படி ஆனேன்? நல்லாத் தானே இருந்தேன். லவ் பண்ணினது என் தப்பா'

'அது தப்பில்லை! ஆனா, அது முழுக் காதல் தானா? அல்லது ஒருதலைக் காதலா!

**'சன்னலில் நிற்பவளுக்கு :**

**உன் கண்கள் வழியாக உன் இதயத்தை உணர்ந்து விட்டேன். நீயும் அதுபோல் என்னை அறிந்திருப்பாய் என்று நினைக் கிறேன். அதை உறுதி செய்து கொள்ளவே இதை எழுதுகிறேன்...**

என்று தொடங்கி, கண்ணதாசன், பாரதிதாசன், காளிதாசன் ஆகியவர்களின் உதவியோடு மீதி வரிகளை எழுதி முடித்தான்.

அர்த்தமுள்ளதாகவும், கெஞ்சல் உள்ள தாகவும் ஒரு பார்வையை அவள் மீது ஓட விட்டு, பாக்கெட்டிலிருந்த கடிதத்தைச் சட்டென்று எடுத்து காம்பவுண்டுச் சுவரின் விரிசலில், அவள் கண்கள் படும்படியாக வைத்தான்.

பிறகு கல்லூரியை நோக்கி விரைவாக நடக்க ஆரம்பித்தான்.

அன்று இரவு முழுவதும், ஒரே தவிப்பு, தத்தளிப்பு!

ஒரு தைரியத்துடன் அவள் வீட்டை நெருங்கி, மீறி வரும் ஒரு படபடப்புடன் காம்பவுண்டுச் சுவரைப் பார்த்தபோது, அதன் விரிசலின் நடுவில் ஒரு பிங்க் நிறக் கடிதம் காணப்பட்டது.

கடிதத்தை அவசரமாக எடுத்துக் கொண்டு நேராக வீட்டுக்கு வந்தான். கண்ணீர் வழியும் கண்களோடு படிக்க ஆரம்பித்தான்.

**நன்றி!**

**என் அப்பாவுக்கு நோய். அதனால் வேலைக்குப் போக முடியவில்லை. நான்தான் அவர் வாழ்க்கைக்கு ஆதாரம்.**

**இன்று நாங்கள் இந்த வீட்டைக் காலி செய்கிறோம். ஏன் என்றோ, எங்கே போகிறோம் என்றோ கேட்காதீர்கள். யாரிடமும் விசாரிக்காதீர்கள். என் அப்பா வுக்கு இந்தக் கால மாணவர்களைக் கண்டால் பிடிக் காது. குறிப்பாக உங்களைப் பல தடவை திட்டி யிருக்கிறார்.**

**நீங்கள் எழுதிய கடிதம் நன்றாக இருந்தது. ஆனால், அதுபோல் இனிமேல் எழுதாதீர்கள்.**

**மன்னிக்கவும். உங்களிடமிருந்து விடை பெறுகிறேன். நன்றி.**



**ஸ்டார் எழுத்தாளர்கள் எழுதும் யூத் சிறுகதைகள் வரிசையில் இந்த மாதம் புஷ்பா தங்கதுரை**

# மீரா




# என் காதலி!

உணர்ச்சிகள் சீறி வீச, கண்களை மூடிக் கொண்டு அப்படியே வேதனையோடு சாய்ந்தான்.

எங்கே போனாள்?

அந்த வீடு வந்ததும் அந்தக் கேள்வி அவனை உலுக்கியது. திடீரென்று தீர் மானித்து வீட்டில் ஏறி, ''இங்கே குடித் தனம் இருந்தார்களே, அவர்கள் எங்கே போனார்கள்?'' என்று கேட்டபோது, ''யாருக்குத் தெரியும்? என்னிடம் சொல்லிக் கொண்டு போகவில்லை'' என்று செவிட் டில் அறைந்தாற்போல் பதில் சொன்னார்

வீட்டுக்காரர்.

பல்லைக் கடித்துக் கொண்டு வேகமாக அவன் வெளியே வந்தான்.

மறுநாள் காலையில் நேராக ரயில் நிலையத்துக்குப் போகும்போது, ''என் மனத்தில் இருப்பது உண்மைக் காதலானால் அதுவே எனக்கு வழி காட்டட்டும்!'' என்று எண்ணினான்.

ரயிலில் ஏறிய மனத்தை ஒரு முகமாகக் குவித்துக் கண்ணை மூடி, உள்ளே ஒரு சமிக்ஞை வருவதற்காகக் காத்திருந்தான்.

ரயில் கிண்டி, பல்லாவரத்தைக் கடந்து தாம்பரம் போய்விட்டு, பிறகு மீண்டும் அதே நிலையங்களைக் கடந்து மாம்பலத்துக்கு வந்தது. எனினும் அவனுக்கு சமிக்ஞை வராமல் போகவே, கீழே இறங்கி பஸ்ஸைப் பிடித்துக் கூட்டத்தோடு தொற்றிக் கொண்டான்.

அவனது கல்லூரியை அது தாண்டிய போது கூட அவன் கீழே இறங்கவில்லை. அதற்கும், அவனுக்கும் எந்தவிதச் சம்பந்தமும் இல்லாதவன் போல் அவன் பிரயாணத்தை மேலே தொடர்ந்து கொண்டு இருந்தான்.

அவள் எங்கே?

''காதலி! உன் பெயர் கூட எனக்குத் தெரியாது. வாழ்க்கையில் உனக்கு நான் எந்தவிதத் தொந்தரவையும் கொடுக்க மாட்டேன். உன் முகவரியை மட்டும் எனக்குக் கொடுத்திருக்கக் கூடாதா?'' என்று முணுமுணுத்தான்.

மீண்டும் மனத்தைக் குவித்தபோது ஒரு விடை திடீரென்று அதில் மிதந்து வருவது தெரிந்தது.

இந்த நினைவு வந்தபோது மகிழ்ச்சி ஏற்பட்டது. அப்படியானால் ஒரு நாட்டுப்புற பகுதியில்தான் அவள் இருக்க வேண்டும் என்று தீர்மானித்தான் அவன். அங்கேதான் குறைந்த வாடகையில் தோட்டம் போடுவதற்கு வசதியாக இடம் கிடைக்கும். வாசலில் துளசி மாடம் வைக்க வசதி இருக்க வேண்டும். ஆமாம்! அவள் வீட்டுவாசலில் ஒரு துளசிமாடம் இருந்தது. நினைவுக்கு வந்தது.

இந்தக் கண்டுபிடிப்புக்காக அவன் மனத்துக்கு அவனே ஷேக்-ஹாண்ட்ஸ் கொடுத்த பின் பஸ்ஸிலிருந்து இறங்கி நேராகக் கோட்டை ரயில் நிலையத்தை நோக்கி நடந்தான்.

பரங்கிமலை வந்தபோது மனம் திடீரென்று குறுகுறுத்தது. சட்டென்று ரயிலைவிட்டு இறங்கி, வெளியே வந்து பார்த்தபோது, பத்து வருடங்களுக்கு முன் பார்த்ததைவிட ஊர் பெரிதாக வளர்ந்து விட்டிருந்தது. காலையிலிருந்து இன்னும் சாப்பிடவில்லை என்ற நினைவு வந்ததும், அது ஒரு முக்கியமல்ல, கையில் எடுத்துள்ள வேலைதான் முக்கியம் என்று எண்ணினான்.



சாப்பிடவில்லை என்பது மட்டுமல்ல, தலையைச் சரியாக வாரிக் கொள்ளவில்லை சட்டையில் பட்டன் போட்டுக் கொள்ளவுமில்லை. தோட்டம் உள்ள வீடுகளைப் பார்த்துக் கொண்டே சென்றபோது, ஏதாவது ஒரு இடத்தில் மனம் தானாகக் குறுகுறுத்து அவளது வீட்டை அடையாளம் காட்டும் என்று நினைத்தான். ஆனால், வியர்வை சொட்ட அலைந்த பிறகும் எந்தவித சமிக்ஞையும் அவன் மனத்தில் வரவில்லை.

களைத்துப் போய் டார்பாலின் தொங்கும் ஒரு பங்க் கடைக்குப் போய், ''இந்தத் தெருவில் ஒரு அப்பாவும் பெண்ணும் குடி வந்திருக்கிறார்களா?'' என்று கேட்டதும்,

கடைக்காரன் அவனைப் பார்த்து திருதிரு என்று விழிக்க, ''அவள்தான்; அந்தப் பெண்! வாசலில் துளசி மாடம் வைத்திருப்பாள்!'' என்று அழுத்திக் கூறினான்.

கடைக்காரன் மரியாதையுடன், ''தெரியாது'' என்று சொல்லிவிட்டு எங்கேயோ பார்த்துத் திரும்பி சிரித்ததைக் கவனித்ததும், ''யாருக்கும் ஊரில் நடக்கும் எதிலும் அக்கறை இல்லை!'' என்று முணு முணுத்துக் கொண்டான்.

தளர்ச்சியுடன் ரயில் நிலையப் படிக் கட்டுகளில் ஏறி இறங்கி உள்ளே பிளாட்பார பெஞ்சின் மீது உட்கார்ந்ததும், ''பார்த்தாயா? உனக்காக நான் எப்படி அலைகிறேன்!'' என்று மானசீகமாக அவளிடம் பேசினான் அவன்.

**டியர் காலேஜ் ஸ்டூடன்ட்ஸ் ஒன்லி... இந்தக் கதையைப் படியுங்க... கதையின் முடிவு என்ன?**
**மீரா என்ன செய்தாள்? யோசிச்சு எழுதுங்க.**
**சூப்பர் கற்பனைக்கு ரூ.500/-பரிசு!**
**கல்லூரிப் படிப்புக்கான அத்தாட்சியை இணைக்கவும்.**
**கடைசித் தேதி 16.8.09**

ஒவ்வொரு ரயிலும் பறவை இறங்குவது போல் பிளாட்ஃபாரத்தில் ஒயிலாக வந்து செல்லும்போது அவற்றில் ஒன்றிலிருந்து அவள் இறங்குவதாகவும், அங்கே அவன் இருப்பதைக் கண்டு அதிசயிப்பதாகவும் கற்பனை செய்தான்.

கூட்டத்தினிடையே வந்து அவனிடம் பேசுவதற்கு அவள் விரும்பாமல், ஸ்டேஷன் சுவரில் ஒட்டியிருந்த ஒரு விளம்பர போஸ்டரின் அடிப்பாகத்தை சாடையாகக் காட்டிவிட்டு, அதில் அவளது முவரியை எழுதி இருப்பதாக சைகையில் தெரிவித்துவிட்டு அப்பால் போவது போல இருந்தது.

அதெல்லாம் கற்பனை என்று அவனுக்கு நன்றாகத் தெரிந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் உண்மையாகவே எழுந்து அருகிலுள்ள போஸ்டரின் அடி பார்டரை உற்றுக் கவனித்தபோது, பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஒரு பெரியவர் வியப்பும் திகைப்பும் கலந்த பார்வையில் அவனை முறைத்துப் பார்ப்பதை உணர்ந்தான்.

அவளது முகவரியை அவன் தேடிக் கொண்டு போவதைவிட, அவள் அவனது முகவரியைத் தேடிக் கொண்டு வருவது சுலபம் என்று எண்ணினான்.

உடனே எழுந்து பால்-பாயின்டை எடுத்து ஒவ்வொரு போஸ்டரின் வெள்ளை பார்டரிலும் அவனது முகவரியை எழுத ஆரம்பித்தபோது, ஸ்டேஷன் அதிகாரி அதைப் பார்த்து, ''ஏன் இப்படி எழுதுகிறாய்?'' என்று கோபத்துடன் கேட்க,

''அவளுக்குத் தெரிய வேண்டாமா?'' என்று திரும்பக் கோபமாகக் கேட்டான் அவன்.

ஓடி வந்த போர்ட்டர் அவனைத் தாஜா செய்து அடுத்த ரயிலில் ஏற்றிவிட, மறு ஸ்டேஷனிலும் அதே போல் எழுதிவிட்டு, அதற்கு அடுத்த ஸ்டேஷனுக்கு விரைவாகப் போனான் அவன்.

இரவு வீட்டுக்குப் போகவில்லை. எழும்பூர் ரயில் நிலையத்திலேயே படுத்து உறங்கினான். காலையில் எழுந்து மீதி ரயில் நிலையங்களையும் முடித்துவிட்டு, பதினொரு மணி வெயிலில் சாலையில் நடந்தபோது, 'வீட்டுக்குப் போகிறோம்' என்பதை உணர்ந்தான்.

இவ்வளவு கஷ்டப்படுவதெல்லாம் அவளுக்காக என்று மனத்தில் நினைத்து, ''எல்லாம் உனக்காக!'' என்று வாய்விட்டுக் கூறியபோது, அந்த வார்த்தைகள் அவனை மீறி இரைதலுடன் வெளி வந்ததை அவன்

உணரவில்லை.

அவனது அந்த வார்த்தைகளைக் கேட்டுப் பாதையில் நடந்த பலரும் அவனைத் திரும்பிப் பார்த்தார்கள்.

ஒரு மணிக்கு மெயின் சாலையை அணுகியபோது, எதிரே அவனை நோக்கித் திடீரென்று அவள் வருவதைக் கண்டதும் திடுக்கிட்டான்.

அவளை அதிசயத்தோடு பார்த்தான். அது பிரமைதானோ என்று எண்ணிய போது, அருகில் ஓடி வந்து நின்ற அவள் பேச ஆரம்பித்தாள்.

''நேற்று ஏன் வரவில்லை?''

வியப்பில் அவன் பேசாமல் நின்றான்.

''ஏன் வரவில்லை? நான் எவ்வளவு நேரம் காத்திருந்தேன் தெரியுமா?''

உண்மையில் அவள் தான்! அவளோ தான் பேசினாள்.

''நானும் உன்னைத் தேடி வந்து கொண்டிருக்கிறேன், தெரியுமா?''

''தெரியும்!''

அவள் அவனது கையைப் பிடித்துக் கொண்டாள்.

இறுகப் பிடித்து இழுத்துக் கொண்டு போனாள்.

''ஏன் என்னை என் வீட்டுக்கே அழைத் துப் போகிறாய்?'' என்று ஆச்சரியத்துடன் அவளிடம் கேட்டான் அவன்.

கதவைத் திறந்து, அவள் அவனை உள்ளே அழைத்துப் போனாள். அவளது ஒரு கையில் கவர் ஒன்று இருப்பதைக் கண்ட அவன், சட்டென்று அதைப் பிடுங்கிக் கொண்டான்.

''சனியனே!'' என்று அவள் கத்துவதைக் கண்டு திடுக்கிட்டான். அது அம்மாவின் குரல். அந்தப் பெண்ணின் வாயிலிருந்து அம்மாவின் குரல் எப்படி வெளி வருகிறது?

''நீ யார்?'' என்றான் அவன்.

''அம்மாதான். கவரைக் கொடு.''

''இல்லை. நீ அம்மா இல்லை. பொய் சொல்றே!''

''ஐயோ! அம்மாதாண்டா!''

கவரை இறுகப் பற்றி அங்கும் இங்கும் ஓடினான். அப்பா ஓடி வந்தார். கவரைப் பிடுங்க முயன்றார். அவன் அவருக்கு ஒரு அடி கொடுத்துவிட்டு மேலும் உதைக்க வரவே, அப்பா வெளியே போய் இருவரை அழைத்து வந்தார். அவர்கள் அவனை அணைத்துப் பிடித்து அறையினுள் தள்ளி, வெளியே பூட்டுகிறார்கள்.

எத்தனை நாள் சிறைவாசம்!

நாட்கள் ஓடுவது அவனுக்குப் புரிந்தது.

மீண்டும் மீரா வருவாளா என்று நினைத்த போது ஒருநாள் மீராவே வந்து நின்றாள்.

(கதாசிரியர் புஷ்பா தங்கதுரை எழுதிய கதை முடிவும், பரிசு பெறும் உங்கள் முடிவும் அடுத்த இதழில் வெளியாகும்)



**தெய்வம் நீ!**

கண்ணே, என்னை கவிஞனாக்கினாய்;
புகழ் வந்தது!
காதலனாக்கினாய்;
கடன் வந்தது!
கணவனாக்கினாய்;
துறவறம் வந்தது!
யாவும் தரும் தெய்வம்தான் நீ!

- த.சிவலிங்கம், பி.காம்., மூன்றாமாண்டு, தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலை கழகம், சென்னை - 25

Gurunadhar Charanam



# PRASHANTI ™

House of Silk Cottons

## பிரசாந்தியைப் பற்றி "எங்கே பிராமணன்" புகழ் திருமதி. நளினி...



கலை உணர்வு மிக்க பிரசாந்தியின் சில்க் காட்டன் புடவைகள் என்னை மிகவும் கவர்ந்துள்ளது இந்த காரணத்தினால் தான் நான் பிரசாந்தியின் ரெகுலர் கஸ்டமராக இருக்கிறேன். இங்குள்ள டிசைன்கள் ஏராளம். ருத்ராக்ஷம், ஆலிலை கிருஷ்ணர், டெம்பிள் பார்டர் என்று அடுக்கிக் கொண்டே போகலாம். சமீபத்தில் முடிவடைந்த ஜெயா டி.வி. தொடர் "எங்கே பிராமணனில்" நான் அணிந்திருந்த பிரசாந்தி சில்க் காட்டன் புடவைகள் படு பாப்புலர். பிரசாந்தி புடவைகளில் தான் உயரம் மற்றும் அகலம் தாராளமாக உள்ளது. சீரிய தரத்தாலும் கண்ணைக் கவரும் அரிய வண்ணங்களில் சில்க் காட்டன் உலகில் புதிய புரட்சி செய்து வரும் பிரசாந்திக்கு என் உளம் கனிந்த நல் வாழ்த்துக்கள்...



## It is teen age time in Prashanti...



**Special**

# Aadi Offer

# 5%

**For all Varieties**

**upto 31.08.09**



CHENNAI: 16, 6th Cross Street, CIT Colony, Mylapore, Chennai - 4.
Ph: 24991850 / 24997636 | Sunday Working | e-mail: prashantisarees@gmail.com

BANGALORE: Malleswaram Ph: 2334 1632 - Jayanagar Ph: 2244 9595

visit our website: www.prashanti.co.in

**சில்க் காட்டன் என்றாலே பிரசாந்தி**



**ஆ!** இப்பவே கண்ணக் கட்டுதே! எனக்கு எந்த இன்ஜினியரிங் காலேஜ்ல சீட் கிடைக்குமோ!

- ஜி.மனோஜ், சி.ஐ.இ.டி. பொறியியல் கல்லூரி, கோயமுத்தூர்-109

**கா**மிக்ஸ் புக்கைவிட தலைவருங்க விடற அறிக்கை ரொம்ப காமெடியா இருக்கே!

- ஜி.கைலாஷ், இரண்டாமாண்டு பி.காம், ஆச்சார்யா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, வில்லியனூர், பாண்டிச்சேரி - 110

**எ**ன்னங்க பண்றது! ஜென்ரல் நாலெஜ் இல்லைன்னா ஸ்கூல்ல அட்மிஷன் தர மாட்டேங்கிறாங்களே!

- ஜி.காயத்ரி, வேலம்மாள் பொறியியல் கல்லூரி, சென்னை - 66

**கொ**ஞ்சம் இருங்க டாடி! எல்.கே.ஜி.லேயிருந்து பரீட்சை ஏதும் நடத்தக் கூடாதுங்கிற மாதிரி ஏதாவது திட்டம் வெளியிட்டிருக்காங்களான்னு பார்த்துட்டு வரேன்.

- ஆர்.சந்திரமௌலி, நான்காமாண்டு பி.டெக். சாஸ்த்ரா பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

**ஹை**யா, இனிமே லேடீஸ் கிரிக்கெட் ஆட்டத்துக்கு டிக்கெட் கிடையாதாம்.

- ஆர்.ஐஸ்வர்யா, எம்.பி.பி.எஸ்., பெருந்துறை மருத்துவக் கல்லூரி, பெருந்துறை-53

# போட்டிக்குத் தயாரா? (முடிவுகள்)

## ரூ.100 பரிசு பெறும் காமெண்ட்கள்!

**சு**ட்டிப் பையன் ரொம்ப பிஸியா பேப்பர் படிக்கிறதைப் பார்த்ததும் உங்க மனசுல தோணும் ஒரு வரி காமெண்ட் என்னவென்று கல்லூரி மாணாக்கர்களிடம் கேட்டிருந்தோம். வந்து குவிந்தவற்றில் ரூ.100/- பரிசுபெறும் வாசகங்கள்.





# கலக்குது பாருங்க ஸ்டைலு! 7

ஜி.எஸ்.எஸ்

**உங்களுக்கு ஆடைகளை வசீகரமாக உருவாக்கத் தெரியணும். பல்வேறு வண்ணங்களைப் பற்றிய அறிவு இருக்கணும். நாகரிகம் எப்படி மாறிவருகிறது என்பதை ஊன்றி கவனிக்கணும். அப்படியிருந்தால் ஃபேஷன் டெக்னாலஜி உங்களுக்கு ஏற்ற துறைதான்.**

மாடலிங் துறையில் இருப்பவர்கள் நேரடியாகவே திரைப்படத் துறையில் நுழைந்து, வெற்றிபெறுவது இப்போது சகஜமாகவே இருக்கிறது. தவிர மாடலிங் துறையில் ஈடுபட வேண்டும் என்பதில்லாமல், உலகம் முழுவதும் சிறந்த டிசைன் செய்யப்பட்ட ஆடைகளை அணியும் ஆர்வமும் அதிகரித்து வருகிறது.

உலகின் பொருளாதாரத்தின் முக்கிய முன்னேற்றத்தை, மக்களின்

யூத் எடிஷன் பக்கங்கள்





உடைகளைக் கொண்டு அளவிடலாம் என்ற கருத்து பரவலாக உள்ளது.

உடையிலிருந்து காலணிவரை நாகரிகமாக மிளிரச் செய்யும் அனைத்துமே ஃபேஷன் டெக்னாலஜியின் அங்கங்கள்தான்.

இந்தப் படிப்பு வேலைவாய்ப்புக்கு உதவுவதால் பெற்றோர்களும் ஃபேஷன் டெக்னாலஜி மற்றும் அதன் பிரிவுகளான ஃபேஷன் டிசைனிங், ஆயத்த ஆடை வடிவமைப்பு, ஆயத்த ஆடை மார்க்கெட்டிங் துறைகளில் ஆர்வம் காட்டத் தொடங்கியுள்ளனர்.

சென்னை தரமணியில் உள்ளது நேஷனல் இன்ஸ்டிட்டியூட் ஆஃப் ஃபேஷன் டெக்னாலஜி. சுருக்கமாக நிஃப்ட். இது மத்திய ஜவுளி அமைச்சகத்தின்கீழ் இயங்கும். தன்னாட்சி பெற்ற நிறுவனம். 1986ல் தொடங்கப்பட்ட இந்த அமைப்பு, உலக அளவில் ஃபேஷன் டெக்னாலஜி படிப்புகளை அளிக்கும் முன்னணி நிறுவனங்களில் ஒன்று. இதன் நோக்கம் உலக அளவில் உள்ள போட்டியை எதிர்கொள்வதாகும். இங்குள்ள சூழல், படைப்பாற்றலையும், புதுமைகளையும் ஊக்குவிப்பதாக உள்ளது.

சென்னையில் மட்டுமல்ல, பெங்களூர், புதுடெல்லி, மும்பை, கொல்கத்தா, காந்தி நகர், ஹைதராபாத் போன்ற இடங்களிலும் நிஃப்ட் இயங்குகிறது.

அகில இந்திய அளவில் இதற்காக நடத்தப்படும் பொது நுழைவுத் தேர்வில் வெற்றிபெற வேண்டும். பிறகு குழு விவாதம், நேர்முகத் தேர்வு போன்றவையும் உண்டு. இவற்றிற்கான பயிற்சிகளை

உடை, ஜவுளி, பின்னலாடை, காலணி இப்படிப் பலவற்றில் இந்த நிறுவனம் நடத்தும் கோர்ஸ்களின் பெயர்கள் இதோ.

1. Fashion & Apparel
2. Fashion and Textiles
3. Fashion & Lifestyle Accessories
4. Knitwear Products Technology
5. Footwear & Leather Products Technology
6. Fashion Technology





யும் இந்த மையத்தில் அளிக்கிறார்கள்.

பொதுவாக டிசம்பர் மாதத்தில் மாணவர் சேர்க்கைக்கான அறிவிப்பு வெளியாகும்.

ஆயத்த ஆடை (readymades), பின்னலாடை (knitted garments) ஏற்றுமதி (export garments) வர்த்தகத்தில் கொடி



ஒவ்வொன்றும் நான்கு வருட கோர்ஸ்.

ப்ளஸ்டூ-வில் தேர்ச்சி பெற்றவர்கள் மேற்படி கோர்ஸ்களில் சேரலாம். ஆனால், கணிதம், இயற்பியல், வேதியல் பாடங்களைப் படித்திருக்க வேண்டும்.

இரண்டாண்டுக்கான முதுநிலைப்படிப்புகளும் உண்டு.

கட்டிப் பறக்கும் திருப்பூரில், திருப்பூர் ஏற்றுமதியாளர்கள் சங்கம் ஒரு கல்லூரியைத் தோற்றுவித்தது. 'நிஃப்ட்-த நிட்வேர் ஃபேஷன்' என்ற இந்த நிறுவனம் பின்னலாடை பயிற்சி, தயாரிப்பு நுணுக்கத்தைக் கற்பிக்கிறது.

ஃபேஷன் டிசைனிங், மெர்ச்சென்டைசிங் துறைகள் சமீபத்தில் உருவாக்கப்பட்டவை. இப்படிப்பை வெற்றிகரமாக முடிப்பவர் ஃபேஷன் டிசைனர், ஆயத்த ஆடை விற்பனை ஒருங்கிணைப்பாளர் என்று ஆக முடியும். படைப்பாற்றல் உள்ளவர்கள் புதிய டிசைன்களை உருவாக்கி தனித் தன்மை பெறலாம்.

ஃபேஷன் அப்பேரல் மேனேஜ்மெண்ட், அப்பேரல் ஃபேஷன் டிசைன், அப்பேரல் மேனேஜ்மெண்ட், அப்பேரல் மார்க்கெட்டிங் என்று பலவித பிரிவுகளில் கோர்ஸ்கள் அறிமுகமாகி உள்ளன.

பெங்களூர் மற்றும் மும்பை நகரங்கள். ஃபேஷன் டெக்னாலஜியில் முத்திரை பதித்தவை.

பெங்களூர் எம்.ஜி. ரோடு அருகில் இருக்கும், வோக் இன்ஸ்டிட்டியூட் ஆஃப் ஃபேஷன் டெக்னாலஜி, நிறுவனம் மூன்று மற்றும் ஐந்து வருட கோர்ஸ்களை நடத்துகிறது.

---

**அடுத்து - பயோ இன்ஃபர்மேடிக்ஸ் - உயிரியல் தகவலியல் இரண்டின் அற்புதக் குழந்தை.**



## ரூ.500/- பரிசு பெறும் யூத் சிறுகதை முடிவு!

### மது என்ன சொன்னான்?

அப்பா, அம்மா வீடு திரும்பியதும், மது தெளிவாகக் கூறினான்.

''உங்க சண்டையில எங்களைக் கவனிக்க மாட்டேங்கிறீங்க. அதனால, பாட்டி, இனிமே நிரந்தரமா நம்ப வீட்லதான் இருக்கணும். இதுக்கு சம்மதிச்சா நீங்க சொல்ற கோர்ஸைப் படிப்பேன்.''

''சரி, நீ சொன்னபடி பாட்டி நம்ப வீட்டில் இருப்பாங்க, போதுமா?'' என்றபடி விருட்டென்று எழுந்து உள்ளே போனாள் ஜீவா.

மது, மெதுவாகப் பாட்டியின் காதில் ''நான் ஜெயிச்சுட்டேன் பாட்டி. எங்கக்கூட நீ இருக்கப் போறது எனக்கும், பானுவுக்கும் யானை பலம், இனிமேல் பார், இந்த ஐயா யார்னு?'' என்று வாஞ்சையுடன் பாட்டியின் தோளில் சாய்ந்தான்.

- கே.எஸ்.சுரன்,
பி.எஃப்.டெக்.
நேஷனல் இன்ஸ்டிட்டியூட் ஆஃப் ஃபேஷன் டெக்னாலஜி,
பெங்களூரு

## 'அரவணைப்பு' யூத் சிறுகதையில் தேவிபாலா எழுதிய ஒரிஜினல் முடிவு!

இரவு அனைவரும் கூடி விட்டார்கள்.

''நான் காலேஜுக்குப் போகலை.''

''போகாம? சோத்தைத் தின்னுட்டு வீட்ல தூங்கப் போறியா?''

''இருங்கம்மா. உங்க ரெண்டு பேருக்கும் நாங்க பாரமா இருக்கப் போறதில்லை; நாங்களும் பாட்டிகூட ஆஸ்ரமம் போகப் போறோம்.''

''எ... என்னது? தியானமும், சேவையும், ஆஸ்ரம வாழ்க்கையும் இந்த வயசுலயா? பைத்தியமாடா, உங்க ரெண்டு பேருக்கும்?''

''ஸாரிமா! அன்பை, அமைதியைத் தேடி நாங்க போறோம்!''

''உங்க ரெண்டு பேருக்கும் நாங்க என்னடா குறை வச்சோம்?''

''ஏஸியும், காரும்தான் சந்தோஷம்னு நீங்க நினைச்சா, அதெல்லாம் புற சந்தோஷங்கள்! மனசுனு ஒண்ணு இங்கே இருக்கு! அதை ஏன் யாரும் புரிஞ்சுக்கலை? பானு, துணிகளைப் பெட்டியில் எடுத்துவை!''

''மது'' என அம்மா அலறினாள்! அப்பாவின் கண்களில் அதிர்ச்சி!

பாட்டி குறுக்கிட்டாள்.

''பயப்படாதீங்க! குழந்தைங்க உணர்ச்சி வசப்பட்டு பேசறாங்க. உங்களை விட்டுப் பிரிஞ்சு வரமாட்டாங்க. படிப்பும், எதிர்காலமும் அவங்க விருப்பம்! ரொம்ப அழுத்திப் பிடிக்காம அவங்க போக்குல கொஞ்சம் விட்டுப் பிடிங்க. நீங்க அரவணைச்சா, குழந்தைங்க எப்பவும் உங்க கைக்குள்ளேதான்!''

இருவரும் இப்போது எதிர்க்கவும் இல்லை! சண்டை போடவும் இல்லை. உணரத் தொடங்கி விட்டார்கள்.

இனி மதுவுக்கும், பானுவுக்கும் அரவணைப்பு நிச்சயம் கிடைக்கும்.










| அ | | ஆ |
|---|---|---|
| 1. திருமணம் | - | அ) அமைச்சர் துரைமுருகன் |
| 2. இறங்கு முகம் | - | ஆ) காண்டினெண்டல் ஏர்லைன்ஸ் |
| | - | இ) சுருதி கமல்ஹாசன் |
| 3. அப்துல் கலாம் | - | ஈ) அர்ஜுனா விருது |
| 4. காம்பிர் | - | உ) நடிகை மீனா |
| 5. லக் | - | ஊ) அதிர்ஷ்டம் |





# பொருத்துங்க பார்ப்போம்!

**கடைசித் தேதி: 12.8.09**

சமீபத்திய செய்திகளை எந்த அளவுக்கு அறிந்திருக்கிறீர்கள்? இங்கே அ வில் தரப்பட்டுள்ள குறிப்புகளை ஆ வுடன் பொருத்தி-கல்லூரி அத்தாட்சியுடன் அனுப்புங்க.
மிகச் சரியானவற்றில் குலுக்கல் முறையில் தேர்வாகும் 5 வாசகர்களுக்கு தலா ரூ.100/- பரிசு

பெயர் :.............................................. வகுப்பு : .............................. ஈ மெயில்..............................................

கல்லூரி : ..............................................................................................................

வீட்டு முகவரி : ..............................................................................................................







**பூஞ்சாரல் பக்கங்கள்**



# இது

**சமீபகாலமாக ஈ மெயிலில் 'சத்யம்' நிறுவனம் சம்பந்தமான ஜோக்குகள், சிந்தனைகள், விமர்சனங்கள் நிறைய வந்து குவிகின்றன. அவற்றில் நேரெதிரான இரண்டைப் பார்க்கலாமா?**

மூன்று பேர், உலகப் புகழ் பெற்ற மேஜிக் நிபுணர்கள் ஹோட்டல் ஒன்றில், உட்கார்ந்து தங்களின் சாதனை குறித்துப் பெருமையாக பேசிக் கொண்டிருந்தார்கள்.

முதல் மேஜிக் நிபுணர், ''ஒரு மேஜிக் ஷோவின்போது, பார்வையாளராக வந்திருந்த ஒரு பெண்ணை மேடைக்கு அழைத்து, அனைவரது கண் முன்னாலும் மறைய வைத்தேன். அந்தப் பெண்ணின் கணவரும், குழந்தைகளும் அந்த அரங்கம் முழுக்கத் தேடியும், அவள் எங்கே போனாள் என்று கண்டுபிடிக்கமுடியவில்லை'' என்றார்.

இரண்டாவது மேஜிக் நிபுணர், ''என் நிகழ்ச்சியின்போது, நான் நிகழ்ச்சி நடந்த அரங்கத்தையே மறையச் செய்தேன். மொத்த ஆடியன்ஸும் தேடியும், அந்த அரங்கத்தைக் கண்டு பிடிக்க முடியவில்லை'' என்றார்.

மூன்றாவது மேஜிக் நிபுணர் ''நான் பாரிஸ் நகரத்தில் ஷோ நடத்தியபோது, ஆயிரக்கணக்கான மக்கள் முன்னிலையில் பிரபல ஐஃபில் கோபுரத்தையே மறையச் செய்தேன். பாரிஸ் நகர மக்கள் அனைவரும் அந்த டவர் எங்கே போனது என்று தேடியும் கண்டுபிடிக்க முடியவில்லை'' என்றார்.

அந்தச் சமயம் ஒரு புதிய மனிதர் அவர்களைக் கடந்து சென்றார். அவரைக் கவனித்த முதல் மேஜிக் நிபுணர் சொன்னார். ''இதென்ன பெரிய விஷயம். இதோ போகிறாரே அவரை மிஞ்ச நம்ப யாராலும் முடியாது. தன் கம்பெனியிலிருந்து ஏழாயிரம் கோடி ரூபாயை, நூறு கோடி இந்திய மக்கள் முன்னிலையில் மாயமாய் மறையச் செய்துவிட்டார். அவ்வளவு பணம் எங்கே போனது என்று யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. அவர் பெயர் ராமலிங்க ராஜு.''

இந்த ஈ மெயிலில் 'சத்யம்' நிறுவன ஊழியர் தனது அனுபவம் ஒன்றைப் பகிர்ந்து கொள்கிறார்.

''அண்மையில் அத்தனைப் பிரபலமில்லாத ஒரு சாஃப்வேர் கம்பெனியின் மூத்த அதிகாரியை சந்திக்கச் சென்றிருந்தேன். என்னை அறிமுகப்படுத்திக் கொண்டவுடன் அவர் கேட்ட முதல் கேள்வி, ''இனி




சத்யம் அம்போதானா?'' சுற்றி இருந்த மற்றவர்கள் கொல்லென்று சிரித்தபோது எனக்கு அவமானமாக இருந்தது. ஆனாலும், ''நானும் என்னைப் போன்ற ஆயிரக் கணக்கான சக இன்ஜினியர்களும் இருக்கும்போது, ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''ஊழல் செய்த உங்கள் சேர்மன் கைதாகி சிறையில் கம்பி எண்ணிக் கொண்டிருக்கிறார். கடும் நிதி நெருக்கடியில் இருக்கிறது கம்பெனி. இனி சத்யம் தலை நிமிர முடியாது'' என்றார். அவருக்கு சரியான பதிலடி தர விரும்பினேன். ''இந்தியா என ஒன்று இல்லாமல் போனால் நீங்கள் எங்கே போவீர்கள்?''

# சத்தியம்!

என்று கேட்டேன்.

''உளராதீங்க! இந்தியா ஒரு நாடு. அது எப்படி இல்லாமல் போகும்?'' என்றார்.

''நாடு என்பது சரி! நாடு என்பது என்ன? நிலம்? பொருளாதாரம்? பிரதம மந்திரி? ஜனாதிபதியா? அல்லது அதன் குடிமக்களா? நாளைக்கே பிரதமரோ, ஜனாதிபதியோ ராஜினாமா செய்தால் அல்லது மரணமடைந்தால் இந்தியா 'அம்போ' என்று சொல்லிவிட முடியுமா? அன்டார்டிகாவில் நிலமிருக்கு. அங்கே மக்கள் இருக்கிறார்களா? அரசாங்கம்தான் இருக்கிறதா? ஒரு நாட்டை வளப்படுத்துவதும், வாழ வைப்பதும் அங்குள்ள மக்கள் கையில்தான் இருக்கிறது.

''அது மட்டுமில்லை. ஒரு தனி மனிதனால் 'சத்யம்' என்ற பெரிய நிறுவனத்தை உருவாக்க முடியுமானால் 53000 அர்பணிப்பு உணர்வு கொண்ட ஊழியர்களால் அதனை மீண்டும் தலை நிமிரச் செய்ய முடியாதா? இன்னும் சொல்லப்போனால், சத்யத்தின் சீரழிவுக்குக் காரணமானவர்கள் யாரும் இப்போது அங்கே இல்லை. எனவே, சீக்கிரமாகவே 'சத்யம்' ஜெயிக்கும்!'' என்றேன்.

கிண்டல் செய்தவர் வாயடைத்துப் போனார்.

**- கௌதம்ராம், இரண்டாம் வருடம் பி.ஈ, நேஷனல் இன்ஸ்டிட்டியூட் ஆப் டெக்னாலஜி, திருச்சி**

## ஒரு நாளாவது!

**கா**ற்றே இன்று மட்டும் நீ வீசாதே
என்னவள் தீபம் ஏற்றுகிறாள்
இன்று ஒரு நாள் மட்டுமாவது ஒளிரட்டும்
என் கல்லறைக்கு முன்னால்...

**- திவ்யா, தியாகராசர் கலை கல்லூரி, மதுரை**






பூஞ்சாரல் பக்கங்கள்



- எஸ். ரேவதி,
முதலாம் ஆண்டு,
கணினி பயன்பாடு,
பயோனியர்
கலை அறிவியல் கல்லூரி,
கோயமுத்தூர் - 47



# இன்பச் சிறை!

சிறையில் இருந்தேன் பத்து மாதம் - இன்பச்
சிறையில் இருந்தேன்.
எனக்கென நான் உண்ணவில்லை - எனக்கும்
சேர்த்து நீ உண்டாய் நான் வாழ.

கண்ணால் என்னைப் பார்க்கும் முன் - உன்
கண்ணாய் என்னைப் பாதுகாத்தாய்
உடலில் வேதனை சுமந்துகொண்டு - உன்
உயிராய் என்னை வளர்த்தாய்

சிறையை விட்டு வெளிவரும்போது - என்னிடம்
பயங்கரமான அழுகைச் சத்தம்
ஆனால், உன் முகத்தில் மட்டும் - ஏதோ
சாதித்து விட்ட மலர்ச்சி

ஏனெனில்,
உனக்குத் தானே தெரியும் - அது
வேதனையின் வெளிப்பாடு அல்ல,
தன்னைப் பேணி வளர்த்த திருமுகத்தைக்
காணப் போகும் ஆவலென்று!



மாநில அளவில் பிரம்மாண்டமாய்...
கல்லூரிகளுக்கிடையே...
மீண்டும் பூஞ்சாரல் போட்டிகள்!

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்




இணைந்து வழங்கும்



# பூஞ்சாரல்

2009-2010

ஆட்டம்...பாட்டம்...கொண்டாட்டம்!

மங்கையர் மலர் வாசகர்
அனைவரும் வருக...

**நேரம் : காலை 10 மணி - மாலை 5 மணி**

**மதுரை**

மன்னர் திருமலை நாயக்கர் கலைக் கல்லூரி, பசுமலை, மதுரை-4.

தேதி : 20.08.09

**திண்டுக்கல்**

காவேரியம்மாள் கல்வியியல் கல்லூரி,
திருச்சி பிரதான சாலை, திண்டுக்கல்.

தேதி : 22.08.09

**காரைக்குடி**

அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி-3

தேதி : 28.08.09




பூஞ்சாரல் பக்கங்கள்

# சவாலே சமாளி!



**வா**ழ்க்கை ஒரு சவால் - அதனை சந்தியுங்கள்!
வாழ்க்கை ஒரு பரிசு - ஏற்றுக் கொள்ளுங்கள்!
வாழ்க்கை ஒரு வேதனை - சமாளியுங்கள்!
வாழ்க்கை ஒரு துன்பம் - தோற்கடியுங்கள்!
வாழ்க்கை ஒரு கடமை - நிறைவேற்றுங்கள்!
வாழ்க்கை ஒரு விளையாட்டு - விளையாடுங்கள்!
வாழ்க்கை ஒரு மாயை - விலக்கிப் பாருங்கள்!
வாழ்க்கை ஒரு பயணம் - முடித்து வையுங்கள்!
வாழ்க்கை ஒரு பாட்டு - இசைத்துப் பாருங்கள்!
வாழ்க்கை என்பது அன்பு - அனுபவித்துப் பாருங்கள்!
வாழ்க்கை என்பது அழகு - ஆராதனை செய்யுங்கள்!
வாழ்க்கை என்பது சோதனை - கடந்து பாருங்கள்!
வாழ்க்கை என்பது போராட்டம் - எதிர்த்து நில்லுங்கள்!
வாழ்க்கை என்பது புதிர் - விடுவித்து விடுங்கள்!
வாழ்க்கை என்பது லட்சியம் - அதை அடைந்துவிடுங்கள்!

- அ.அனிதா,
இரண்டாமாண்டு எம்.எஸ்ஸி.,
ஐ.டி. மற்றும் இ.காம்.,
விவேகானந்தா கல்லூரி,
அகஸ்தீஸ்வரம்



"உங்கக் கடை இட்லி பஞ்சு மாதிரி இருக்கே, எப்படி?"

"பருத்திக் கொட்டையைப் போட்டு மாவாட்டுவோம்!"

- வி.சௌம்யா, முதலாமாண்டு
பி.பி.எம்., ஸ்ரீமதி இந்திராகாந்தி மகளிர்
கல்லூரி, திருச்சி



''உப்பைக் குறையுங்கள்'' என்று எல்லா டாக்டர்களும் அறிவுரை சொல்கிறார்கள். சிலர் குறைக்க வேண்டிய உப்பு இதோ :

மாமியார் - சிடுசிடுப்பு
மருமகள் - கடுகடுப்பு
கணவன் - படபடப்பு
மனைவி - நச்சரிப்பு
டீன்ஏஜ் - பரபரப்பு
ஓல்டுஏஜ் - தொணதொணப்பு
அரசியல்வாதிகள் - ஆர்ப்பரிப்பு
தொண்டர்கள் - அர்ப்பணிப்பு
ஆசிரியர்கள் - கண்டிப்பு
மாணவர்கள் - ஏய்ப்பு
வக்கீல் - ஒத்திவைப்பு
டாக்டர் - புறக்கணிப்பு

குறைக்கத் தேவையில்லாத ஒரே உப்பு - 'சிரிப்பு'!

- அனுராதா ரமேஷ்,
பாண்டிச்சேரி



# சூப்பரப்பு!






# ஆட்டிப் படைப்பவருக்கு ஆடியிலே விழா!

ஆடிமாதம் என்றாலே அம்மனின் வழிபாடுதான் நினைவுக்கு வரும்!

ஆனால், தேனி மாவட்டம் குச்சனூரில் தனிக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சனீஸ்வர பகவானுக்கும், ஆடிமாத சனிக்கிழமைகளில் ஆடித் திருவிழா பிரம்மாண்டமாக நடைபெறுகிறது.

நிடத நாட்டு மன்னன் நளச் சக்கரவர்த்திக்கும், குலிங்க நாட்டு மன்னன் தினகரனுக்கும் ஊழ்வினைக் காரணமாக ஸ்ரீசனீஸ்வரன் துன்பம் கொடுத்தார். அப்பாவத்தைப் போக்கிக் கொள்ள சர்வேஸ்வரனின் கட்டளைப்படி 'விடத் தலை' மரத்தின் கீழ் ஆழ்தியானத்தில் அமர்ந்து ஸ்ரீசனீஸ்வரன் தமது குறையை போக்கிக் கொண்டாராம்.

இத்திருத்தலத்தில் பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரின் அம்சமாக ஸ்ரீசனீஸ்வரர் காட்சி அளிக்கிறார். சுயம்புவான குச்சனூரானுக்கு, திருநாமம், விபூதிப் பட்டை, ருத்ராட்ச மாலை ஆகியவை சாத்தப்பட்டு, ஹரியும் சிவனும் ஒன்றே என்கிற பேருண்மை பறைசாற்றப்படுகிறது.

குச்சனூரில் ஆடி முதல் சனிக்கிழமையன்று காக முத்திரைப் பொறித்த கொடி ஏற்றத்துடன் விழா தொடங்குகிறது. மூன்றாம் சனிக்கிழமை பகவானுக்குத் திருக்கல்யாணமும், அன்று இரவு சக்தி கரகம் எடுத்தல், மஞ்சனக் காப்பு சாற்றுதல் போன்ற விசேஷ நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன. ஞாயிற்றுக்கிழமை இரவு சர்வ அலங்காரத்தோடு பகவான், திருத்தேரில் நகர்வலம் வருவார்.

இங்கு 'எள் பொங்கல்' படைத்து வழிபடுவது விசேஷம்!

- மாலதி சந்திரசேகரன்
வேளச்சேரி

bar. Phone : 080-2639 0103. Box No.16059

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜம், 52 yrs, Deputy General Manager, Public Limited Company, Rs.60,000/- pm, திருமணம் ஆகாதவருக்கு, வேலைக்கு செல்லாத குடும்பபாங்கான 45 வயதுக்கு உட்பட்ட ஐயர் / ஐயங்கார் / மாத்வ பெண் தேவை. மூலம் நட்சத்திரம் பெண்களும் விண்ணப்பிக் கலாம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்க வும். எளிய திருமணம். பெட்டி எண் 16060

◆◆ Iyer Ashtasahasram Koundinya Poosam, 27/178, BE (MBA) Dy. Manager, Chennai, Forty thousand pm. Clean habbits, respectable family, seeks suitable bride, please send BHP. Phone : 044-2224 1671 / 2723 4104 Box No.16061

◆ ஹரிதச கோத்ரம், ஹஸ்தம் 40, பட்டப் படிப்பு படித்த மாதம் ரூ.35,000/- சம்பாதிக்கும் சொந்த பிசினஸ் செய்யும் நல்ல சிகப்பு நிறமுடைய தெலுங்கு வெலநாடு பிரிவைச் சார்ந்த வரனுக்கு மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். தமிழ் அய்யர் சம்மதம். பெண் வேலைக்கு செல்ல வேண்டிய அவசியமில்லை. எஸ்.லக்ஷ்மி, 90941 67221, 94451 63684, 98941 31962 பெட்டி எண் 16062.

◆ Vadama, 34/5'8", B.Tech, MS (USA) Software Professional, 20 LPA MNC, Bangalore, Innocent legal divorcee seeks family oriented, simple lively, smart good looking girl. Contact : k2k2kannan@gmail. com Box No.16063

◆◆ ஐயர் வடமாள், கௌசிகம், ஹஸ்தம் 5.10.1964, பி.எஸ்ஸி., 5'6", சென்னையில் MNCயில் சீனியர் எக்ஸிக்யூடிவாக நிரந்தர வேலை, வருமானம் 4.80 லட்சம் pa, எந்த கெட்ட பழக்கமும் இல்லாத பையனுக்கு தகுந்த ஏதாவது டிகிரி படித்த பெண் தேவை. போன் : 044 - 2377 2928, 98402 45196 பெட்டி எண் 16064

◆ ஐயர், பிரஹசரணம், காஸ்யபம், அவிட்டம், 33/170, பி.காம். சார்டர்ட், அக்கவுண்டன்ட் கம்பெனியில் ஆடிட் அஸிஸ்டெண்ட், ரூ.15,000/- மாத வருமானம் மற்றும் LIC, GIC ஏஜெண்டாக பணிபுரியும் சென்னையில் சொந்த Flat உள்ள பையனுக்கு 10th / +2 / graduate மணப்பெண் தேவை. எளிய திருமணம், எதிர்பார்ப்புகள் இல்லை. உட்பிரிவு சம்மதம். போன் : 044 - 6587 8923. பெட்டி எண் 16065

◆◆ வடமாள் ஆத்திரேய உத்திரட்டாதி 41/169 டிப்ளமோ (BCA) எக்ஸிக்யூடிவ் லிமிடெட், கம்பெனி மாத வருமானம் ரூ.16,000/- தகுந்த மணமகள் தேவை. உட்பிரிவு சம்மதம் பெண் ஜாதகத்தில் லக்னத்தில் அல்லது இரண்டில் ராகு அல்லது கேது இருக்க வேண்டும். பெட்டி எண் 16066

◆ Iyer, Telugu, Karnakommulu, Viswamitram, Uthradam 1979, 5'7" (MBA), employed in Bajaj Bikes Service Advisor 7,000/- pm Seeks good looking educated girl. Cell : 98413 38674, 98949 87005 Box No.16067

◆ Iyer Vadamal, Nythrubakasyabam, Poosam / 1980, 180 cm, M.Sc. (IT), working in WIPRO 60,000/- pm Seeks suitable bride above 5 feet and age difference 7 yrs acceptable. v_s_anuja@yahoo.co.in

Ph: 044 - 2972 2662, 99402 95147, Caste no bar. Box No.16069

◆ கன்னட மாத்வா பிராமணர், கௌசிக கோத்ரம், சதயம் 33 வயது (MA) சுயதொழில் (அச்சகம்) மாதம் ரூ.20,000/- வருமானம், உயரம் 6', படித்த பிராமண மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். எவ்வித எதிர்பார்ப்பும் இல்லை. தொடர்புக்கு போன் : 044-2680 0107 / 98846 11969. பெட்டி எண் 16070.

◆ தந்தை வாத்திமா - தாரகாயன கோத்ரம், தாயார் - வடகலை மூத்தமகன் - சதயம் 29, SSLC, ITI, வேலை தனியார் ஆட்டோமொபைல் டீலர் - எக்ஸிகியூடிவ் 7,500/- சொந்த வீடு உள்ளது. தகுந்த பிராமணப் பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். போன் : 2821 5170 / 99520 38110 பெட்டி எண் 16071

◆ Iyer, Brahacharanam, Haritha Kettai 3, B.Sc., PGDIT Asst. Project Manager, MNC Chennai 5.9.73 / 5'5" / 85,000 pm Seeks employed girl any brahmin contact : 044-2243 4026 Box No.16072

◆ Iyengar, Thenkalai, Bharathwajam, Moolam, IInd Padam, 30.10.1973, B.Sc., M.Com., V. fair, C.P.R. Environmental Education Centre, Central Government, Computer Operator, Rs.20,000/- pm Seeks Brahmin girl, Tel No.2474 6335, 94453 17353. Box No.16073

◆ Iyer, Vadamal, Kowsikam, Magam, 29 yrs, 178 cms, B.Sc., 4 lacs, working in MNC Bank, Clean Habits,

**செப்டெம்பர் 2009 மாத இதழுக்கான திருமண மலர் விளம்பரங்கள் எமது அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 5.8.2009**

Seeks good looking Vadamal bride, 98415 70399, 98415 77725. Box No.16074

◆◆ ஐயர், வடமாள், ஆத்ரேயம், பூரம், 31, 5.6", MCA, சாப்ட்வேர் இஞ்ஜினியர், பெங்களூர் ரூ.70,000/- மாத வருமானம் உள்ள பையனுக்கு தகுந்த மணப்பெண் தேவை. அய்யரில் உட்பிரிவுகள் சம்மதம். போன் : 04142-277791. செல் : 94426 58047. பெட்டி எண் 16075

◆◆ Unmarried, Vadama, Iyer, Vadulam, Uthiradam, 47, 5.10', fair B.Sc., COP, Materials Officer, Works for MNC at Mumbai Offshore, well settled in Chennai, Rs.60,000/- pm Seeks suitable graduate girl, send horoscope, Phone : 2448 3780. Box No.16076

◆ Iyer, Brahacharnam, Kashiba Gothram, Hastham, Sep 72, 5.6" BA, Tally Computer, 1,80,000 pa Working as Receptionist in International School Gujarat. Seeks a qualified Employed / unemployed girl. Ph : (0) 94265 20155 Box No.16077

◆ Brahacharanam, Srivatsam, Pooradam (1), Oct 79 / 165 / 40,000 pm BCS, MBA, Software Testing Engineer HCL Tech Own House Seeks employed Iyer bride - Sampathkumar - 044-2364 4816, 90031 91422 (or Panchapakesan 98403 30531) www.ssmatri.com ID 55188. Box No.16078

◆ Iyer, Bhwaj Hastham Jan 77 / 170 / 50,000 pm B.Sc., MCA, SWE, Bangalore, Seeks Graduate good looking, homely, brahmin bride, job optional, Balasubramanian - 0422-2447456, 95000 14345 (or Pancha pakesan 98403 30531) www.ssmatri.com ID 56615. Box No.16079

◆ Brahacharanam, Koundinyam, Chithrai, June 78 / 170 / 1,00,000 pm B.Tech, (IIT) Manager CTS Chennai. Mother only. V. fair, Seeks Iyer professional. Mrs.Ranganathan, 044-4215 0634. (or Panchapakesan 98403 30531) www.ssmatri.com ID 56640A. Box No.16080

◆ Vadamal, Koundinya, Uthiradam, April 80 / 172 / 60,000 pm, M.Sc., (S.W. Engg.) MNC Bangalore, Native Palghat settled in Coimbatore - Krishnamurthy - 0422-2608867, 93444 66778 (or Panchapakesan 98403 30531) www.ssmatri.com ID 54562. Box No.16081

◆ Vadamal, Bhwaj, Pooradam (2), Oct 78 / 180 / USD 10,000, BE, PGDIT Washington DC, USA, HIB, Seeks Slim, pleasing Iyer bride : Mrs.Padma - 094440 65221 (or Panchapakesan 98403 30531) www.ssmatri.com ID 56579. Box No.16082

◆ Vadamal, Kousigam, Bharani, June 82 / 172 / BBM (MBA), Affluent, Highly Reputed Hotel and Coffee Business in Coimbatore (including Exports) Native Palghat, seeks Good looking, smart Iyer bride from well-placed family. Jayakumar Iyer - 0422-2449895, 90470 35591 (or Panchapakesan 98403 30531)

www.ssmatri.com ID 56614. Box No.16083

◆ Vadamal, Srivatsam, Poorattadhi, March 77 / 174 / 70,000 pm, BE Own Business, Software, Chennai, Seeks graduate Iyer Bride. Job optional - Latha 98840 70370 (or Panchapakesan 98403 30531) www.ssmatri.com ID 56546. Box No.16084

◆ Vathimal, Bharadwaj, Avittam (3), June 80 / 172 / 1,40,000/- pm BE (C.S), employed as Yogamaster in Hongkong, own house in Chennai seeks Iyer bride - Lakshminarayanan - 044-2655 0575, 94440 55292 (or Panchapakesan 98403 30531) www.ssmatri.com ID 56662/80. Box No.16085

◆ ஆத்ரேயம், வடமாள், திருவோணம் MA, PGDCA, 38 / 5'7" / 30,000 சென்னையில் மத்திய அரசுப் பணி சொந்த வீடுள்ள ஒரே மகன் வரனுக்கு படித்த / படிக்காத / வேலை, வேலைக்குப் போகாத குடும்பப் பாங்கான மணமகள் தேவை. எதிர்பார்ப்புகள் இல்லை. உட்பிரிவு சம்மதம். Simple immediate marriage. Phone : 044-6564 1552. Box No.16086

◆ Iyer, Vadamal, Vathulam, Rohini (1), M.Com., April 79, Working Bank, Hearing Impaired, Handsome, Clean Habits, Seeks graduate, employed girl. Subsects no bar. Contact Ph : 044-2486 3886 / 94452 88616. Box No.16087

◆ Vadama, Gowthama, Rohini 26, B.Tech (REC) Recently joined State Bank of India probationary officer

(scale-I) Chennai (Transferable) seeks bride. Girls studying final year can also apply Box No.16088

◆ Iyer, Vadamal, Naidrupakasyapa, Punarpoosam - II. B.Com, 39/178/18,000. Indian Overseas Bank / Very handsome / fair / seeks employed / unemployed bride. Subsects no bar. Box No.16089.

◆ Vadakalai Kowsigam, Thiruvadirai, 38 / 160 cm, ITI (Fitter) Automobile Consultant, Rs.50,000/- pm Having own house & ground at Velacherry seeks +2 unemployed girls in the age group of 32-35, Need Apply Kalai no bar, Ph : 2243 2559, Mobile : 94446 15947. Box No.16090.

◆ Vadakalai Kowsigam, Utthiram B.Sc., MBA, 35 / 160 cm, Asst. Manager, MNC Having own house at Chennai, Rs.40,000/- pm Seeks unemployed graduate girls in the age group of 29 - 33, need apply kalai no bar. Ph : 2243 2559, Mobile : 94446 15947. Box No.16091

◆ தமிழ் ஐயர், பிரஹசரணம், கௌதம, அவிட்டம் 1, 17.10.1972, 5'.6", B.Tech. Rs.24,000/- படித்த பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். Smt. V.Padma, No.4, Mahadevan St., Nehru Nagar, Chrompet, Chennai-44, Ph : 2223 8578

◆ Iyer, Brahacharanam, Athreya, Ayilyam, 32/5.9', B.Com, MNC, Chennai, 3 lakhs pa. Seeks graduate fair girl, K.S. Venkataramani, 17/3, Shanmugam Street, Mathiazhagan Nagar, Saligramam, Chennai - 93. Ph : 044-2376 2597

◆ ஐயர், வடமாள், ஸ்ரீவத்சம், ஆயில்யம், அக்டோபர் 1975, 182 செ.மீ. சிவப்பு நிறம், MCA, தனியார் 4.2 lac pa. சொந்த வீடு, நல்ல வசதியுள்ள பையனுக்கு தகுந்த மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். எதிர்பார்ப்புகள் இல்லை. எஸ்.கிருஷ்ணமூர்த்தி, 32/40, 5வது மெயின் ரோடு, ஜவகர் நகர், சென்னை - 600 082. போன் : 044-2670 1644

◆ Alliance for bachelor Iyer boy Ashtasahasram / Baradwajam / Bharani, 37/162, B.Com. professional diploma in software technology and systems management, Team Leader, leading market research company, Hyderabad, Rs.50,000 pm contact with horoscope, S.Lakshmi, E-9, DOS (ISRO) Housing Colony, Vastrapur, Ahmedabad - 380 015, Tel : 079-2630 2271, Cell : 094263 58050

◆ Alliance for bachelor Iyer boy Ashtasahasram / Bharadwajam / Kirthigai, 40/162, BE, Masters in Construction Management, Senior Manager, Multinational Construction Company, Mumbai, Rs.80,000/- pm Contact with horoscope, B.Satyanarayana, E-9, DOS (ISRO) Housing Colony, Vastrapur, Ahmedabad - 380 015, Tel : 079-2630 2271, Cell : 094263 58050

◆◆ Iyer, Vadamal, Gowthamam, Avittam, 32, 5'10" BE, Sr. Engineer, HP (USA) Seeks graduate bride with Computer Knowledge 044-2233 3571 / 98406 63872. S.Jagadeesan, B1, Gokulam Flats,

Durairaj Lane, Pazhavanthangal, Chennai - 600 114.

◆ Iyer, Vadamal, Gowthama, Uthiradam - 1, November 1983 / 163 cms / B.Sc., MBA / Rs.15,000/- Capegemini Business Services, Chennai owns house at Chromepet - seeks graduate girl employed / unemployed - subsect no bar - Contact R.Vijayalakshmi, 11/4, Tank Street, Lakshmipuram, Chromepet, Chennai - 44. Mobile : 98400 64032

◆ Iyer, Astasahasram, Khasiba, Anusham, 38, 5.7, 25,000/- pm, M.A. (Economics), Working as LIC Consultant, seeks family girl. R.Nagarajan, A2 Rohini Apartments, 124, Moovarasanpet Main Road, Madipakkam, Chennai - 600 091. Ph : 4357 9197.

**◆◆ Iyer, Vadamal, Srivatsam, Moolam 39 years, 165 cm (BA) Business, 15,000/- pm seeks employed / unemployed girl. subsect no bar. S.Lakshmi Narayanan, 6/26, Second Bharathiar Street (South), Palavanthangal, Chennai - 600 114. Cell: 99402 66465.**

◆ குருக்கள், காசிபம், சுவாதி (துலா ராசி) / 27 / 5.11" M.Sc.IT Computer Animation and Graphics - மாத வருமானம் ரூ.18,000/- நல்ல உடல்வாகு கொண்ட வரனுக்கு குருக்கள் / ஐயர் இனத்தில் பெண் தேவை. Phone : 98849 64159. G.முத்துக்குமரன், 4A, அட்சயா அப்பார்ட்மெண்ட், 3rd திருக்குறள் தெரு, ஸ்டேட் பாங்க் காலனி அருகில், சிட்லபாக்கம், சென்னை - 64.

◆ Iyer Vadama, Srivatsam, Rohini 1963/175, Ph.D (Maths) Associate Professor Engineering College Chennai Seeking good looking unmarried girl Contact with horoscope N.Santhanagopalan, F2 Thangam Flat, 66/46, Alagarperumal Koil Street, Vadapalani, Chennai - 26. Cell : 94457 17069.

◆◆ ஐயர் பிரஹசரணம் காசியபம் கேட்டை 11.02.1980 / 170 cm / BE, MNC சென்னையில் வேலை. தகுந்த பட்டதாரி மணமகள் தேவை. K.V.வெங்கடாசலம், 12 மின் நகர், வஞ்சியாபுரம் பிரிவு, பொள்ளாச்சி (04259-229004) செல் : 94866 36373)

◆ ஐயர், வடமாள், வாதுல்ய, சுவாதி 25, 5'9", BBA, தனியார், 12,000/- pm, தகுந்த +2 / டிகிரி படித்த மணமகள் தேவை. உட்பிரிவு சம்மதம், V.ராமகிருஷ்ணன், 203 / 121 காசு கடைத் தெரு, சிதம்பரம். செல் : 93627 54744, 04144-320280.

◆◆ Iyer Brahacharanam, Kasyapa Vishakam-4, 35 / 173 / B.Com. / 40,000 pm, Finance exec in MNC, fair, own house in Bangalore seeks suitable bride ph : 080-23472071, N.Balasubramaniam, 220 'B', I'N' block, Rajaji Nagar, Bangalore - 10.

◆◆ குறிமிட்ட திருமண விளம்பரங்களை மங்கையர் மலரின் இணைய தளத்திலும் காணலாம். இதுடன் சேர்த்து இணையதளத்திலும் வெளியிட கூடுதல் கட்டணம் ரூ. 100/- மட்டுமே

**Our website : www.mangayarmalaronline.com**

## மணமகன் தேவை

◆◆ Telugu Smartha Brahmin Girl, 33, 172 cm, Anusham, Harithasa, Central Govt. Job, Chennai, Rs.20,000 pm Seeks employed South Indian Brahmin groom below 38, girl is a legal divorcee on mutual consent within six months of marriage no encumbrances. Not particular about gothram. Register marriage preferred. Box No.20395

◆ Tamil Iyer, Vathiama, Srivastham, Moolam 4th patham, Sudha Jathagam, BE (EEE) Software, MNC, 23 years 5.5' fair complexion, seeks suitable groom TM 1182696 / sai san G139817 / 86, Ph : 0431-2768754 / Mob : 99402 64796. Box No.20396

◆ Tamil Brahmin groom Hyderabad based or willing relocate there between 56 and 58 years age, well employed in Government, Bank, LIC etc with clean habits for Tamil Iyer lady aged 56 central govt. officer, issueless divorcee, only daughter. No brother sister. Marriage is for mutual companionship in old age. Issueless widower. Divorcee accptable. Groom willing to stay with bride's aged parents in their house to look after them also preferred. Horoscope, biodata family details Box No.20397

◆◆ Tamil Iyer, Brahacharanam, Kowsikam, Swathi, (Thulam), Feb 1968, 158 cms, Govt. teacher, Chennai. Rs.15,000/- pm Legal Divorcee with no issue, seeks iyer, widower with / without issue, educated and employed. contact V.Krishnakumar - 04322-228293, 98415 66585. Box No.20398

◆◆ சிவாச்சாரியார் / குருக்கள், கௌசிகம், அனுஷம், 1986, 175 செ.மீ. B.Tech., SWE, MNC, சென்னை சமபடிப்பு நல்ல வேலையிலுள்ள மணமகன் தேவை. போன் : 044-2743 1838. 94436 39457, 94453 59550. ece.sandhya @gmail.com Box No.20399

◆ Wanted Balija Naidu (kapu) P.G. Doctor for very beautiful saint doctor girl age 26 colour very fair belongs to decent family. Contact : (O) 9848242631, 9346873771. Box No.20400

◆ முத்துராஜா நாயுடு. ரேவதி - 4, 14.11.1986. 5 அடி - BE (E.C.E.) ஸ்கோப் இன்டர்நேஷனலில் அதிகாரியாக பணிபுரியும், குடும்பபாங்கான பெண்ணுக்கு அதற்கு இணையான படிப்புள்ள, சாப்ட்வேர் இஞ்சினியர் மற்றும், மார்க்கெட்டிங் துறையில் பணிபுரியும் தகுந்த மணமகன் தேவை. நாயுடுவில் உட்பிரிவுகள் சம்மதம். போன் : 9884482115, 9380899648. பெட்டி எண் 20401

◆ Intercaste parentage girl. Father Pillai, Mother Brahmin, Chitirai, 26/162 cm, fair, M.Sc. Oncology, Global programme UK, decent salary seeks suitable Vegetarian groom in UK. Cell : 98406 23995, Email : renu_maniam@hotmail.co.uk Cell : 00447933331737 (UK). Box No.20402

◆ Tamil Iyer, Sankethi, Naithrupakashyapa Avittam, Kumbam 1985, 5.1' CA Final appeared, seeks well employed, Chennai settled CA grooms / engineers aged 26 to 28 with stars. Thiruwathirai, Pusam, Maham, Moolam, Swathi, Uthradam. Contact : R.H.Subramanian : 2446 4361. Box No.20403

◆◆ Iyer, Ashtasahasram, padarayana, punnarpoosam 3, 30 / 160, MCA, wheatish, software engineer MNC Chennai Rs.58,000/- pm Seeks suitable bridegroom Chennai / Bangalore based professionals Contact 98405 89912 Box No.20404

◆ Vadamal, Koundinyam, Krithigai (3), July 84 / 155 / V. fair, BE, Seeks Vadamal, Brahacharanam professional well-to-do family (Min 50,000/- pm) Chennai groom only-98403 30531. Email : niran_kesan@yahoo.com. web : ssmatri.com ID 81333. Box No.20405

◆ Vadamal, Bharadwaj, Rohini, Dec 82 / 160 / 30,000 BE, SWE, MNC Chennai Seeks Vadamal, Brahacharanam professional Chennai groom only. Ramachandran 044-2471 7866 (or Panchapakesan 98403 30531) www.ssmatri. com ID 80700. Box No.20406

◆ Vadamal, Bhwaj, Ayilyam (3), May 86 / 163 / 20,000 B.Tech SWE Chennai Slim very fair. Seeks Iyer professional Chennai / Bangalore Ramanathan - 044-2258 2342. 98940 56349 (or Panchapakesan 98403 30531) Web : www.ssmatri.com ID 81674. Box No.20407

◆ Brahacharanam, Sankrithi, Pooradam (4), Nov. 85 / 166 / MCA, TCS, Seeks Vadamal, Brahacharanam professional India / Abroad. Ramkumar 099944 12152 (or Panchapakesan 98403 30531) www.ssmatri.com ID 80486. Box No.20408

◆ Vadamal, Athreyam, Swathi (3), June 83 / 156 / 40,000/- pm, BE (CS) TCS, Bangalore seeks Vadamal, Brahacharanam professional India / Abroad. Ganesan - 04344 - 240978, 094439 22201 (or Panchapakesan 98403 30531) www.ssmatri.com ID 81695. Box No.20409

◆ Vadamal Haritham, Kettai (3), Dec 79 / 165 / 35,000/- B.Sc., MBBS, Central Govt. Dispensary Mysore (Job Transferable) Seeks Iyer Doctor Chennai / Bangalore. Sitaraman - 99525 92212 (or Panchapakesan 98403 30531) www.ssmatri.com ID 81493. Box No.20410

◆ ஐயர் வடமாள், வாதுல்ய, அவிட்டம் 22, 5'2", D.T.Ed., B.A., B.Ed., அரசு பணியிலுள்ள 30 வயதிற்குற்பட்ட மணமகன் தேவை. உட்பிரிவு சம்மதம். திருமதி ராஜேஸ்வரி, 114/142, மகாதான தெரு, திருவிடை மருதூர் - 612 104. செல் : 98434 93001.

◆◆ செங்குந்த முதலியார் சிவகோத்திரம் தனுசராசி மூலம் 4ம் பாதம், 29 / 168 cm / MFM, பெங்களூர் மல்டி நேஷனல் கம்பெனியில் வேலை, சம்பளம் Rs.15,000/- மணப்பெண்ணிற்கு இதே இனத்தை சேர்ந்த நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. V.கல்யாண சுந்தரம், 46/1, டெலிபோன் நகர், ஈரோடு - 2. போன் : 0424-2280516, செல் : 93456 47715

# கல்யாணத்துக்கு வந்துடாதீங்க!





புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தமது மகள் திருமண பத்திரிகையை கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணனுக்கு அனுப்பினார். அதில் ஒரு வித்தியாசமான கடிதத்தையும் இணைத்திருந்தார்.

''எனது மூத்த மகள் சரஸ்வதியின் திருமணப் பத்திரிகையை அனுப்பியுள்ளேன். தங்களுக்கு ஓய்வு இருக்கிறது என்று கல்யாணத்துக்கு வந்துவிடாதீர்கள்.

''திருமணம் ஒரு சிறிய கிராமத்தில் நடைபெறுகிறது. அங்கு நீங்கள் வந்தால், சுற்று வட்டார மக்கள் கூடிவிடுவார்கள். அவர்கள் அத்தனை பேருக்கும் வேண்டிய வசதிகளை, என்னால் செய்து கொடுக்க இயலாது. கூட்டத்தைச் சமாளிப்பது கல்யாண நேரத்தில் சிரமமாகிவிடும்.''

எனவே, தயவு செய்து தங்களது வாழ்த்தை மட்டும் அனுப்பி வைத்தால் நான் மகிழ்ச்சி அடைவேன்'' என்று அக்கடிதத்தில் குறிப்பிட்டு இருந்தார். கலைவாணரும் பாரதிதாசன் சொற்படியே நடந்தாராம்!

**- ஜெயலக்ஷ்மி கோபாலன், சென்னை**

---

## இரண்டுமே ஒன்னுதான்!



காதலிக்கும் பெண்களும்
சிகரெட்டும் ஒன்றுதான்;
இரண்டுமே உதட்டோடு
உறவாடிவிட்டு,
இதயத்தைப் புண்ணாக்கிவிடும்!

**- என்.காளிதாஸ், சிதம்பரம்**



# J.D. மேரேஜ் கேட்ரிங் சர்விஸஸ்

Plot No.17, E.B. காலனி, 3வது தெரு, ஆதம்பாக்கம்,
சென்னை - 600 088.

**J.துரை 9840076035, 22420232, 22530164**

பார்ப்பவர்கள் வியக்கும் வண்ணம், கல்யாணம் முதல் கட்டுச்சாதம் வரையில்,
உங்கள் பணவசதிக்கு தகுந்த முறையில், அனைத்தையும் செய்து தரும்
ஒரே ஸ்தாபனம். கல்யாணம் மற்றும் அனைத்து சுபகாரியங்களுக்கும் காலை டிபன்,
காப்பி, சாப்பாடு, டின்னர், சீர்பட்சணம் ஆகியவைகள் ஆர்டரின் பேரில்
உங்கள் இல்லம் வந்து சர்வீஸ் செய்து தரப்படும்.



## ஸ்ரீகுருராகவேந்திரா கல்யாண மண்டபம்

சுவாமி நகர், உள்ளகரம், சென்னை-91.

**Ph : 22420232 / 22530164 / 9840076035**

600 பேர் அமரக்கூடிய ஹால்
200 பேர் அமர்ந்து சாப்பிடும் டைனிங் ஹால்
12 ரூம்கள் 5A/c ரூம்கள்

ஆகஸ்ட் 23,24,26 செப்டம்பர் 2,3,6,10,14
ஆகிய தேதிகளில் புக்கிங் செய்யப்பட்டு உள்ளது.

## ஸ்ரீ ராகவேந்திரா மினி ஹால் A/c.

200 ரேடியல் சாலை (பெட்ரோல் பங்க் அருகில்) கீழ்கட்டளை,
**சென்னை-117. 22420232, 9840076035**

200 பேர் அமரக்கூடிய ஹால்
100 பேர் உணவருந்த தக்க டைனிங் ஹால்
5 ரூம் - கார் பார்க்கிங் வசதியுடன் சேர்த்து
24 மணி நேரத்திற்குRs. 12000/- மட்டும்
12 மணி நேரத்திற்கும்Rs. 6000/- மட்டும்

## ஸ்ரீகுருராகவேந்திரா கல்யாண மஹால்

11, பாக சாலைத் தெரு, (காமாட்சி ஜோசியர் தெரு, சக்கரை படித்துறை Bus Stop)
**கும்பகோணம் 22530164, 9840076035**

1000 பேர் அமர வசதியான கல்யாண கூடம்
300 பேர் அமர்ந்து உணவருந்த வசதியான டைனிங் ஹால்
10 ரூம்கள் - 100 கார்கள் நிறுத்தக் கூடிய பார்க்கிங் பிளேஸ்
மிகவும் குறைந்த வாடகையில், அதிக வசதிகள் உள்ள மண்டபம்.
கல்யாணம் மற்றும் Tourist வருபவர்களுக்கு
ரூம்கள், ஹால் வாடகைக்கு கிடைக்கும்

## ஸ்ரீகுரு ராகவேந்திரா சீனியர் சிடிஸன்ஸ் ஹோம்

Plot No. 1, சுவாமி நகர், உள்ளகரம், சென்னை-91.

**9840076035, 22420232, 22530164**



அனைத்து வசதியுடன் கூடிய தனிரூம் வாஷ் பேசின் Western டாய்லெட், கட்டில், மினரல் வாட்டர்,
காலை காபி, 9.30 மணிக்கு சாப்பாடு,மாலை 4.00 மணிக்கு டிபன் இரவு 7.00 மணிக்கு டின்னர்.
கடந்த நான்கு ஆண்டுகளாக நல்ல முறையில் செயல்பட்டு ஐந்தாவது ஆண்டில், அடியெடுத்து வைத்துள்ளது.

கைராசி, நம்பிக்கை, நாணயம் தானே எங்கள் தாரக மந்திரம்!

# J.D. GROUP

Ph : 9840076035, 22420232, 22530164

Prop. J.D. DURAI

www.jddurai.com, E-mail : mani0517@gmail.com

என்றும் உங்களுடன்

ஆகஸ்ட் 2009
இதழுடன் இணைப்பு

# மங்கையர் மலர்

ஆடி வெள்ளிக்கிழமையன்று வீட்டிலோ, கோயிலிலோ அம்பாளை வணங்கி மா விளக்கு ஏற்றலாம். இதனால், குடும்பம் பல சம்பத்துக்களைப் பெற்று, செழிப்பாக இருக்கும்.

– ஆர். சங்கீதா ராணி,
மணப்பாறை



## வாசகியர் கைவண்ணத்தில்

# ஆடி அமர்க்களம் 64!



**கா**ர்மேகக் கண்ணன் தன் வீட்டுக்கு வந்து வெண்ணெயைத் திருடி உண்ண வேண்டும் என்று கோகுலத்தில் வசிக்கும் ஒவ்வொரு கோபிகையும் நினைப்பாளாம். கொட்டிய தயிரில் காலை வைத்துக் கண்ணன் நடந்த அடிச்சுவட்டின் தாத்பர்யமாகவே கிருஷ்ண ஜெயந்தி அன்று கண்ணனின் பாதச் சுவடுகள் மாக்கோலமாகப் போடப்படுகிறது.

**- ஆர். மீனாட்சி, திருநெல்வேலி**

ஆடி பதினெட்டு அன்று, ஸ்ரீரங்கநாதர், காவிரி அன்னைக்குச் சீர் வரிசைகள் அளிக்கும் நிகழ்ச்சி நடக்கும். இது ஸ்ரீரங்கம் 'அம்மா மண்டபம்' படித்துறையில் ஒவ்வொரு வருடமும் நடைபெறுகிறது.

- லக்ஷ்மிதிலம்,
சென்னை



# ஆடி அமர்க்களம் 64!



ஆடி அமாவாசையன்று மாத்வ வகுப்பினர் 'கண்டன பூஜை' என்கிற 'பதி பூஜை' செய்கிறார்கள். பண்டிகை தினத்தன்று களிமண்ணால் பார்வதி-பரமேஸ்வரர், லக்ஷ்மி - மகாவிஷ்ணு போல சிறு தூண்கள் செய்து, செம்மண் பூசி, பலவித அலங்காரங்கள், பலவகையான நைவேத்யங்களோடு மிக விமரிசையாகக் கொண்டாடுகிறார்கள். பூஜையில் மஞ்சள் கயிறு வைத்துக் கையில் கட்டிக்கொண்டு 'கரத கடுபு' (பொரித்த கொழுக்கட்டை) நைவேத்யம் செய்வார்கள்.

- ஆர். ராஜலக்ஷ்மி, ஹுப்ளி

- எம்.லீலா, மந்தைவெளி

ஆடிப்பூரத்தில் விரதமிருந்து சித்தர்கள் பீடம், ஞானிகள் ஆலயங்களுக்குச் சென்று வந்தால், நினைத்த காரியம் நிறைவேறும். புதிய தொழில்கள் தொடங்கவும், நல்ல விஷயங்களுக்குப் பேச்சுவார்த்தை தொடங்கவும் ஆடிப்பூரம் சிறந்த நாளாகும்.

**- எஸ். விஜயா சீனிவாசன், திருச்சி**



# ஆடி அமர்க்களம் 64!



இல்லறத்தில் அடியெடுத்து வைக்கும் புதுமணப் பெண்கள், ஆடி மாதத்தில் நடைபெறும் விளக்குப் பூஜையில் கலந்து கொள்ள வேண்டும். புகுந்த வீட்டில் அவரவர் சமூகத்தினர் நடத்தும் விளக்குப் பூஜையிலோ, பொது இடங்களில் செய்யும் விளக்குப் பூஜையிலோ ஆடி மாதத்தில் தவறாது கலந்து கொள்வதால் மன நிம்மதி, மங்கள வாழ்வு கிடைக்கும்.

**- ஆர்.கே.சொர்ணாம்பிகை,**
**சேலம்**

**கே**ரள நாட்டில், ஆடி மாதத்தில், 'பகவதி சேவை' என்னும் பண்டிகையை வெகு விமரிசையாகக் கொண்டாடுவார்கள். வீடுகளில் நெய் விளக்கு ஏற்றி, பகவதி அம்மன் படம் அமைந்திருக்கும் திசைவரை அழகிய மலர்களால், அலங்கரித்து, கோதுமை நெய் பாயசம் செய்து நைவேத்யம் செய்வார்கள்.

– **கீதா வெங்கடேஸ்வரன், சிட்லபாக்கம்**



# ஆடி அமர்க்களம் 64!



ஆடி மாதம் வந்துவிட்டால் பண்டிகைகளுக்குக் குறைவிருக்காது. அந்நாட்களில் வாழை இலையில் சாப்பிட்டு வந்தால், உஷ்ண சம்பந்தமான நோய்கள், ஜீரணக் கோளாறுகள் விலக்கப்படும். தீட்சண்ய பார்வையையும், கருமையான முடியையும் உண்டாக்க வல்ல மருத்துவ குணம் வாழை இலைக்கு உண்டு

- சியாமளா ராஜகோபால்,
சென்னை

**ஸ்ரீ** ஆண்டாள் அவதரித்த திருநாளான ஆடிப்பூரம் தினத்தன்று, ஸ்ரீவில்லிப்புத்தூரே விழாக்கோலம் கொண்டிருக்கும். 'ஆடிப்பூரம்' தேரோட்டம், நான்கு ரத வீதிகளையும் சுற்றி வரும் காட்சியைக் காண இரண்டு கண்கள் போதாது.

– டி.என்.செல்வி,
தளவாய்புரம்



# ஆடி அமர்க்களம் 64!




**ஆ**டி செவ்வாய் அன்று ஆண்களுக்கு 'நோ என்ட்ரி' சொல்லும் 'ஔவையார் நோன்பு' நெல்லை, கன்னியாகுமரி மாவட்டங்களில் கொண்டாடப்படுகிறது. ஔவையார் அம்மன் இருக்கும் வீடுகளில், சூரியன் அஸ்தமித்ததும் ஆண்கள் பார்வையில் படாமல் கொழுக் கட்டை செய்து, பூஜை முடித்து பிரசாதத்தை உண்ண வேண்டும். காலை உப்புக்காரன் வருவதற்குள், சாமி கும்பிட்ட சுவடே தெரியாமல் சுத்தம் செய்து விட வேண்டும்.

**- என்.கோமதி, நெல்லை**

சிவத்தொண்டாற்றி சைவத்தைத் தழைக்கச் செய்த நாயன்மார்களில், சுந்தரர் பெருமானும் ஒருவர். இவர் விழுப்புரம் மாவட்டம் நாவலூரில், ஆடி மாதம் சுவாதி நட்சத்திரத்தில் அவதரித்தார். அந்நாள், அவ்வூரில் சிறப்பு பூஜைகளுடனும், வழிபாடுகளுடனும் கொண்டாடப்படுகிறது.

– எஸ்.சங்கர், திருப்பரங்குன்றம்



# ஆடி அமர்க்களம் 64!



கிருஷ்ண ஜெயந்தியன்று கிருஷ்ணன் பாதத்தை வரைவோம். எட்டு என்பதுபோல் வரைந்து, மேலே விரல்களுக்கு ஐந்து புள்ளிகள் வைப்போம். இது 'ஓம் நமோ நாராயணாய' என்கிற எட்டெழுத்து மந்திரத்தையும், 'ஓம் நமசிவாய' என்கிற பஞ்சாட்சர மந்திரத்தையும் குறிப்பதாக உபன்யாசத்தில் ஒரு பெரியவர் கூறக் கேட்டேன்.

**- ஜானகி ரங்கநாதன், மைலாப்பூர்**

ஆடிப்பூரம் அன்று வைணவத் திருக்கோயில்களில் கோதை நாச்சியார், அவதார நாளைச் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இதேப்போல் சிவன் கோயில்களில் அம்பிகையின் வளைகாப்பு விழாவையும் விமரிசையாகக் கொண்டாடுகிறார்கள்.

– கீதா நாகராஜன்,
மைலாப்பூர்



# ஆடி அமர்க்களம் 64!



ஆடி வெள்ளிக்கிழமைகளில் சிலர் பாம்பு புற்றுக்குப் பாலூற்றும் வழக்கம் கொண்டிருப்பார்கள். புற்று இல்லாத இடங்களில், கோயிலில் இருக்கும் நாகர் சிலைகளின் மேல் வாழைப் பழத்தை உரித்து வைத்து, அதன் மேல் பசும்பாலை அபிஷேகம் செய்து, அரிசி, வெல்லம், வெற்றிலைப் பாக்கு, தேங்காய் வைத்து நைவேத்யம் செய்யலாம்.

- வி.சி.வஸந்தா, மேற்கு தாம்பரம்

ஆடி மாதத்தில் வரும் ஆஷாட ஏகாதசி அன்று, பண்டரிபுரம் விட்டல் மந்திரிலிருந்து ஸ்ரீ ஞானேஸ்வர மாவுலியின் பாதுகைகளைச் சுமந்துகொண்டு பல்லக்கு பவனிவரும். மேலும், தேஹீவிலிருந்து ஸ்ரீ துக்காராம் பல்லக்கும், இதைத் தவிர பல இடங்களிலிருந்து முப்பதுக்கும் மேற்பட்ட பல்லக்குகளும், பண்டரிபுரத்தில் பவனி வருவது கண் கொள்ளாக் காட்சியாகும்.

- எஸ். மீனாகுமாரி, சென்னை



# ஆடி அமர்க்களம் 64!



எட்டயபுரத்தின் பக்கத்தில் இருக்கும் வெக்காளி அம்மனுக்கு, ஆடி பதினெட்டாம் பெருக்கன்று வளைகாப்பு நிகழ்வு வெகு விமரிசையாக நடைபெறும். அம்மனின் வளையல் பிரசாதத்தை, குழந்தை பாக்கியம் வேண்டுபவர்கள் அணிந்து கொண்டால், அடுத்த பதினெட்டாம் பெருக்கில் அவர்கள் வீட்டில் நிச்சயம் வளைகாப்பு நடக்கும்.

**– டி.எஸ்.சீதாசங்கர், தளவாய்புரம்**

ஆடிப்பூர விழாவில், ஸ்ரீவில்லிபுத்தூரில் ஐந்தாம் நாள் பஞ்ச கருட சேவை சிறப்பாக இருக்கும். ஏழாம் நாளன்று ஸ்ரீரங்கமன்னார், ஸ்ரீ ஆண்டாளின் மடி மீது தலை வைத்துப் படுத்திருக்கும் சயனக் காட்சியைத் தரிசனம் செய்தால், மாங்கல்ய பாக்கியம் கிட்டும்.

– வி. சுஜாதா, திருச்சிராப்பள்ளி





ஆடி மாதம் உத்திரட்டாதி நட்சத்திரமும் பௌர்ணமியும் கூடிய நன்னாளில், நள்ளிரவில், தபசில் ஆழ்ந்திருந்தாள் உமையவள். அவளுக்கு ஒரு பாதி சங்கரனாகவும், மறுபாதி நாராயணனாகவும் காட்சி அளித்த இடம் சங்கரன் கோயில். இங்குள்ள ஸ்ரீசங்கர நாராயணன் - கோமதி அம்மன் திருக்கோயிலில் நடக்கும் 'ஆடித்தபசு' விழா பிரசித்தமாகும்.

**- என்.ஆர்.நாயகி, கோவை**

**கொ**ங்கு நாட்டுப் பெண்கள், ஆடிப் பதினெட்டு அன்று 'கன்னிமார் படையல் பூஜை' என்று சிறப்பாகக் கொண்டாடுவார்கள். இதற்கென்றே விற்கப்படும் பொருள்களை வைத்து ஏழு கூழாங்கற்களை சப்த கன்னிகையாக அலங்கரித்து ஆவாகனம் செய்து, பொங்கல் நைவேத்யத்துடன் பூஜை செய்வார்கள்.

**- ஜெயா தேவராஜ், கோவை**



# ஆடி அமர்க்களம் 64!



## ஆடிப் பழமொழிகள்

* ஆடிக் காற்றில் அம்மியே பறக்கும்பொழுது இலவம் பஞ்சுக்கு என்ன சேதி?
* ஆடிக்கொரு தடவை அமாவாசைக்கு ஒரு தடவையா?
* ஆடிக்கு அழைக்காத மாமியாரைத் தேடிப் பிடித்து அடி.
* ஆடி விதை தேடிப் போடு.
* ஆடி அமாவாசையில் மழை பெய்தால் அடுத்த அமாவாசை வரை மழை இல்லை.

**– எஸ்.விஜயலக்ஷ்மி, ஆதம்பாக்கம்.**

**சா**தாரண நாளில் சமுத்திர ஸ்நானம் செய்தாலே புண்ணியம் உண்டு. ஆடி அமாவாசையன்று செய்தால் புண்ணியம் பல மடங்கு பெருகும். அன்றைய தினம் இராமேஸ்வரத்தில் சமுத்திர ஸ்நானம் செய்தால் பல்லாயிரம் கோடி மடங்கு விசேஷமானது. புண்ணியமானது.

– டி. பூபதிராவ், காஞ்சிபுரம்





ஆடி மாதத்தில் வரும் 'குரு பூர்ணிமா' தினத்தை 'வியாச பௌர்ணமி' என்றும் சொல்வதுண்டு. வேதாந்த சூத்திரங்களை நமக்கு வகுத்துத் தந்த வேத வியாசரைப் பூஜிக்கும் நாள். சாதுர்மாஸ்ய விரதமும் அன்றுதான் தொடங்குகிறது.

– எஸ். உஷாராணி,
கோயமுத்தூர்

**கொ**ட்டை நீக்கிய பூம்பஞ்சினை, வட்டமாக இருமுனைகளையும் இணைத்து 12, 25 எண்ணிக்கைகளில் பூவாகச் செய்து, நடுவில் குங்குமப் பொட்டு வைக்கவும். 'கஜ வஸ்திரம்' என்று கூறப்படும் இந்தப் பருத்தி ஆடையை ஆடி மாதத்தில் அம்மனுக்குச் சாத்த, வீட்டில் அணிமணிகள் அக்ஷயமாகப் பெருகும்.

– **லக்ஷ்மி சீனிவாசன், டிரஸ்ட்புரம்**



# ஆடி அமர்க்களம் 64!



**சை**வ சமயக் குரவர்களில் வயது முதிர்ந்தவர் திருநாவுக்கரசர். இவருக்கு, கயிலைநாதன் முனிவர் வடிவில் தோன்றி, 'கயிலைநாதனை திருவையாற்றில் காண்க' என்று அருளினார். ஆடி அமாவாசையன்றுதான் கயிலைத் திருக்காட்சியை, அப்பர், திருவையாற்றில் கண்டுகளித்ததாகப் புராணம்.

**– கே.வி.ஜானகிராமன், மைலாப்பூர்**

ஆடிப்பெருக்கு அன்று நொப்பும், நுரையுமாய் இரு கரைகளையும் உடைத்துக்கொண்டு பொங்கி வருவாள் காவிரி அன்னை. வெற்றிலைப் பாக்கு, பழம், பூ இவற்றை நைவேத்யம் செய்து, காதோலை, கருகமணி, கறுப்பு வளையல்களைக் காவிரியில் அர்ப்பணித்து, கற்பூரம் காட்ட வேண்டும். தஞ்சை மாவட்டக்காரர்களின் தொன்மையான வழிபாடு இது.

- பானுமதி ராதாகிருஷ்ணன்,
பாபநாசம்



# ஆடி அமர்க்களம் 64!



ஆடி மாதத்தில் சூரியன், சந்திரனின் ஆட்சி பெற்ற கடக வீடான கடக ராசியில் சஞ்சரிக்கின்றான். சிவ அம்சமான சூரியனும், சக்தியின் அம்சமான சந்திரனும் ஒன்று சேருவதால் ஆடி அமாவாசை சிறப்பாகக் கருதப்படுகிறது.

**- கே.வி.சீனிவாசன்,**
**திருவெறும்பூர்**

பித்ருக்களை முன்னிட்டு செய்யப்படும் ஆடி அமாவாசை விரதம் அன்று படையலை முடித்துவிட்டு, யாராவது இருவருக்கு வீட்டில் விருந்து கொடுப்பது நல்லது. விருந்தினர்கள் உண்டபின் நாமும் உண்டு விருந்தினர்கள் ஆசிகளைப் பெறுவதால், முன்னோர்கள் நம்மை வாழ்த்திய நிறைவு உண்டாகும்.

**- கே. ராஜேஸ்வரி,**
**மணப்பாறை**






**நா**கர்கோவிலிருந்து எட்டுக் கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது ஆதிச்சபுரம். இங்குள்ள ஔவையார் கோயிலில் ஆடி செவ்வாய்க் கிழமைகளில் கூழும், கொழுக்கட்டையும் நைவேத்யம் செய்வார்கள்.

– ஆர். மீனாட்சி,
திருநெல்வேலி டவுன்

பண்டிகை நாட்களில் சுமங்கலி மற்றும் கன்னிப் பெண்களுக்கு நலங்கு இட்டு, வெற்றிலைப் பாக்கு கொடுப்பார்கள். மஞ்சள், கிருமிநாசினியாக இருந்து கால்களில் பித்த வெடிப்புக்கு இடம் கொடாமல் செயல்படும். ஆடி மாதப் பிறப்பிலிருந்தே தொடங்கும் பண்டிகை நாட்களில் மஞ்சள் பூசுவதை எல்லோரும் பின்பற்றலாமே!

- ஆர். பிருந்தா, மதுரை





'கூழ் ஊற்றுதல்' என்பது, அம்மனுக்கு உகந்த ஆடி வெள்ளியன்று மட்டுமே நிகழ்த்தப்படுகிறது. நாட்டில் மழை பெய்யவும், தொற்று நோய்கள் பரவாமல் இருக்கவும், சமூகத்தினர் கூடி செய்யப்படும் இந்தப் பிரார்த்தனையால் நாடு சுபிட்சம் பெறும். சிலர் நேர்த்திக் கடனுக்காகவும் செய்வதுண்டு.

– மு.பாக்கியம், சின்னமனூர்

மதுரை மீனாட்சி அம்மன் கோயிலைச் சுற்றி தமிழ் மாதப் பெயர்களில் வீதிகள் அமைந்துள்ளன. ஆனால், ஆடி வீதி மட்டும் கோயிலுக்குள்ளேயே அமைந்துள்ளது. இங்கு ஆடி மாதம் பத்து நாட்கள் நடக்கும் திருவிழாவுக்கு 'ஆடிமுளை கொட்டு' என்று பெயர்.

- அ. யாழினி பார்வதம்,
கே.கே.நகர்



# ஆடி அமர்க்களம் 64!



**நா**கர்கோவில் வடசேரிக்கு அருகில் உள்ளது கிருஷ்ணன் கோயில். இத்திருத்தலத்தில் உற்சவ விக்கிரகம் குழந்தை வடிவில் உள்ளது. கிருஷ்ண ஜெயந்தியன்று, அர்த்தஜாம பூஜை முடிந்ததும், தொட்டிலில் பட்டுத் துணியில் படுக்க வைத்து நாதசுரத்தில் தாலாட்டு இசைப்பது மிகவும் விசேஷமாகும்.

**– ஆர். ஜெயலக்ஷ்மி, திருநெல்வேலி**

‘விழிக்கே அருளுண்டு அபிராமவல்லிக்கு’ என்கிற 79வது அபிராமி அந்தாதியை அபிராமி பட்டர் பாடினார். அப்போது, தன் தடாங்கத்தை வானவெளியில் வீசி, அமாவாசையன்று, முழு நிலவைக் காட்டி அருள் புரிந்தாள் அம்பிகை. அந்நன்னாள் ஆடி அமாவாசை தினம்தான். இன்றும் திருக்கடையூரில் ஆடி அமாவாசையன்று ‘நிலாத் திருவிழா’ நடைபெறுகிறது.

– சீனு சந்திரா, மைலாப்பூர்



# ஆடி அமர்க்களம் 64!



**ஸ்ரீ**வில்லிப்புத்தூரில், ஒவ்வொரு ஆண்டும் ஆடி மாதம், காணிக்கை, குத்தகையாக வரும் நெல்லை அளந்து வரவு செலவு கணக்கைத் தாயாரிடம் ஒப்படைக்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. இந்தக் கோயிலின் முதல் தர்மகத்தாவாகப் பெரியாழ்வார் தொடங்கிய வழக்கம், இன்றும் தொடர்கிறது.

**– வரலக்ஷ்மி முத்துசாமி,**
**கிழக்கு முகப்பேர்**

வரலக்ஷ்மி விரதத்தன்று, ஸ்ரீமகாலக்ஷ்மியை மனமார வரவேற்று, பிடித்த உணவு வகையைப் படைத்து, அவள் மகிழும்படியான காரியங்களைச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால், தன்னைக் கொண்டாடிய வீடு, அஷ்ட ஐஸ்வர்யங்களோடு இருக்க வேண்டும் என்று அருள்வாள்.

- கிரிஜா ராகவன், கோவை



# ஆடி அமர்க்களம் 64!



**கிராமத்தில் கன்னிப் பெண்கள் குளிக்கச் செல்லும்பொழுது பாடும் பாட்டு**

* ஆடிச் செவ்வாய் தேடி குளி,
அரைத்த மஞ்சளைப் பூசி குளி
அரைக்காத மஞ்சளை எனக்குத் தா!
தொடுத்த பூவை நீ வைத்துக்கோ!
தொடுக்காத பூவை எனக்குத்தா!
மாடப்புறா மஞ்சள் அரை!

* நாழிக் கிணற்றிலே குளித்து வா!
நாராயண ஸ்வாமியைத் தொழுது வா!
கோயில் கிணற்றிலே குளித்து வா!
கோபாலஸ்வாமியை ஜெயித்து வா!
மாடப்புறா மஞ்சள் அரை!

**- ஹெச்.எஸ்.லக்ஷ்மி, திருவான்மியூர்**

ஆடி மாதத்தில் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஆண்டாளுக்கு, ரோஜாப்பூ மாலை சாத்தி வழிபட்டால் திருமணம் கைகூடும். கண்ணாடி வளையல்களை மாலையாகச் சாத்தி வழிபட்டால் மழலை பாக்கியம் மறு வருடமே உண்டாகும்.

– வசந்தா வேணுகோபால், கோடம்பாக்கம்



# ஆடி அமர்க்களம் 64!



ஆடி மாதம் சுக்லபக்ஷ பஞ்சமியன்று 'நாக பஞ்சமி விரதம்' அனுசரிக்கப்படுகிறது. அனந்தன் என்கிற நாகமாக இருந்து, இப்பூமியைக் காக்கும் ஸ்ரீமந் நாராயணனைக் குறித்து நோற்கும் விரதமாகும். அன்றைய தினம் கோயில்களில் இருக்கும் அரசமரத்தடி நாகர்களுக்குப் பால் ஊற்றிப் பூஜித்தால் மக்கட்பேறு உண்டாகும் என்பது ஐதிகம்.

– கே. ராஜலக்ஷ்மி, நங்கநல்லூர்

ஆடிப்பூரத்தில் தோன்றியவர் வீரபத்ரன். தட்சன் வேள்வியில் உக்கிரமாகத் தோன்றிய இவருக்கு, வெற்றிலை மாலை சாத்தி கோபத்தைத் தணித்தால் வெற்றியையும் செல்வத்தையும் தருவார்.



- எம். ஜெய்ஸ்ரீ,
சேலம்



முருகனுக்கு முகம் ஆறு, வலது கண் ஆறு, இடது கண் ஆறு, நெற்றிக் கண் ஆறு, வலது புயம் ஆறு, இடது புயம் ஆறு, முருகனின் மந்திர எழுத்து ஆறு, ஆறாவது கிழமையாகிய வெள்ளிக்கிழமை, முருக வழிபாட்டுக்குரிய சிறப்பு நாள். ஆறு கார்த்திகைப் பெண்கள் பாலூட்டியதால் அறு மீன்களின் நட்சத்திரமாகிய கிருத்திகை சிறப்பு வழிபாட்டுக்குரிய நாள். அதிலும் ஆடிக்கிருத்திகை மிகவும் விசேஷம்.



– எஸ். பானுமதி சிவராம், மதுரை – 14

பதினெட்டாம் பெருக்கு அன்று காவிரித்தாயை காவிரிக் கரையில் வழிபட முடியாவிட்டாலும், வீட்டில் கிணறு, குழாய் இருந்தால் அதற்குச் சந்தனம் குங்குமம் இட்டு சித்ரான்னம் நைவேத்யம் செய்து வழிபடலாமே!

– ஆர். அனுராதா ரவீந்திரன்,
திருச்சி





## ஆடிக்கூழ்

**தேவையானவை :** பச்சரிசி - 100 கிராம், உளுத்தம் பருப்பு - 25 கிராம், பாசிப்பருப்பு - 400 கிராம், வெல்லம் - ½ கிலோ, நெய் - 100 கிராம், ஏலப்பொடி - சிறிதளவு

**செய்முறை:** பச்சரிசியை வறுத்துக் கொள்ளவும். பருப்புகளைத் தனித்தனியாக வறுத்து மிக்ஸியில் பொடியாக்கி, குக்கரில் போட்டு, பச்சரிசியுடன் வேக வைக்கவும். வெல்லத்தை இளம் பாகு காய்ச்சி அதில் ஊற்றிக் கிளறவும். நெய்யை ஊற்றி ஏலக்காய்ப் பொடி போட்டு, அடி பிடிக்காமல் கிளறி, கூழ் போல் ஆனதும் இறக்கவும். தொட்டுப் பார்த்தால் கையில் ஒட்டாமல் இருக்க வேண்டும்.

**- சாந்தா கண்ணப்பன், மதுரை - 2**

ஆடி மாதத்தில் கருட பஞ்சமி வருகிறது. அது, மஞ்சள் பொடியினால் அம்மன் முகம் போல் செய்து, உடன் பிறந்த சகோதரர்கள் நன்றாக இருக்க வேண்டி கொண்டாடப்படும் ஒரு பண்டிகை. அன்று, தன்னைவிட பெரியவர்களிடம் ஆசிகளைப் பெறுவதோடு, சிறியவர்களுக்கு அன்பாகப் பணமோ அல்லது புத்தாடையோ தருவது வழக்கம்.

- கு. லதா, கும்பகோணம்.



# ஆடி அமர்க்களம் 64!



உத்தமர் கோயில் பிச்சாண்டார் கோயிலில் இருக்கிறது. இங்கு அருள் பாலிக்கும் சௌந்தர்ய பார்வதி அம்மனுக்கு, ஆடிப்பூரத்தன்று முளை கட்டிய பயிறை வயிற்றில் வைத்துக் கட்டி, பின்னர் பிரசாதமாக விநியோகிக்கப்படுகிறது. பிரசாதத்தைப் பக்தியுடன் சாப்பிட்டால் குழந்தை பாக்யம் இல்லாதவர்களுக்கு நிச்சயம் சந்தான பாக்யம் ஏற்படுகிறது.

– காருண்யா சிவகுமார், வேளச்சேரி

திருப்பூந்துருத்தியில், கௌசிக முனிவர் இறைவன், இறைவிக்கு கங்கை நீரால் அபிஷேகம் செய்து, தானும் நீராடி புனிதமடைந்து இறைவனடி சேர்ந்தாராம். ஆகையால், இத்தலம் பிதுர் சாபவிமோசனங்களுக்கு உரிய தலமாகப் போற்றப்படுகிறது. ஆடி அமாவாசையில் பலர் இப்பகுதியில் வந்து பயனடைகிறார்கள்.

**- கே.என். மகாலிங்கம்,**
**பாண்டிச்சேரி**





கேரளாவில் ஒரு சமூகத்தினர் ஆடி வெள்ளியன்று தவிட்டு அப்பம் செய்து சாப்பிடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். சுத்தமான தவிட்டுடன் வெல்லம் சேர்த்து, அப்பம் சுட்டு குடும்பத்தினர் அனைவரும் வட்டமாக அமர்ந்து ஒன்றாக உண்பார்கள். இந்த அப்பத்தை 'கனகப் பொடி' என்று கூறுகிறார்கள்.

– எஸ். சுரேந்திரன்,
மௌலிவாக்கம்

ஆடி மாதத்தில், கொழும்பு நகரில் 'ஆடிவேல்' எனப்படும் பண்டிகை விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. இந்து மக்களால் நடத்தப்படும் குதூகலமான இந்த 'ஆடிவேல்' விழா நான்கு நாட்களுக்கு விமரிசையாக நடைபெறுகிறது.

– பி. ரமாதேவி,
கோபாலபுரம்



# ஆடி அமர்க்களம் 64!



**வி**நாயக சதுர்த்திக்கு முதல்நாள் 'சுவர்ண கௌரி' விரதம். அன்று, பதினாறு முடிச்சுகள் போட்ட மஞ்சள் கயிறை, கணவர் கைகளினால் கட்டிக் கொண்டு அனைவருக்கும் பிரசாதம் கொடுத்தல் வழக்கம். பதினாறு ஆண்டுகள் இந்த விரதம் மேற்கொண்டால் மிகவும் மேலான நற்பலன்களைக் கொடுக்கும்.

**- மல்லிகா அன்பழகன்,**
**கே.கே.நகர்**

**பி**த்ருக்கள் சாபம் பிள்ளைகளைத் தாக்கும் என்பது யாவரும் அறிந்ததே. பலர் மாதத் தர்பணங்களைச் சரியாகச் செய்வதில்லை. சித்திரை, ஆடி, ஐப்பசி, தை மாதங்களிலாவது அவசியம் செய்ய வேண்டும். இதனால் பித்ருக்கள் திருப்தி அடைவார்கள்.

– எஸ்.பி.பாலு, திருச்சி





ஆடி மாதத்தில் காற்று பலமாக வீசும். இதனால் நோய்க் கிருமிகள் அதிகமாகப் பரவ வாய்ப்புண்டாகிறது. இந்த நோய்க் கிருமிகளை அழிப்பதற்காகதான் விஞ்ஞான ரீதியாக வேப்பிலை ஆடை அணிந்து, தீச்சட்டி எடுத்து மாரியம்மனை பிரார்த்தனை செய்கிறார்கள்.

**- செ. கலைவாணி, ஆலந்தூர்**

ஆடி அமாவாசைக்குப் பிறகு வரும் சதுர்த்தியன்று, நாகதேவதைக்குப் பூஜை செய்ய வேண்டும். பிறகு, அந்தப் புற்றிலிருந்து மண் எடுத்து வந்து, அந்த மண், புஷ்பம் அட்சதையினால், கருட பஞ்சமியன்று நாகர்களுக்கு வீட்டில் பூஜை செய்ய வேண்டும். இதை 'அண்ணன் தம்பி' பண்டிகை என்றும் சொல்வார்கள்.

**- லதா காமேஷ், அடையாறு**



# ஆடி அமர்க்களம் 64!



ஆண்டாள் அவதரித்த ஆடிப்பூர நட்சத்திரத்தை ஒட்டி ஸ்ரீவில்லிப்புத்தூரில் ஒன்பது நாட்கள் ஆடி உற்சவம் நடைபெறும். எல்லாமே ஒன்பது என்கிற கணக்கில் வருகிறாற்போல் உயரமான தேரில் ஒன்பது சக்கரங்கள், ஒன்பது கட்டுக்கள், ஒன்பது வடங்கள் என்று அமைந்திருக்கும்.

**- பி. ஜானகி அம்மாள், சென்னை**

ஆடி மாத சதுர்த்தியன்று நாக சதுர்த்தி விரதம் மேற்கொள்ளப்படுகிறது. அன்றைய தினம் அரச மரத்துக்கும், வேப்ப மரத்துக்கும் திருமணம் செய்து வைக்கப்பட்ட இடத்தில் பிரதிஷ்டை செய்துள்ள பிள்ளையாருக்கும், நாகருக்கும் பூஜை செய்ய வேண்டும். அன்று பாலும் பழத்தையும் மட்டும் ஆகாரமாக உண்டால் சர்ப்ப தோஷங்கள் விலகும்.

– **கே. ரோஷிணி, போத்தனூர்**






**வ**சுதேவர் - தேவகியின் எட்டாவது சிசுவாக ஸ்ரீகிருஷ்ணன் பிறந்த நேரத்தில், கம்சன் ஒரு துர் சொப்பனம் கண்டு பற்களை 'நறநற' என்று கடித்தானாம். அந்த 'நறநற' சப்தம் அவதாரமான மங்கள ஒலியாக ஏற்கப்பட்டு, அதன் காரணமாக கரகரப்பான சீடை, முறுக்கு இவைகளைக் கண்ணனுக்கு நைவேத்யம் செய்கிறோம்.

- மனோரமா கோபிநாத், பெங்களூரு

கும்பகோணத்திலிருக்கும் மகாமகக் குளம் மிகவும் சக்தி வாய்ந்ததோடல்லாமல் பிரசித்தி பெற்றதும்கூட. முப்பத்து முக்கோடி தேவர்களும் நீராடும் அந்தக் குளத்தில் ஆடிப்பெருக்கு அன்று, காவிரி நதியானது குளத்தின் பதினெட்டு படிகளைத் தாண்டி, பக்தர்களின் நைவேத்யங்களை ஏற்றுக் கொள்வது மிகவும் வியப்பான காட்சி!

– சேஷம்மாள், கும்பகோணம்



## அரிசிப் புட்டு

**தேவையானவை :** பச்சரிசி - 2 கப், வெல்லம் - 1 கப், ஏலப்பொடி - 1 டீஸ்பூன், தேங்காய்த் துருவல் - 1/2 கப், நெய் - 1 டீஸ்பூன்.



**செய்முறை :** பச்சரிசியை ஊற வைத்து, மிக்ஸியில் ரவையாகப் பொடித்துக் கொள்ளவும்.

பிறகு, தண்ணீர் தெளித்து, சிறிது உப்பு போட்டு, பிடி கொழுகட்டைப் போல் பிடித்து ஆவியில் வேகவிட்டு எடுத்துக் கொள்ளவும்.

வெல்லம், சிறிது தண்ணீர், தேங்காய்த் துருவல் சேர்த்து, இளம் பாகில் அரிசி ரவை, நெய், ஏலப்பொடி சேர்த்துக் கிளறவும். அரிசிப் தயார்.

***மதுரை வாசகியின் முகவரி தேவை***

ஆடி மாத ஞாயிற்றுக்கிழமையன்று அம்மனுக்குக் கூழ் ஊற்றுவது வழக்கம். அதற்காக வெள்ளிக்கிழமையன்றே கேழ்வரகைச் சுத்தம் செய்து, மிஷினில் அரைத்து விடுவார்கள். சனியன்று மாவைக் கரைத்து புளிக்க வைத்து, ஞாயிறு அன்று கூழ் செய்து, அம்மனுக்குப் படைத்து பகல் பன்னிரண்டு மணியளவில் விநியோகிப்பார்கள்.

– ஜெயா, தரமணி



# ஆடி அமர்க்களம் 64!

**சே**லத்தில் உள்ள ஊர்க்காவல் தெய்வமாகப் போற்றப்படும் கோட்டை அம்மன் கோயிலில், ஆடிமாதத்தில் பூச்சொரி விழா



பதினைந்து நாட்கள் நடைபெறுகிறது. பதினைந்தாம் நாள் உருளுதண்டம் என்கிற வேண்டுதலைச் சிறுவர் முதல் பெரியவர் வரை நிறைவேற்றுகிறார்கள். பொருட்காட்சி, வாணவேடிக்கை, அம்மன் திருவீதி உலா என்று ஊரே அமர்க்களப்படும்.

**– எஸ்.கே. வாணி, சேலம்**

**ம**யிலை முண்டகக்கன்னி அம்மன் கோயிலில், ஆடி மாதம் பொங்கல் வைப்பது மிகவும் விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது. அன்று பொங்கல் வைக்க உபயோகப்படுத்தப்படும் வரட்டியின் சாம்பல் மட்டுமே விபூதிப் பிரசாதமாகத் தரப்படுகிறது.

- ஓய்.வசந்தி, மயிலை





ஆடி மாதத்தில் இராமனுக்கும் இராவணனுக்கும் யுத்தம் நடந்தது. இராவணன் கொல்லப்பட்டான். எனவே, இம்மாதம் சிறப்புப் பெற்றது.

ஆடி மாதம் தேவர்கள் உறங்கும் காலமாதலால், இம்மாதத்தில் சுபகாரியங்களை விலக்குகிறார்கள்.

**- அனந்தலக்ஷ்மி முகுந்தன்,**
**சென்னை**

**தே**னி மாவட்டத்திலுள்ள சின்னமனூர் என்கிற ஊரில் சுயம்புவாகப் புற்றில் குடிகொண்ட அன்னை ஸ்ரீநாகேஸ்வரி, ஸ்ரீநாகலட்சுமி திருக்கோயில் உள்ளது. ஆடி மாதம் முழுவதும் விழாக்கோலம் பூணும் இக்கோயிலில் காத்து, கருப்பு சேஷ்டைகளுக்கு நிவர்த்தி ஏற்படுகிறது.

– ஜி. லக்ஷ்மி அம்மாள்,
சின்னமனூர்



# ஆடி அமர்க்களம் 64!



சேலத்தைச் சுற்றியுள்ள எட்டுப்பட்டி மாரியம்மன் ஆலயங்களிலும் ஆடித் திருவிழா மிகவும் விசேஷம். நாள்தோறும் அம்மன் ஊர்வலம், புஷ்பப் பல்லக்கு, நையாண்டி மேளம், நாதஸ்வரக் கச்சேரி, பட்டிமன்றம், இன்னிசை அரங்குகள் எனத் தூள் பறக்கும். 'வண்டி வேடிக்கை' நிகழ்ச்சி, குகை மாரியம்மன் ஆலயத்தில் தனிச் சிறப்பிடம் பெறும். தங்கள் வண்டி வேடிக்கை நிகழ்ச்சிகளுக்கே பரிசு என்ற ஆர்வத்தில், ஆயிரக்கணக்கான ரூபாய் களைக்கூட இங்கு தாராளமாகச் செலவு செய்வார்கள்.

– இரா.கணேசன், சேலம்

ஆடி மாதம் முதல் நாள் புதிதாகத் திருமணமான ஜோடிகள், பெண்ணின் தாய் வீட்டுக்கு விருந்துக்குச் செல்ல வேண்டும். பெண் ஆடி மாதம் முழுவதும் தாய் வீட்டில் இருப்பதே சிறப்பு. குழந்தை, சித்திரையில் பிறக்கும் என்பதால் ஆடி மாதத்தில் பெண் உண்டாகக் கூடாது என்பதற்காகவே ஏற்பாடு.

– எஸ்.சுபா, சென்னை



# ஆடி அமர்க்களம் 64!

Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN / CC (S) DN / 170 / 09 - 11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 103 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka. Supplement to the Mangayar Malar August 2009 issue



சக்தியானவள் சிவனிடமிருந்து பிரிந்ததைக் கண்ட 'ஆடி' என்கிற அசுரன் பார்வதியைப் போல் உருமாறி, சிவனை அடைய வந்தாள். உண்மையை அறிந்த ஈஸ்வரன், அவனுடன் வதம் செய்து மாய்த்தார். அதனால்தான் புதுமணத் தம்பதிகள் ஆடியில் சேர்ந்து இருப்பதில்லை என்று கூறப்படுகிறது.

**- கல்யாணிஹரண், வத்திராய்ப்பு**

தொகுப்பு : **மாலதி சந்திரசேகரன்**

கார்டூன்ஸ் : **பிள்ளை**

பெற்றோர்கள் தங்கள் பெண்ணுக்குத் திருமணம் நடக்கவில்லையே என்று கவலைப்படுகிறார்கள். அவர்களோ அல்லது கல்யாணம் ஆக வேண்டிய பெண்ணோ கீழ்க்கண்ட ஸ்லோகத்தைத் தினமும் இருபத்தொரு முறை சொன்னால் விரைவில் திருமணம் நடக்கும். சுமங்கலிகள் சொன்னால் மாங்கல்ய பலம் கூடும்.

*''மங்களே மங்களாதாரே;*
*மாங்கல்யே மங்களப்ரதே!*
*மங்களார்த்தம் மங்களேசி*
*மாங்கல்யம் தேஹிமே ஸதா!''*

- ஆர்.எஸ்.லக்ஷ்மி,
மதுரை

''மங்களே
மங்களாதாரே:



# விரைவில் கல்யாணம் கைகூட...

Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN/CC(S)DN/170/09-11 · Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN/CC(S)DN/103/09-11 · Registered as a Newspaper in Srilanka

# ஸ்வஸ்திக் கோலம்!



17-17 வரிசை (நேர்புள்ளி)

சரோஜா ராஜரத்தினம், சென்னை.